## EDITOR'S PREFACE.

# விவேகசிந்தாமணிப் பிரசுரங்கள்.

## முகவுரை.

தமிழ்ப்பாஷை சிறந்ததும் இனியதுமென்று அப்பாஷாபண்டிதர்கள் அதைப்பற்றிப் பேசுங்கால் பெருமை கொண்டாடினும், அப்பாஷைப்பயிற்சி தற்காலம் தமிழைச் சுயபாஷையாக உடையாருள்ளும் விர்த்தியடையாமல் க்ஷீணித்துவருகிறவிஷயம் யாவரும் அறிந்ததேயாம். யாவரும் அறிந்தும், அப்பாஷையை அநாதரவு செய்வது பிசகென்று பல்லோர்கூறியும், அதையாதரித்து அப்பாஷையின் பயிற்சியை விர்த்திசெய்யவும், அதன்மூலமாக உபயோகமான அறிவைச்சனங்களுக்குள் பரவச்செய்யவும், பலர் ஒன்று சேர்ந்து பெருமுயற்சி செய்து பயன் விளைவித்ததைக்காணோம்.

தற்காலம், உபயோகமானதும்ஊதியமளிப்பதுமான அறிவு, பெரும்பாலும் ஆங்கிலேயபாஷை மூலமாகவே பெறுவது எளிதாகவிருக்கின்றது. ஆகையால் இங்கிலீஷ் படித்தவர்கள் அப்பாஷையிலுள்ள புஸ்தகங்களையே மேன்மேலும் வாசிக்கப்பிரியம்கொண்டவர்களாகிறார்கள். தமிழ்ப்பாஷைப்பயிற்சி பலவிதத்திலும்அசட்டை செய்துவிடப்பட்டதால், அப்பாஷையில் அவர்களுக்குச் சாதாரணமாய்த் தேர்ச்சியின்றிப் போய்விட்டது. இங்கிலீஷ்படிக்காதஜனங்களுக்கு நித்தியப்படி ஜீவனத்திற்குபயோகமான அறிவு பலவகையில்வேண்டிய தவசியமாயிருந்தும், சுயபாஷையில் அவர்கள் தாமாக வாசித்துக் கிரகிக்கத்தக்க உபயோகமான புஸ்தகங்கள் அதிகமின்மையால், அவர்கள் அறிவையடைய

ஆவல்கொண்டும் ஏற்ற வழியின்றித் தவித்துச் சும்மா இருந்துவிடுகிறார்கள். இப்படித் தீராப்பொறியாகச் சும்மாவிருக்கவேண்டி நேரிடுவது வழக்க பலத்தால் சோம்பற்றனமாகமாறி அறிவையடைய வேண்டு மென்கிற ஆசையே இல்லாமற் போகிறது.

இவ்வாறாக, இங்கிலீஷ்படித்தவர்களுக்கும் தமிழ்ப் படித்தவர்களுக்கும் சாதாரணமாய்த் தமிழ்ப்பாஷை தற்காலத்திற்குபயோகமான அறிவையூட்டக் காரி யத்தில் பிரயோசன மற்றதாகப் போகிறது. இதனால் நமது ஜனங்களுக்கும் தேசத்திற்கும் விளையும் தீங்கு கள் அற்பசொற்பமல்ல. அவற்றைப்பற்றிப் பேசப்பு கின் மிகப்பெருகும். படித்தவர்களெல்லார்க்கும் உப யோகமான அறிவைப்பரவச்செய்யப் பிரயோசனம லாத ஸ்திதியிலிருக்கும் பாஷை, மற்றெல்லாவ லும் உபயோகத்தையும் ஊதியத்தையும் பெரித நாடி நடக்கும் 19-ம் நூற்றாண்டினிறுதியான இக லத்தில், சீக்கிரம் கவனிக்கப்படாவிடிற் சீரழிந்து றப்புக்கெட்டுச் சிதறிப்போகுமென்பதற்குக் கேட் னேன்! தமிழ்ப்பாஷை சீரழிந்து சிதறிப் போகா ருக்க அவற்றிலுள்ள ஆதிநூல்களையும் சிறந்த கிரந் களையுமழிந்துபொகாமற் காப்பாற்றவேண்டிய தவ மென்பதிற்றடையில்லை. அத்துடன் அப்பாஷை ஜ னங்களால் படித்துக்கொண்டாடப்பட வேண்டுமோ னல், தற்கால அறிவையூட்டத் தகைமையுடையதாக அதைச்செய்யவேண்டியதும் அவசியமேயாம்.

இந்த அவசியத்தை உன்னித் தமிழ்ப்பாஷையைச் சனப்பிரீதிக்கிசைந்ததாகச்செய்து விர்த்திக்குக் கொ ண்டுவர இரண்டு அம்சங்களிருக்கவேண்டியது அத்தி யாவசியகம். ஒன்று : இங்கிலீஷில் கற்றறிந்தாராயி

ருப்பதுடன் தமிழிலும் தேர்ச்சிபெற்றோர் சாதாரண ஜனங்களுக்குப் புலப்படு நடையில் உபயோகமான விஷயங்களை எழுதுவதோடு, தமிழிற்பயிற்சியில்லாத இங்கிலீஷ் படித்தவர்கள் அப்பாஷை பயின்று அதில் ஒருவாறு தேர்ச்சியடைய வகையும் காட்டி எழுதவேண்டியது முதலவசியம். அவர்கள் எழுதினவை ஒரு சிறு புஸ்தகமாகவோ பிரசங்கமாகவோ வெளியிடப்பட்டு, மிகவும் நெருங்கி வரையறுக்கப்பட்ட சிறவட்டமான சிலர் நடுவே மட்டும் வழங்கி அமுங்காது, படித்தோர் பாமரர் யாவராலும் படிக்கப்பட்டு நாடெங்கும் வழங்கிவரத்தக்க வசதிவேண்டியதிரண்டாவதவசியம். அத்தியாவசியகமான இவ்விரண்டு முக்கியாம்சங்களும் ஒருங்கு பொருந்தியிருந்தால்தான், நாடெங்கும் அறிவு பரவி, கற்றோரும் மற்றோரும் கருத்திற் கலந்து, நமது தேசத்தார் தமக்குள் தாமே பிரிவினையடையாது, கற்றவர் போனவழி மற்றவர் பின்தொடரவும், பின்தங்கினோரை முன் செல்லவைக்கக் கற்றவர் கவனித்துழைக்கவுமாக இப்படி எல்லவரும்ஒருமித்து முன்நகரநம்மவர் ஜாதிமொத்தத்தில்சீரடைந்து முன்னுக்கு வர வழியுண்டாகும். இந்த இரண்டு அம்சங்களையும் பொருந்த அமைத்து மேலே சொன்ன விதம் ஒரு வழி பிறப்பிக்கவேண்டுமென்றுதான் "அறிவைப் பரவச் செய்யும் ஏற்பாடு"* ஒன்று தயார்செய்து அவ்வேற்பாட்டின்படி 1892ஸு மேமீ முதல் விவேகசிந்தாமணி என்னும் பத்திரிகை நடத்தப்பட்டுவருகிறது.

இப்பொழுது அவ்வேற்பாட்டிற்குஇசையவே,மேற்படி விவேகசிந்தாமணியில் வெளியான விஷயங்க

* *Vide* Editor's Introductory article in Vol. I, No. 1 of the Viveka Chintamani for May 1892.

ளில் முக்கியமானதும் நிரந்தர உபயோகமானதுமான அரிய விஷயங்களைத் திரட்டி "விவேகசிந்தாமணிப் பிரசுரங்கள்" என்னும் பொதுப்பெயரிட்டுத் தனிப் புஸ்தகங்களாக அச்சிட்டு எல்லாருக்கும் உபயோக மாகும்படி பிரசுரித்துவரத் துவக்கியிருக்கிறோம்.

இத்தலைப்பெயரின்கீழ்ப் பிரசுரிக்கப்படும் புஸ்தகங்கள் யாவரும் விசேஷமாக விரும்பத் தக்கவைகளானதுபற்றிச் செலவையும் சிரமத்தையும் கருதாது நல்ல மாதிரியாகத் தளமான காகிதத்தில் அச்சிட்டு, நாணயமான உயர்ந்த கட்டடம் செய்து வெளியிட்டுவரத் தீர்மானித்திருக்கிறோம்.

தமிழ்ப் பாஷாபிவிர்த்திக்கு இடையூறாகவுள்ள குறைகளில், ஜனங்கள் சாதாரணமாக வாசிப்பதற்கினிமையான கிரந்தங்களில்லாக் குறையுடன், நல்ல மாதிரியில் நாணயமாக அச்சிட்டுக் கண்ணுக்கு ரமணீயமான ரூபத்தில் புஸ்தகங்கள் வெளியிடப்படாமலிருப்பதும் ஒரு பெருங்குறையென்பது மனப்பூர்வமாய் நம் புத்திக்குப்பட்ட விஷயமாயிருப்பதால், அக்குறையை நிவர்த்திக்க நம்மாலான முயற்சி செய்துளோம்.

ஜனங்கள் ஏராளமாக இப்புஸ்தகங்களை வாங்கி வாசித்து ஆதரிப்பார்களானால், இன்னும் அநேக புஸ்தகங்கள் வெளியிடுவது சாத்தியமாகும்.

ஆகையால் இவ்வேற்பாட்டின் பிரயோஜனத்தை யுணர்ந்த விவேகிகள் யாவரும், இத்தலைப்பெயரின்கீழ் வெளியாகும் புஸ்தகங்களை யெல்லாரும் வாங்கி வாசிக்கும்படி போதிப்பார்களென நம்புகிறோம்.

1896. C. V. S

Pandit V. SAMINATHAIYAR of the Kumbaconum College on the Vivekachintamani and 'Vivekachintamani Series' of Publications.

---

ம-ா-ா-ஸ்ரீ, ஸி. வி. சாமிநாதையரவர்கள் பலவருடங்களாக மிக முயன்று பதிப்பித்து வெளிப்படுத்திவரும் 'விவேகசிந்தாமணி' என்னுந் தமிழ்ப் பத்திரிகையை உடனுடன் பெற்றுப் படித்துவருகிறேன். இஃது இக்காலத்தார்க்கு வேண்டுவனவாகிய பலவிஷயங்களைப் புலப்படுத்தும எளிய தமிழ் நடையில் அமைந்திருத்தல், யாவர்க்கும் உபகாரமாக இருக்கின்றது. இதைப் படித்தலால், தங்கள் பிள்ளைகளுக்கு மேன்மேலும் அறிவு பெருகி வருகிறதென்று பல கனவான்களும் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆங்கிலேய பாஷையில் தேர்ச்சியடைந்த பலர், தாங்களறிந்த அநேக விஷயங்களை அந்தப்பாஷையிலிருந்து தமிழில் மொழிபெயர்த்து எல்லாருக்கும் பயன்படும்படி இதில் எழுதலும் இக்காலத்துள்ள பலவகை நடைகளையும் அனுசரித்துத் தாமே கற்பித்து அவர்கள் எழுதியிருக்கும் சரித்திர வகைகளும், பிறவும் மிகுந்த மகிழ்ச்சியை விளைவிக்கின்றன. ஆதலால், இவ்வண்ணம் உலோகோபகாரமாகப் பலரும் எழுதும்படி மிக முயன்று பாடுபட்டு உழைத்துவரும் இந்த ஸி. வி. சாமிநாதையரவர்களுடைய முயற்சி மிகப் பாராட்டற்பாலது. இப்பத்திரிகை விஷயத்தில் இவர்களுக்குச் சிறிதுந் தளர்ச்சியுண்டாகா வண்ணம் இன்னுமுள்ள ஆங்கிலேய பாஷா பண்டிதர்களும் தமிழ்ப்பண்டிதர்களும் அன்புவைத்து அடிக்கடி அரிய

விஷயங்களை எளிய தமிழ் நடையில் எழுதி இப் பத்திரிகைவாயிலாக வெளிப்படுத்துவார்களென்றும், இத்தமிழ் நாட்டுள்ள கனவான்கள் பலரும் இப் பத்திரிகையை யங்கீகரித்து ஊக்கமளிப்பார்களென் றும் உறுதியாக நம்புகிறேன்.

அன்றியும் சென்ற சில வருஷங்களாக "விவேக சிந்தாமணிப் பிரசுரங்கள்" என்று தலைப்பெயரிட்டு இவர்கள் வெளிப்படுத்திய புத்தகங்களும் பார்க்கப் பட்டன. அவைகள் இத்தமிழ் நாட்டுள்ள பாடை சாலைகளில் படிக்கும் மாணாக்கர்களுடைய தகுதிக் கேற்ப வரையறுத்துச் செப்பஞ்செய்து பாடமாக வைக்கப்படின், மாணாக்கர்களுடைய அபிவிர்த்திக்கு நிரம்ப நன்றாக இருக்குமென்று எண்ணுகிறேன்.

கும்பகோணம் காலேஜ், 1—2—98. | வே. சாமிநாதையன், *Tamil Pandit.*



The Hon'ble Mr. Justice Subramania Iyer, C.I.E., Dewan Bahadhur.

*I have taken interest for some years in the work which Mr. Swaminathaier is doing for the improvement of Tamil journalism and literature. His efforts deserve every encouragement and I trust he will obtain it at the hands of those who are in a position to give such help. The excellence and usefulness of his publications are now recognised on all hands.*

29th January 1898. | *S. SUBRAMANIEM.*

# CONTENTS.



## *APPENDIX.*

# LIST OF ILLUSTRATIONS.



* By favour of Messrs. LAWTON & Co., Photo-Engravers, Jaffna. All the rest are from Messrs. Cassell & Co., Ld., Ludgate Hill, London.



# மாக்ஷிமைதங்கிய இந்திய சக்கிரவர்த்தினியாகிய விக்டோரியா மஹாராணியவர்கள் சரித்திரம்.



## I.

### ஜனனமும் பால்யப்பருவமும்.

பலவளங்களும் நிறைந்து பூமிதேவிக்கு முகதிலகம்போல விளங்குவதும், அநேக நூற்றுண்டுகளாக ஆரியர்களுக்கு வாசஸ்தானமாயிருப்பதுமான நமது பரதகண்டத்தில், முற்காலத்தில், வீரம், வண்மை, அருள், வாய்மை, நீதி, பொறுமை முதலான அநேக நற்குணங்கள் நிறையப்பெற்று, துஷ்ட நிக்ரக சிஷ்ட பரிபாலனம் செய்து தம்முயிர்போல மன்னுயிர்காத்து மநுநெறி வழுவாமல் செங்கோல் செலுத்திப் பூதவுடம்பழியப் புகழுடம்பு பெற்ற அரிச்சந்திரன், நளன், புரூரவன், முசுகுந்தன், தசரதன் முதலான அநேக சக்கிரவர்த்திகளும், முடிமன்னர்களும், ஒருவர் பின்னொருவராக நெடுங்காலம் உலகம் களிக்க அரசுபுரிந்து வந்தார்களென்று, அநேக கிரந்

தங்களால், நாம் அறிகின்றோம். ஆயினும், பின்பு, நமது துர்ப்பாக்கியத்தால் நம் தேசம் வலியிழந்து பாரசீகர், துருக்கர், அப்கானியர், மொகலாயர் முதலான அநேக அந்நிய தேசத்தாருக்குள்ளாகிப் பெரும்பாலும் அவரது கொடுங்கோலின்கீழ் நெடுங்காலம் ஆலையிற்கரும்புபோலவும், அலையிற்றுரும்புபோலவும், அடிபட்டுத் துயருற்று நம்முன்னோர் மிகவருந்தினார்கள் என்பதும் சரித்திரவாயிலாக நன்றாய் அறிகின்றோம். அம்மம்மா! அல்லாவுதீன், டோக்ளாக், தாமர்லேன், ஒளரங்கசீப், நாதர்ஷா, டிப்பு முதலான எண்ணிறந்த கொடிய அரசர்களாலும் பகைவர்களாலும் நாம் பட்ட கஷ்டங்களுக்குக் கணக்குமுண்டோ? அவற்றை மனத்தால் எண்ணவும் கூடுமோ? வாயால் சொல்லலும் ஆகுமோ? எண்ணிய மனமும் சுடும்; சொல்லிய வாயும் வெந்துபோமே! இவ்வாறு நெடுநாள் வருந்திவந்த நமக்கு, பரம தரித்திரனுக்குப் பணப்புதையல் கிடைத்ததுபோல, நமது ஆரிய அரசாக்ஷியிலும் பன்மடங்கு சிறந்ததாகிய இந்த அங்கிலேய அரசாக்ஷியும், நமது செங்கோல் மன்னர் யாவரிலும் சிறந்து தாய்போல நம்மைப் பரிபாலித்துவரும் விக்டோரியா சக்கிரவர்த்தினியும் வாய்க்கப் பெற்

றது நாம் பல் பிறப்பிலும் செய்த பெரும் புண்ணியத்தின் பயனேயன்றோ? நமது அருமைச்சக்கிரவர்த்தினியின் அரசாட்சியில் நாம் இனிமேலும் அடையக்கூடிய நன்மைகள் அநேகம் இருப்பினும், இதுவரையில் அடைந்த பெரும் பயன்களை எண்ணுந்தோறும் நன்றியுணர்ச்சியால் உள்ளம் கரைந்து கண்ணீர் பெருகி அவரது நற்குண நற்செய்கைகளை நினைத்து ஆனந்தித்துத் துதியாதிருக்கவும் கூடுமோ? இவ்வளவு சிறப்பாக நம்மை ஆதரித்துப் பரிபாலித்துவரும் சக்கிரவர்த்தினியின் குணாதிசயங்களையும் அற்புதமான சரித்திரத்தையும் அறியவேண்டுவது நாம் மேன்மேலும் அவரை வியந்து நேசித்தற்கு இன்றியமையாததன்றியும், அவற்றை அறிய விரும்புவது நம்முள் ஒவ்வொருவருக்கும் இயற்கையாகுமாதலினாலும், அவ்விருப்பத்தைத் திருப்திபண்ண ஒருவாறு என் சக்திக்கியன்ற அளவில் இங்கு முயன்றிடலானேன். இத்தொணைப் பெரியதோர் காரியத்தை மேற்கொண்டு செய்யுங்கால், குன்றக்கூறல் மிகைபடக்கூறல் முதலிய பல குற்றங்களும், சொற்சுவை பொருட்சுவைகளின் பொலிவும் நயமும் சிறிதும் இல்லாமையும், இன்னம் பல குறைவுகளும் இடையிடையே வரக்கூடுமாதலின் இத

னைப் படிக்கும் அறிவுடையோர் நீரைப்பிரித்துப் பாலைமாத்திரம் உட்கொள்ளும் அருங்குணமுடைய அன்னப்புள்ளேபோல, இதில் உள்ள குணத்தைமாத்திரம் கிரகித்து குற்றங்களைக் கவனியாது கைவிடுவாரென்று நம்பி, அவரது நன்மையையும் தாக்ஷண்யத்தையும் பற்றுக்கோடாகக்கொண்டு எழுதத்துணிந்ததையன்றி எனது கல்விசாமர்த்தியங்களால் அவர்க்குப் பயன் விளைவிக்கலாம் என்னும் எண்ணத்தினால் எழுதத்துணிந்ததேயன்று.

நமது விக்டோரியா சக்கிரவர்த்தினி அவர்களுக்கு நாளது மே மாதத்துக்கு எழுபத்தெட்டுவயது சென்று எழுபத்தொன்பதாவது நடக்கிறது. அவர்கள் 1819௵ மேமீ 24-ம் தேதியில் லண்டன் நகரில் கேன்ஸிங்டன் என்னும் ராஜமாளிகையில் அவதரித்தனர். அப்போது வசந்தகாலம் ஆதலின் உலகமெல்லாம் ஒரு குடைக்கீழ் ஆண்டு பரிபாலிக்க நின்ற குலமகள் அவதரித்தது கண்டு சகல சராசரங்களும் குதூகலித்துப் பேரானந்தம் பெருகினதுபோல மரங்களெல்லாம் தளிர்களும் பூக்களும் தழையப்பெற்றன; வேலிகள்தோறும் பசுமையான இளங்கொடிகளும் செடிகளும் பன்னிறமான மலர்களோடு பாவையர்போல ஆடிககொண்டிருந்தன; பக்ஷி

கள் பலவும் எங்கும் இனிமையான கீதங்களைப் பாடித்திரிந்தன; எல்லாவுயிர்களும் ஆனந்தத்தால் நிரம்பினாற்போலும் விளங்கின; மந்தமாருதம் நன்மணம்வீசி அரசியின் பிறப்பை உலகெங்கும் சென்று தெரிவிக்கும் தூதுவர்போல ஓடியுலாவியது; மடுக்களும் குளங்களும் மகிழ்ச்சியடைந்து மத்தளம் ஒலிப்பதுபோல் அலைகள்மோதி ஆரவாரித்தன; நதிகளும் அருவிகளும் தாம் கொண்ட பேரானந்தத்தை அடக்க முடியாததுபோலத் துள்ளித் துள்ளிக் குதித்து வீழ்ந்தன; கதிரவன் தானும் தன் கனொளி துளும்பிக் களிப்பு மிகுந்தாற்போலும் இளவெயில் எறித்து விளங்கினான்.

இராணியவர்கள் சென்ற 1400-வருஷங்களாக இங்கிலாந்தில் பரம்பரையாக அரசு செலுத்திவரும் பழமையான ராஜவம்சத்திற் பிறந்தவர். தந்தைவழியில் 'ப்ரன்ஸ்விக்' என்னும் ராஜவம்சத்தைச் சார்ந்தவர். இவ்விராஜவம்சத்தின் முதல் அரசரான முதலாம் ஜார்ஜ் என்பவர் தம் தாய்வழியே அதற்குமுன்னரசாண்டுவந்த 'ஸ்டுவார்ட்' ராஜவம்சத்தோடும், அவ்வம்சத்தின் முதல் அரசரான முதலாம் ஜேம்ஸ் என்பவர் தாமும் தாய்வழியே தமக்குமுன் அரசாண்ட 'ட்யூடர்' வம்சத்

தோடும், அவ்வம்சத்தின் முதல் அரசரான ஏழாம் ஹேன்றி என்பவரும் அவ்வாறே தாய் வழியே அதற்குமுன்னரசாண்ட 'ப்ளாண்டாஜனட்' வம்சத்தோடும், அதன்முதல் அரசரான இரண்டாம் ஹேன்றி என்பவரும் தாய்வழியில்தானே அதற்கு முந்தின 'ஸெடரிக்'கின் சந்ததியாரான இங்கிலாந்தரசரோடும் இவ்வாறு உச்சியில் ஓங்கித்தழைக்கும் பசுங்கிளை யொன்று ஒரு கப்பிலிருந்து மற்றொன்றைக் கூடி ஒன்றின்வழியொன்றாக அடிமரத்துடன் சேர்ந்திருப்பதுபோல ஒருவரோடொருவர் சம்பந்தப்பட்டிருக்கிறார்கள்.

இராணியவர்களின் பாட்டனார் இங்கிலாந்தில் இராணியார் ஒருவரைத்தவிர மற்றெல்லோரினும் நெடுங்காலம் அரசுபுரிந்துவந்த மூன்றும் ஜார்ஜ் என்பவர். இவர் 1760-ம் ௵ முதல் 1820-ம் ௵ வரையில் அரசு செலுத்தி அநேக நற்குண நற்செய்கைகளுடையவராய் ஜனங்களால் நேசிக்கப்பட்டு மிக்க புகழும் பெருமையும் பெற்றவர். இவர் பெண்ணும் பிள்ளையுமாய் பதினைந்து குழந்தைகளைப்பெற்றார். முதல் புத்திரராகிய ஜார்ஜ் என்பவரும், மூன்றாம் புத்திரராகிய வில்லியம் என்பவரும் ஒருவர்பின்னொருவராக அரசாண்டனர். நான்காம் புத்திரரான எட்வே

ர்ட் என்னும் இயற்பெயர்கொண்ட கேன்ட் பிரபுத் தாம் அரசியின் தந்தையார்.

கேன்ட் பிரபு தமது சகோதரர் அனைவரிலும் மிக்க நற்குணமுடையவர். இவர் 1818-ம் வரு 'சாக்ஸ் கோபர்க்'கென்னும் ஜர்மானிய பிரபுவின் புதல்வியும் பிற்காலத்தில் பெல்ஜியம் தேசாதிபதியான லியோபோல்ட் என்பவரின் சகோதரியுமான லூயிசா விக்டோரியா பெருமாட்டியைத் திருமணம் புரிந்து மறுவருஷத்தில் தமது ஒரே குழந்தையான விக்டோரியாவைப் பெற்றனர். குழந்தைக்குப் பற்பல பெயர்களை இடலாமாவென்று பார்த்தும் கடைசியில 'ரஷ்ய சக்கிரவர்த்தி' யாகிய அலெக்ஸாண்டர் என்னும் பெயரையும், தாயார் பெயராகிய விக்டோரியா என்பதையும் சேர்த்து அலெக்ஸாண்ட்ரினா விக்டோரியா என்று நாமகரணம் செய்யப்பட்டது.

இராணியார் பிறந்தகாலத்தில அவர் பிற்காலத்தில் அடையப்பெற்ற உயர்பதவியை அடைவார்கள் என்று ஒருவராயினும் எண்ணவில்லை. கேன்ட் பிரபுவுக்கு அரசராயிருந்த ஜார்ஜைத்தவிர வேறிருவர் தமயன்மார் இருந்தார்கள். ஆதலின், அவர்களாவது அவர்கள் சந்ததியார்களாவது பிரகிருதத்தில் ராஜபட்டத்துக்கு வரக்கூடுமாதலால், அவர்

கள் யாவரையும் கடந்து விக்டோரியாவுக்குப் பட்டம் கிடைக்குமென்று ஒருவருக்காவது தோற்றவில்லை. ஆயினும், இவருடைய தந்தையார்மாத்திரம் தமது புத்திரி நிச்சயம் பட்டத்துக்கு வருவாளென்று எண்ணியிருந்ததாகத் தெரியவருகிறது. இவர் தமது அருமைக் குழந்தையை தமது ஆப்த சிநேகிதர்களுக்குப் பலமுறையும் காட்டி அவர்கள் அக்குழந்தையைக் கையிலெடுத்துச் சீராட்டும்போதெல்லாம், "ஜாக்கிரதை, அவளைக் கீழே தவறிப் போட்டுவிடாதீர்கள்; அவள் இங்கிலாந்துக் கரசியாவாள் சொன்னேன்" என்று கூறுவார். இவ்வெண்ணம் இவருக்கு எவ்விதமாகவோ முதலிலிருந்தே உறுதியாக மனசில் பதிந்திருந்ததாகத் தெரியவருகிறது. இவர் தமது மனைவி கருப்பவதியாகிப் பிறந்தகத்தில் இருந்தபோது, பிறக்கும் குழந்தை இங்கிலாந்துக்கு அரசியாகக் கூடுமாதலால் அத்தேசத்திலேயே ஜனிக்கவேண்டு மென்னும் ஆசையினால், தம்மனைவியைப் 'பவேரியா' வில் இருந்து லண்டன் நகருக்குக் கூட்டிக்கொண்டு வந்ததுமன்றி, ஒருவேளை, வழியில் யாதேனும் இடையூறுண்டாமோ வென்னும் அச்சத்தால் தாமே வழிநெடுக வண்டி யோட்டி வந்ததாகவும் சொல்வார்கள். அன்

ரியும் இவ்விஷயமாய் இன்னொரு கதையும் சொல்வார்கள். குழந்தைக்கு நாமகரணம் செய்யும் காலத்தில் இங்கிலாந்து அரசிகள் எல்லோரினும் மேன்மை பெற்றவரும் அக்காரணத்தால் ஜனங்களால் மிகவும் கொண்டாடப் பெற்றவருமாகிய எலிசபேத் என்னும் அரசியின் பெயரை இடவேண்டுமென்று முதலில் எண்ணினாராம். இதனாலும் இவர் தம் புத்திரி அரசியாவாளென்று நிச்சயமாகக்கருதியிருந்ததாகத் தெரியவருகின்றது.

கேன்ட் பிரபு தமது அருமைக் குழந்தை மேல் வைத்திருந்த வாஞ்சைக்கு அளவில்லை. குழந்தையைக் கண்டபோதெல்லாம் அதனோடு கொஞ்சிக் குலாவி வாரியெடுத்து மார்போடணைத்து முத்தமிட்டுக் கையிலேந்தி முன்னும் பின்னுமாக நடந்து தலையில் வைத்துக் கூத்தாடிப் பேரானந்தத்தை யடைவார். தாய் தந்தையர் இருவரும் குழந்தை வசந்த காலத்தில் பிறந்ததனாலும், குழந்தையின் அழகைக்கண்டும், தம்முடைய பேரன்பினாலும், "வஸந்தபுஷ்பமே" யென்று செல்வப் பெயரிட்டு அழைப்பார்கள். 'கோடித்துக்கம் குழந்தை முகத்தாலாறும்' என்றபடி குழந்தைகளின் மலர் முகத்தைக்காண்பதிலும் 'மக்கள் மெய்தீண்டலுடற்கின்பம், மற்றவர் தம்

சொற்கேட்டல் இன்பம் செவிக்கு' என்றபடி குழந்தைகளை அணைத்துத் தழுவுதலினும் அவரது மழலைச்சொற்களைக் கேட்டலினும் சிறந்த இன்பம் பெற்றோர்க்கு வேறு யாதுள்ளது?

இளவரசி ஆறுமாதக் குழந்தையாயிருந்த போது தாயாரோடும் லண்டன் நகரத்தை விட்டு 'சிட்மவுந்' என்னும் இனிமையான ஓரிடத்தில் சென்று சிறிதுகாலம் இருக்க நேரிட்டது. அப்போது, அவருக்கு ஓர் பெரிய மரணுபாயம் உண்டாகி தெய்வானுகூலத்தால் தப்பிப்பிழைத்தார்கள். அங்கு ஒருநாள் மாளிகைக்கு வெளியே பக்ஷிகளைச் சுட்டு வேட்டையாடித் திரிந்துகொண்டிருந்த ஒருபேதைப்பையன் தான் செய்யும் கொடுஞ்செய்கையின் விளைவை அறியாதவனாய், துப்பாக்கியினால் சுட்டதும் குண்டு குறிதப்பிக் குழந்தை தாதியின்மடியில் விளையாடிக்கொண்டிருக்கும் அறைக்குள் பலகணிவழியாகப் பாய்ந்து, குழந்தைமேல்தாக்க ஒரு மயிரிழை தப்பியது. எவ்வளவு ஆபத்துப்பாருங்கள்! குழந்தைமேல்மட்டும் குண்டுபட்டிருக்குமானால் பெற்றோர் சிந்தை எவ்வளவு வருந்தியிருக்கும்! உலகத்துக்கும் ஈடுபண்ணுதற்கரிய எவ்வளவு பெரியநஷ்டம் நேர்ந்திருக்

கும்! அப்படிக்கு வாராதபடி கருணைக் கடலாகிய பரமேஸ்வரன் இவரை நமக்குப் பல்லாண்டும் அரசியாக உதவ உத்தேசித்திருந்ததனுல், அக்கொடிய ஆபத்துக்கு இவரைத் தப்புவித்தார்.

**கேன்ட் பிரபு** தாம் பெற்ற பெரும்பாக்கியத்தை நெடுநாள் அனுபவிக்கப் பெறவில்லை. குழந்தைக்கு இன்னம் ஒன்பது மாதமும் பூர்த்தியாகுமுன்னே தேகவியோகம் அடையலாயினர். 'வகுத்தான் வகுத்தவகையல்லாற் கோடி தொகுத்தார்க்கும் துய்க்கலரிது' என்றபடி கடவுள் திருவுளம் அப்படிக்கிருந்ததானுல் அதை விலக்க வல்லவர் யாவர்? ஆகா! இவர் இறந்துபோனவகையைச் சிந்திக்கின் எவ்வளவு பரிதாபம்! ஒருநாள் தம்முடைய அரண்மனைப்பக்கத்திலுள்ள வெளியிடங்களில் உலாவிக்கொண்டிருக்கையில் சடிதியில் பெருமழைவந்து தாக்க மழையில் நனைந்து அகத்துக்குத் திரும்பிவந்து நனைந்த உடையை மாற்றி உலர்ந்த உடைதரித்துக் கொள்ளப்போகும்காலையில் வழியில் எதிர்ப்பட்ட குழந்தையைக்கண்டு விட்டுப்போக மனமில்லாமல் வழக்கப்படியே அதனுடன் சற்றுச் சீராடிக்கொண்டிருந்துவிட்டதனுல் உடையீரம் உடலில் தாக்கி சுரநோய்கண்டு

அதிசீக்கிரத்தில் இறந்துபோயினர். இளவரசிக்கு அறியாதகாலத்தில் அருமைத் தந்தையை இழக்கும்படியான எவ்வளவு பெருந்துயரம் நேர்ந்தது! விதியின்பயன் அப்படி இருந்தது. ஆயினும் 'கண்ணைக்கெடுத்த தெய்வம் மதியைக்கொடுக்கும்' என்பதுபோல தந்தையை இழக்கினும் தந்தையினும் எண்மடங்கு தம்மை நேசமுடன் ஆதரிக்க வல்ல நற்றாயைப்பெற்றதனால் அவருக்கு யாதொரு குறைவுமுண்டாகவில்லை.

அரசிளங்குழந்தையின் தாயாருக்கு கணவரை இழந்தகாலத்தில் உண்டான கடுந்துயரம் இவ்வளவவ்வளவென்று சொல்லக்கூடுமோ? தமக்கு ஜனன தேசமல்லாத அங்கிலதேசத்தில் அத்தேச பாஷையுங்கூட இன்னம் நன்றாகப் பேசத்தெரியாதவராய், மனுஷ்யர்களின் ஆதரவும் தமது பதவிக்குத் தக்கபடி விசேஷ பொருள்வருவாயும் இல்லாதவராய்ப், பார்த்த முகமெல்லாம் வேற்றுமுகமாயிருந்ததனால் அவரது நிலைமையானது மிக்கவும் கஷ்டமாயிருந்தது. அன்றியும் அவருக்கும் அவர்கணவரது சகோதரர்களுக்கும் கொஞ்சமும் மனப்பொருத்தம் இல்லாமலும் இருந்தது. அவரது மைத்துனர்களாகிய நாலாம் ஜார்ஜ், நா

லாம் வில்லியம் என்னும் இரண்டு அரசர்களும் துஷ்ட சுபாவமும் கொடுஞ்சிந்தையுமுடையவர்களாய் அவரை வெறுத்துப் பலமுறையும் பகிரங்கமாகத் திரஸ்கரித்து அலக்ஷியம்செய்து வெகுவாக வருத்தப்படுத்தி வந்தார்கள். ஆயினும், அவ்வளவுக்கும் சலிக்காமல் ஈடு கொடுத்துச் சமாளித்து வந்ததுமன்றித் தமது புத்திரியின் படிப்பு முதலிய விஷயங்களில் அவ்வரசர் கருத்து எள்ளளவேனும் நடந்தேறாமல் தம் கருத்தின்படியே நிறைவேற்றிய இப்பெருமாட்டியின் செய்கையை ஆலோசிக்கும்போது, இவர் மஹா மனோதைரியமும் அசையாத உறுதியும் உடையவரென்று எளிதில் ஊகிக்கத்தக்கது. இவரது மன நிலையை ஆலோசிக்கும்போது, பண்டு, பகைவர்புரத்தில், புலிக்கூட்டங்களுக்குள் ஓர் மான்பேடு அகப்பட்டுக்கொண்டதுபோலும், சிறையிற் கிடந்து, தம் இன்னுயிர்க்கணவரைப்பிரிந்து வருந்திய காலத்தும், எள்ளளவேனும் தமது தைரியத்தைக் கைவிடாது, தமது கற்பின் வலிமையினாலும், தம் கணவரது புயவலியிலும் மானத்திலும் தமக்குள்ளதோர் பெரு நம்பிக்கையினாலும் தமது குடிப்பிறப்புக்கும் ஒழுக்கத்துக்கும் அணுமாத்திரமும் குறைவு வாராதபடித் தம்மைக் காத்துக்

கொண்டதுமன்றி, அவ்விராவணனுதியரை ஓர் சிறு துரும்பினும் கடையாக மதித்து அவர் கண்முன்னேயும் அவரை நிராகரித்துவந்த நம் சீதாபிராட்டியாரது மனோபாவத்தைச் சிறிது ஞாபகமூட்டாமல்போகுமோ?

கேன்ட் பேருமாட்டி இவ்வாறு வருந்திய காலத்தில் அவருக்கு ஒருவர் துணைமாத்திரம் பலமாயிருந்தது. அவரது உடன்பிறந்தவரான லியோபோல்ட் என்பவர் அவரது துயரத்தை ஆற்றி அவருக்கு நல்லாலோசனைகள் சொல்லி, தம்மாலியன்றவளவில் பொருளுதவி முதலியன செய்து அவரையும் குழந்தையையும் நேசித்து ஆதரித்து வந்தனர். இவர் தமக்குச் செய்த உதவியானது இராணியவர்கள் மனதில் எவ்வாறு பதிந்திருந்ததென்பது இவ்வொரு விர்த்தாந்தத்தினுலும் நன்குவிளங்கும். இராணியவர்கள் பிற்காலத்தில் இவர் பெயரைத் தமது கடைசிப் புத்திரருக்கு இட்டபோது இவர் செய்திருந்த நன்மைகளையோர்ந்து, "இப்பெயர் எனக்கு *அல்பர்ட் என்னும் பெயருக்கு அடுத்தபடியாக மிகவும் பிரியமானது. இப்பெயர் ஒன்றுதான் கிலேசபூரிதமான என் பால்யதசையில் நான் சிறிது அடைந்த

---

* மஹாராணியாரின் கணவர்பெயர்.

சுகவாழ்க்கையை எனக்கு ஞாபகமூட்டுகின்றது" என்று சொல்லியிருக்கின்றனர்.

இவரைத்தவிர விக்டோரியாவிடத்தில் என்றும் ஒரே தன்மையான அன்புபாராட்டி அவரை நேசித்துவந்தவர் அவரது சிறிய தகப்பனாராகிய **யார்க் பிரபு**. இவர் **கேன்ட் பேருமாட்டிக்கு** உபசாரம் சொல்லும் பொருட்டு 'கென்ஸிங்டன்' அரண்மனைக்குப் போனபோது குழந்தையைப் பார்க்கவேண்டுமென்று கருவிக்க, அக்குழந்தை அவரைக்கண்டதும் அவர் சாயலில் அஞ்சச்சும் தன் தந்தைபோலவே இருந்ததினால் தந்தையென்று நினைத்துச் சந்தோஷத்துடன் இருகைகளையும் நீட்டி அப்பா! அப்பாவென்று ஆவலுடன் தாவியது. பிரபுவும் அதுகண்டு மனம் கனிந்து "உனக்கு நான் தந்தையின் தானத்தில் தந்தையாகவே இருப்பேன்" என்று வாக்களித்து நேசித்து வந்தனர். இளவரசியும் இவரைத் தந்தைபோலவே அன்று முதல் பாவித்து நேசித்து வந்தனர்.

இவர்கள் இருவரையுந்தவிர இன்னொருவரும் இளவரசியினிடத்தில் மிக்க அன்பு பாராட்டி வந்தார். அவர் யாரென்னில் **வில்லியம் ராஜாவின்** தேவியாராகிய **அடிலேய்ட்** அரசாணி. இவர் விக்டோரியாவிடத்தில் வைத்

திருந்த அபிமானத்தை விளக்க அநேக விடு கதைகளுண்டு. அவற்றில் ஒன்று பின்வருமாறு:—தாம் தமது இரண்டு பெண் குழந்தைகளையும் ஒன்றின்பின்னென்றாய் இழக்க வந்து சந்ததியில்லாமற்போனகாலத்தில் இன்னொருவரானல் விக்டோரியாவின்மேலும் அவருடைய நற்றாயார்மேலும் "ஐயோ! நம் பிள்ளைகளும் நாமும் அடையலாவதோர் பதவியை இவர்கள் அடையலாயிற்றே" என்று வீணான பொறாமையும் மாற்சரியமும் அடைந்திருக்கக்கூடும். பெருமிதமுள்ள இவ்வரசியோ அவ்வாறல்லாமல் கேன்ட் பேருமாட்டிக்கு அக்காலத்தில் எழுதிய கடிதத்தில் "தங்காய்! என் குழந்தைகள் இருவரும் இறந்துபோனலும் உன் குழந்தை உயிரோடிருக்கின்றாளல்லவா? அவள் உனக்கேயன்றி எனக்கும் குழந்தைதானே" என்று சொல்லியிருக்கின்றார். இதை எண்ணும்போது, பண்டு, இராமனுக்குரிய இராச்சியத்தைப் பரதன் பெற்றானென்று கேட்டபோது, இராமன் தாயாகிய கோசலாதேவி மகனை நோக்கி, "அப்பா! மகனே! உன்னிலும் பரதன் மும்மடங்கு நிறைந்த குணத்தினன்; யாதோர் குறைவுமில்லாதவன்; தமயனைவிட்டுத் தம்பிக்கு முடிசூட்டல் முறைமையல்லவென்ப தொன்றைத்

தவிர இராஜ்யம் நீ பெற்றால் என்ன அவன் பெற்றாலென்ன; எனக்கு இரண்டும் சரியே" என்று சொல்லியதையே ஒக்குமல்லவா? இராணியவர்கள் பட்டத்துக்கு வந்தபோது தம்



The Duke of Kent.] [கென்ட் பிரபு.

முடைய பெரியதாயார் தமக்குக் காட்டிய நேசத்தை மறவாதவராய் அவருடைய மனம் களிக்கும்படிப் பலவிதமாகவும் நடந்து அவரை ஆதரித்துவந்தனர்.

விக்டோரியா இளவரசி குழந்தைப் பருவத்தில் மிகவும் அகமகிழ்ச்சியும் ஆரோக்கியமுமுடையவராய் கண்டோர் உவக்கும்படி அரண்மனைக் கூடங்களிலும் தாழ்வாரங்களிலும் ஓடியாடி விளையாடுவார். சுறுத்ததெல்லாம் நீர் வெளுத்ததெல்லாம் பால் என்றெண்ணும் களங்கமற்ற குழந்தைப் பருவத்திலும் இனியதொன்றுண்டோ? அவர் சில வேளைகளில் தமது பட்டுச் சேணங்களால் அலங்கரித்த மட்டக்குதிரைமேலேறித், தமது தாயார் பக்கத்தில் தம்முடன் பேசிக்கொண்டு நடந்துவர, அரண்மனைத் தோட்டங்களில் சவாரி செய்வார். அப்போது வழியில் எதிர்ப்பட்டவர் தமக்குத் தலைவணங்கிச் சலாம்செய்தால் தாமும் அவர் சந்தோஷிக்கும்படிச் சலாம் செய்து மறுமொழி கூறுவார்.

இளவரசி இதற்குமுன் ஒரு ஆபத்துக்குத் தப்பிப் பிழைத்தாரென்று சொன்னோமல்லவா? இவர் நான்கு வயதுக் குழந்தையாயிருந்தபோது ஒருநாள் வண்டியில் ஏறிச் சவாரி செய்கையில் வண்டி கெடச்சாய்ந்து குழந்தைமேல் விழுந்துவிடத் தெரிந்தது. நல்லவேளையாய் அப்போது அவ்வழியாகப் போக நேரிட்ட ஐரிஷ் ராணுவவீரன் ஒருவன் உடனே அவரது உடையைப்பற்றி அவ

ரைத் தூக்கி எடுத்து பிராணனைக் காப்பாற்றி னான். அவனுக்கு உடனே தகுந்த வெகுமதி செய்யப்பட்டதாயினும் அதற்குப்பின் நெடு நாள் வரையில் தான் அப்போது காப்பாற் றின குழந்தை அரசியென்று அவனுக் குத் தெரியவே தெரியாது. இவ்வுண்மையை 1877-லுந்தான் அவன் அறிந்தான்.

இளவரசி ஐந்தாறு வயதுக் குழந்தையா யிருந்தபோது எவ்வாறு வளர்த்து வரப்பட் டார் பாருங்கள். நமக்குள் அநேகர் குழந் தைகளைச் செல்வமாக வளர்ப்பவர்கள் அவர் களுக்கு உண்டி முதலியவற்றில் இன்னது உசிதம் இன்னது அநுசிதம் என்று ஆலோசி யாமல் கேட்டதெல்லாம் கொடுத்து மனம் போனபடிவிட்டு நோய்முதலிய கெடுதிகளை விளைவிப்பதுமன்றி அவர்கள் 'இல்லாததைக் கொண்டுவா கல்லாததைப்படி' என்று வீம் பும் பிடிவாதமும் பண்ணி ஒருவர்க்கும் பின்பு அடங்காமற்போகும்படி தமக்கு வினை தாமே தேடிக்கொள்வதை நாம் பலமுறையும் கண் டிருக்கின்றோமல்லவா ? ஒருவர் கற்பனவற் றைக்கற்று நல்லொழுக்கத்தில் நின்று தமக் கும் பிறருக்கும் பயன்படும்படி நடப்பதற் கும் கற்றறிவில்லாதவராய்த் தீயொழுக்கத்தில் நின்று கெடுதி விளைப்பதற்கும் காரணம் அவ

ரவர்கள் பால்யத்தில் பழகும் பழக்கமேயா கும். இளவரசியைத் தாயார் கணப்பொழு தாவது தம்மைவிட்டு நீங்கி மனம்போனபடிச்



The Duchess of Kent.] [கென்ட் பெருமாட்டி.

செய்யவிடுவதில்லை. இளவரசியின் நித்தி யவிர்த்தி இன்னதென்று எடுத்துச்சொல் லுவன் கேளுங்கள். அவர் தினந்தோறும் காலையில் 8-மணிக்கு, முற்றத்தில் வெட்ட வெளியில் தம் அன்னையின் பக்கத்தில் பரிக

லம் அமைக்கப்பெற்று ரொட்டியும் பாலு மாக மிதமாகப் போஜனம் செய்வார். இவ் வழக்கம் அரசிக்கு அதிபால்யத்திலேயே ஏற்பட்டு இப்போதும் பிரியமான வழக்க மாகி நிற்கின்றது. பின்பு உத்யானத்தில் சென்று சிறிதுநேரம் உலாவி வருவார். சில வேளைகளில் வண்டியேறிச் சிறிது தூரம் சவாரிசெய்தும் வருவார். அதன்பின் தமது தாயாரிடம்வந்து 10-மணி முதல் 12-மணி வரையில் இரண்டுமணிநேரம் அதேகாரிய மாய் படித்தல் எழுதல் கணக்குப்போடல் முதலியவற்றில் மனசைச் செலுத்திப் பாடங் களைப்படிப்பார். அதன்பின அரண்மனைப் பக்கத்தில் உள்ள சிறு தோட்டத்தில் சென்று ஆவலோடும் பூச்செடிகளுக்கு நீர் வார்ப்ப தும் பாத்திகட்டுவதுமாகச் சிறிது பொழுது போக்குவார். பின்பு கொஞ்சநேரம் அரண் மனைக்கூடங்களைச் சுற்றி ஓட்டம்பிடித்து விளையாடுவார். பின்பு 2-மணிக்கு மத் தியான போஜனம அன்னையுடன் செய்து கொண்டு மறுபடியும் 4-மணிவரையில் புத்தகமும் கையுமாய்ப் படிப்பில் கருத்தைச் செலுத்துவார். பின்புவண்டியேறி உல்லாச மாக உலாத்தவோ அல்லது தாம்விரும்பிய பந்து மித்திரர்களைப் போய்ப்பார்க்கவோ

செல்வார். அதன்பின் சிலவேளைகளில் குதிரையேறிச் சவாரிசெய்தும், சிலவேளைகளில் கால்நடையாக உலாத்தியும் சிலவேளைகளில் மரத்தடியில் பச்சைக் கம்பளம் விரித்தது போன்ற சுப்ரமான பசும்புற்றரையில் மற்றவர்களுடனிருந்து வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருந்தும் போதுபோக்குவார். பின்பு விளக்கு வைக்குமுன் அன்னையுடனிருந்து போஜனம் செய்துகொண்டு சிறிதுபோது தன் செவிலித்தாயாகிய ப்ராக் துரைசானியுடன் விளையாடிக்கொண்டிருந்த பின்பு பண்டு பலகாரங்களில சிறிது புசித்துவிட்டு 9-மணிக்குத் தம் அன்னையின் படுக்கைக்குப் பக்கத்தில இடப்பட்டிருக்கும் தம் படுக்கையில் படுத்து நித்திரைபோவார். இவ்வாறு, அரைக்கணமேனும் சோம்பலுக்கிடம் கொடாமல் சுறுசுறுப்பாய் பால்யம் முதலாகப் பழகிவந்ததனால், இளவரசி பின்பு சோம்பலென்பதே அறியாதவராய் பற்பலகாரியங்களையும் செய்ய வல்லவராகி எப்போதும் மனமகிழ்ச்சியடைந்திருந்தார்.

இளவரசி, குழந்தைப்பருவத்தில் 'கென்ஸிங்டன்' மாளிகையிலேயே இருந்துவளர்ந்து வந்தனரென்று எண்ணவேண்டாம். சிலவேளைகளில், தமது மாமனாகியலியோபோல்ட்

என்பவரின் 'கிளார்மண்டு மாளிகை' யென்னும் அரண்மனையில் போயிருப்பார். சில வேளைகளில் ப்ரைடன், ராம்ஸ்கேட் என்னும் கடற்றுறை நகரங்களுக்குச் சென்று கடற்கரையில் மற்றப் பிள்ளைகளைப்போலவே மணலில் ஓட்டம் பிடித்தும், அந்த கடற்றுறை காக்கும் சேவகர்களின் தூரதிருஷ்டிக்கண்ணாடிவழியாக கடலில் நெடுந்தூரத்தில் ஓடும் கப்பல்களைப்பார்த்து விநோதித்தும், விளையாடிவருவார். சிலவேளைகளில், ராம்ஸ்கேட்டு நகரில் தம்மிடத்து மிக்க அன்புபாராட்டிய ஓர் யூதப் பிரபுவின் இனிமையான பூம்பொழில்களில் சென்று ஏகாந்தமாக மரங்களின் நிழலில் பூச்செடிகளுக்கிடையில் உலாவிக் களித்து வருவார்.

இவ்வாறு, பலவிடங்களிலும் சென்று இன்பமாக விளையாடிப் பொழுதுபோக்கிலும் இளவரசிக்கு *வைட்தீவைவிடப் பிரியமான இடம் வேறொன்றுமில்லை. அவ்வழகிய தீவில் தமது அன்னையுடன் சென்று அடிக்கடித்தங்கியிருப்பது வழக்கம். அவர் அக்காலத்தில் அங்கு சுகமாகக் காலம் கழித்ததை மறந்து போகவில்லை. அரசியானபின், அத்தீவில் "ஆஸ்போர்ன்" அரண்மனையென்று கடலோ

* Isle of Wight.

ரமாக அழகியதோர் அரண்மனையைக் கட்டு வித்து அதில் அழகிய சாலைகளும் சோலைக ளும் பூந்தடங்களும் பலவிதமான சிற்பக்காட் சிகளும் அமைப்பித்து அதைத் தமக்குப் பிரியமான வாசஸ்தானமாக ஏற்படுத்திக்கொ ண்டார்.

---

## II.

### இளமைப்பருவமும் கல்விப்பயிற்சியும்.

இளவரசிக்கு அதிபால்யத்திலேயே தமது அருமைத்தந்தையை இழக்கும்படியான பெ ருந்துயரம் நேர்ந்ததாயினும், "தந்தையொடு கல்விபோம்" என்ற உலகவழக்கப்படி அவ ருக்கு வித்யாபிவிர்த்தியில் யாதும் குறை வுண்டானதில்லை. அவருடைய நற்றயார், அவர் நற்குண நற்செய்கையுடையவராய் மேலால் அடையக்கூடிய ராஜபதவியைக் குறைவில்லாமல் பரித்து நிர்வகிக்கும்படித் தம்முடைய கருத்து முழுதும் புத்திரியின் வித்யாபிவிர்த்தியிலேயே செலுத்திவந்தார். இளவரசி வித்யாப்யாசம் செய்யத்தொடங் கியபோது கீழே சொல்லியபடி அவர் ராஜ பதவியை அடைதல் முற்றிலும் நிச்சயமில் லாமையினுல், அவருக்கு அரசைப்பெறு

தற்குப் பாக்கியமிருந்தாலும் சரி, இல்லையானாலும் சரி, இரண்டுபக்ஷத்துக்கும் அநுகூலமாகும்படி, சாதாரணமாக அரசர்களுக்குள் உள்ள வழக்கம்போல வீணான ஆடம்பரமும் கூட்ட நாட்டமுமில்லாமல், தமது சொந்த விசாரணையிலேயே அதிகூடமாய் அவரது கல்வியையும் ஒழுக்கத்தையும் சீர்ப்படுத்திவந்தார். அன்றியும்,

"பல்பொருட் டேர்ச்சியும், பரந்த நூலுணர்
கல்வியின் மாட்சியும், கலையின் தோற்றமும்,
நல்வகை யுதித்திட நவையின் நீங்குறச்
சொல்வதொன்றல்லவே, துகளில் கல்வியே."

"உண்மையும் ஞானமும் ஒடிவிலாமனத்
திண்மையும் பொறிவழி செறிக்கும் வன்மையும்
தண்மையும் ஊக்கமும் தயையும் நேர்மையும்
வண்மையும் சிறந்திட வகுத்தல் கல்வியே."

என்றபடி, ஒருவர் கல்வியினால் அடையும் பிரயோசனம் அநேக கலைகளில் பாண்டித்தியம் பெறுதல்மாத்திரமேயன்று; நன்னடக்கையும், வாய்மையும், மனோநிக்ரகமும் ஆகிய பல நற்குணங்களும் வாய்க்கப்பெறுதலுமேயாகும் என்று நன்றாக அறிந்தவராதலின், அதற்குத்தக்கபடி தம் புத்திரிக்குப் பயிற்றுவிப்பார் ஆயினார்.

இளவரசிக்கு உபாத்தியாயர் இருவர். அவர்களில் தலைமை உபாத்தியார் பிற்காலத்தில் பீடர்புரீ அத்யக்ஷர் என்று உயர்ந்த பதவியைப்பெற்று மேன்மையடைந்த டேவிஸ் மஹாபண்டிதர். அவருக்கு உதவியாக இளவரசியின் படிப்பு விஷயங்களைக் கவனிக்கும்படி நியமிக்கப்பட்டிருந்தவர் லேஷன் பெருமாட்டி என்பவர்.

இப்பெருமாட்டியினிடத்தில் இளவரசி மிக்க பக்தியும் விசுவாசமும் உடையவராய், தாம் பட்டத்துக்கு வந்தபின் இவரைத் தமக்கு அந்தரங்க காரியதரிசியாகச் சிலகாலம் நியமித்து வைத்துக்கொண்டனர். இவர் பின்பு உத்யோகத்தைவிட்டுத் தமது சுதேசத்துக்குப்போய்விட்டபிறகும் அரசி இவரை மறவாதவராய், வாரம் ஒருமுறை தப்பாமல் இவருக்குக் கடிதம் எழுதிவந்தார்.

இளவரசி தமது சுயபாஷையாகிய இங்கிலீஷைப்போலவே, ஜர்மன், பிரஞ்சு, இதாலியன் என்னும் தேசாந்தர பாஷைகளையும் பால்யத்திலேயே சரளமாகப் பேசவல்லவர் ஆயினர். ஜர்மன் பாஷை தம் தாயாருக்கு ஸ்வபாஷையாதலினால் தாமும் அதை ஸ்வபாஷைபோலவே சுலபமாகக் கற்றுக்கொண்ட

னர். இவையன்றி தமிழ்ப் பாஷைக்கு ஸம்ஸ்கிருதம் எப்படியோ அப்படியே, இங்கிலீஷ் பாஷைக்குப் பலவகையாலும் மூலபாஷையாய் அதற்கு அழகையும் புஷ்டியையும் கொடுப்பதான லாடின், கிரீக் என்னும் பிராசீன பாஷைகளிலும் மிக்க தேர்ச்சியடைந்தார். அரசி, எப்போதும், பாஷைகளை அப்யசிப்பதில் மிக்க ஆசையும் சந்துஷ்டியுமுள்ளவர். வெகுநாட்கழித்துத் தமது *முதுமைப்பருவத்திலும் கூடத் தம்முடைய இந்திய பிரஜைகளும் மற்றவர்களும் கேட்டு மனங்களிக்கும்படி, ஹிந்துஸ்தானிபாஷையை விரும்பிக்கற்கத் தொடங்கினாரல்லவோ? இவையல்லாமல் கணிதம், சரித்திரம், தேசசட்டம், சங்கீதம், சிற்பம், முதலான வித்தைகளிலும் தேர்சசியடைந்தார்கள்.

இளவரசி சித்திரம் எழுதுவதிலும் சங்கீத வித்தையிலும் இயல்பாகவே மிக்க விருப்பமுடையவராய் அதி பால்யத்திலேயே மிக்க தேர்ச்சியடைந்தனர். இனிமையான சாரீர சம்பத்தையும் உடையவராதலின், எடுத்த கீர்த்தனங்களைக் கேட்போர்க்கானந்தமுண்டாக நன்முகப்பாடவல்லவர் ஆனார். அர

* மஹாராணியார் ஹிந்துஸ்தானி பாஷை கற்கத்தொடங்கினபொழுது அவருக்கு வயது 60.

சியின் சங்கீத ஞானத்தை விவரிக்க ஓர் சிறு கதையுண்டு. பிற்காலத்தில், தாம் தமது அருமைக் கணவருடன் பக்கிங்ஹாம் அரண்மனையில் இல்லறம் நடத்திவரும் காலத்தில், சங்கீத சாகித்ய வித்தைகளில் அதிநிபுணராகிய மேண்டலோசன் என்னும் ஒரு ஜர்மானிய பண்டிதர் அரசியைத் தரிசிக்கவந்தனர். அப்போது பண்டிதர் தாம் இயற்றிய சில கீர்த்தனைகளைப்பாடி முடித்ததும், அரசி தாமும் ஒரு கீர்த்தனையைப் பாடுவதாகச் சொல்லி அவரது புஸ்தகத்தைவாங்கி, கடினமான ஒரு கிருதியை எடுத்து ஸ்வரங்களில் சற்றும் தவறுவாராமல், புலவர்தாமும் மெச்சி மனமகிழும்படி, இனிமையாகப்பாடி முடித்தனர்.

இளவரசி, தமக்கு நற்குண நல்லொழுக்கங்களைப்போதிக்கும் பொருட்டுத் தமது தாயார் எடுத்துக்கொண்ட விசேஷ சிரமத்துக்குத் தக்கபடி, பெரும்பயனை அடைந்தார்களென்பது அவருடன் பிற்காலத்தில் அடுக்துப்பழகிய ஒவ்வொருவருக்கும் நன்ருகத் தெரியும். பிற்காலத்தில், அரசியினிடத்தில் விசேஷமாக விளங்கின ஒவ்வொரு சிலாக்கியமான குணமும் "விளையும் பயிர் முளையிலே" என்றதுபோல அவரது குழந்தைப்

பருவத்திலேயே அவரிடம் காணப்பட்டது.



The Princess Victoria in 1830.] [இளவரசியின் 10-ம் பிராயம்.

குழந்தையிலேயே அவரிடத்தில் நிலையாகக் குடிகொண்ட உண்மை, நீதி, அன்பு, இரக்

கம் முதலிய நற்குணங்களை விளக்கும் விர்த்தாந்தங்கள் அநேகம் உள்ளன. அவை அரசியின் குணங்களைத் தெரிவிப்பதேயல்லாமல் படிப்போர்களுக்கும் மிக்க பிரயோசனமாகுமாதலின் அவற்றில் சிலவற்றை இங்கு விவரிப்போம்.

முதல் முதல், "பொய்யாமையன்ன புகழில்லை யெய்யாமை எல்லாவறமுந்தரும்" என்றபடி வாய்மையே சமஸ்தமான பெருமைக்கும் நன்மைக்கும் காரணமாகி, இம்மையில் அழியாப்புகழையும் மறுமையில் அளவில்லாத சுகத்தையும் கொடுக்குமாதலின், மக்கட்பிறப்பை யடைந்தவர் யாவர்க்கும் அது முக்கியமாயினும், மக்களுட் சிறந்து மநுநெறி செலுத்தி மன்பதையோம்பும் மன்னர்க்கு அது இன்றியமையாததாதலினால், இளவரசி பால்யம் முதலாக மனமொழி மெய்களால் பொய்மையைத் தவிர்த்து மெய்மையையே ஆசரிக்கும்படிப் போதிக்கப்பெற்று, அதைத்தமது பால்ய முதலாகத் தமக்கு உறுதிப்பொருளாகக்கொண்டனர்.

ஒரு நாள் பாடம் படிக்கையில், உபாத்தியாயரிடத்தில் சரிவர நடந்துகொள்ளாமல், விளையாட்டின்மேல் திருஷ்டியாய்ப் பாடத்தைச் சீக்கிரம் முடித்துவிடும்படி உபாத்தி

யாயரை அவசரப்படுத்தினர். பின்பு தாயார் வந்து லேஷன்பேருமாட்டியை நோக்கி, "இன்று இளவரசி எப்படி நடந்தாள்?" என்ன அவர், "ஒருதரம் மாத்திரம் சொன்னபடி கேளாமல் விஷமம் பண்ணினர்" என்றனர். அப்போது இளவரசி தாம் சொல்லும் உண்மையால் தமது குற்றம் பலப்பட்டுத் தாயாரின் கோபத்துக்குத் தாம் அதிகமாகப் பாத்திரம் ஆகவேண்டிவருமாயினும் அதனைப் பொருள்பண்ணுமல் உபாத்தினியை மெல்லத்தட்டி "மறந்துவிட்டீரே, இரண்டுதரமல்லவா?" என்று ஞாபகம் செய்தனர். இதனைக் கருதும்போது "நோய்மை செய்யினும் வாய்மையே நோன்பெமக்கறிதி" என்ற சத்தியவிரதரின் தர்மம் எவ்வளவு இனிமையாக இளவரசியினிடத்தில் அதிபால்யத்திலேயே விளங்கி நின்றதாகத் தெரிகின்றது.

இந்நேர்மைக் குணமானது ஒருவற்கு இதர விஷயங்களைக்காட்டிலும் பணவிஷயங்களில் முக்கியமாய் இருக்கவேண்டியதாதலின், இளவரசி பால்யமுதலாகப் பணவிஷயத்தில் பிசகாத நேர்மையும் நாணயமும் உடையவராகக் கற்பிக்கப்பட்டுவந்தனர். அவர் ஒருநாளும் தம்மால் நிர்வகிக்கமுடியாத செலவைச் செய்வதும் இல்லை; தம்மால் அடைக்

க முடியாத கடனையும் ஒருநாளும் வாங்குவதில்லை. சாதாரணமாக அரசர்களுக்குள் இந்தசுபாவம் இருப்பது மிக்க அருமை. தங்களுக்கு வேண்டியபடி எவ்வளவோ வரும்படியிருந்தாலும், அவ்வளவும் போதாமல் அபரிமிதமாகக் கடன்வாங்கி வீண்செலவு செய்தல் அவர்களுக்குள் வழக்கம். அரசியோ பணவிஷயத்தில் மிக்க நிஷ்கர்ஷையுள்ளவர். இதைத்தெரிவிக்க அநேக திர்ஷ்டாந்தங்கள் உண்டு. அவற்றுள் ஒன்றை இங்கு குறிப்பிடுவோம். தாம் குழந்தையாயிருந்த காலத்தில் ஒரு நாள் ஒரு கடையில தமக்குப் பிரியமான விளையாட்டுக் கருவி யொன்றைக்கண்டு அதைவாங்கவேண்டுமென்று ஆசைகொண்டனர். ஆனால் அதற்குப்போதுமான பணம் அப்போது கைவசம் இல்லாமையினால், சற்றே தயங்கி நிற்க, அதுகண்டு, கடைக்காரன் "பணம் அப்புறம் கொடுக்கலாமே, இதைக்கொண்டுபோங்கள்" என்று அதை எடுத்துக் கொடுக்கவும், இளவரசி அதற்குடன்படாமல், அப்பொருளை அவனிடத்திலேயே விக்ரயம் செய்யாமல் வைத்து வைக்கும்படித் திட்டம் செய்துவிட்டு, மறுநாள் வந்து பணத்தைக்கொடுத்து அதை வாங்கிக்கொண்டுபோனார். இக்குணமானது

அரசிக்கு பால்யத்திலேயே உண்டாகி, வர வர உறுதியடைந்து, இன்றும் மாறாமல் நிலை நிற்கின்றது.

இவ்வாறு, பணவிஷயத்தில் மிக்க கவனமும் நாணயமும் உடையவராயிருத்தல் பெரிதோ? இதை இவ்வளவு சிறப்பித்துச் சொல்லவும்வேண்டுமோ என்று சிலர் எண்ணக்கூடும். அங்ஙனம் எண்ணுதல் சரியன்று. உலகத்தில் தமக்கும் பிறருக்கும் உண்டாகும் சுகதுக்கங்களுக்கு முக்கியமானகாரணம் பணமே. பணத்தைப் பராமரியாமல் வரவுக்கு மிஞ்சின செலவுகள்செய்து கடன் படுதலினும் துன்பம் வேறில்லை; கடன் படாமையினும் சுகமும்வேறில்லை. இதனாலன்றோ "கடனுண்டு வாழாமை முன்னினிதே" என்றும், "மேலே கடனிருப்ப வேண்டுமோ ஊணுறக்கம், பாலேயும் கைப்பாகும் பார்" என்றும்,

"விடங்கொண்ட மீனைப்போலும் வெந்தழன் மெழுகுபோலும்
படங்கொண்ட பாந்தள்வாயிற் பற்றிய தேரைபோலும்
திடங்கொண்ட ராமபாணம் செருக்களத் துற்றபோது
**கடன்கொண்டார் நெஞ்சம்போலும்** கலங்கினனிலங்கைவேந்தன்."—

என்றும் இவ்விஷயத்தை வற்புறுத்திப் பலவாறு கூறியிருக்கின்றனர். அரசர்கள் கடன்படுவாராயின், அதனால் அவர்களுக்கேயன்றி குடிகளுக்கும் உண்டாகும் துன்பம் இவ்வளவவ்வளவென்றில்லை. இவ்வுண்மையறியாமல் நமது தேசத்தில் எத்தனைபேர் சிற்றரசர்களும், ஜமீன்தார்களும், அபரிமிதமான துர்விரயம் செய்து பெருங்கடன்பட்டு, அரசும், ஆஸ்தியும, சீரும், சிறப்பும் இழந்து சிறுமைப்பட்டுப்போனவர்கள்? அரசியோ, அவனிடம் கடன்வாங்கினர், இவனைக் கடன் கேட்டார், அந்த வர்த்தகன்கொடுத்து முழுகிப்போனன் இவன் மோசம்போனன் என்று அங்கங்கு வம்பர்கள் குசுகுசுவென்று சொல்லிக்கொள்ளச் சிறிதும் இடம்வைக்காமல், தமக்குரிய வரும்படியைக்கொண்டே சமஸ்தமான செலவுகளையும் செய்துகொள்வதனல், மனேசஞ்சலமும் அவஸ்தையும் அடையாமல் சுகமாயிருப்பதன்றியும், பலகாரணங்களிலும் முக்கியமாக இவ்வொரு காரணத்தாலும் குடிகள் தம்மை மிகவும் நேசித்துச் சிலாகித்துக்கொள்ளவும் பெற்றிருக்கின்றனர்.

இச்சம்பந்தத்தில், அரசியின் வரவு செலவுகளைப்பற்றி சிலருக்கு அறிய விருப்பமுண்டாகுமாதலின், அவற்றை இங்கு சிறிது விவ

ரிப்போம். அரசிக்கு பார்லிமெண்டாரின் தீர்மானப்படி, அரசிப்பட்டத்துக்கு வந்தகாலம் முதல், பிரதிவருஷமும் மூன்று லக்ஷத்தெண்பத்தையாயிரம் பவுன் கொடுத்துவரப்படுகின்றது. இதைத்தவிர வேறே வரும்படி அரசிக்கில்லை. இந்தவரும்படியைக்கொண்டு தானே அரசி தமது சொந்தச் செலவுகளும், தம்பரிசனங்களின் சம்பளங்களும், தமது குடித்தனச் செலவுகளும், தம் பெண்பிள்ளைகளின் படிப்புச் செலவுகளும் சமஸ்தமும் செய்துகொள்ளவேண்டும். அங்ஙனமாயினும், அரசிக்கு வரவர சம்சாரமும் செலவுகளும் அதிகரித்துக்கொண்டுவந்தும், அன்றுமுதல் இன்றுவரையில் இவ்வறுபது வருஷ காலமாகத் தமக்கு நிர்ணயிக்கப்பட்ட வரும்படி போதாதென்றும், கூட வேண்டுமென்றும் குடிகளைக்கேட்டவரல்லர். இவ்வொரு விஷயத்தினாலேயே அரசியின் செட்டும் கட்டும் நிதானமும், விதரணமும், ஒருவாறு வெளித்தறியலாகும்.

அரசியின் மிதவிரயத்தைப் பற்றியும், அதில் அவர்க்குள்ள விருப்பத்தைப்பற்றியும், சில சங்கதிகள் இங்கு விவரிக்கலாகும். ஐரோப்பா கண்டத்தில் உள்ள அநேக அரசர்களுக்கும் பிரபுக்களுக்கும் உடுப்புகள் செய்து

கொடுப்பவனாகிய பாரிஸ் வர்த்தகனொருவன், சிலநாளைக்குமுன், நியாயசபையில் ஒரு வழக்கில் இவ்விஷயமாகப் பிரஸ்தாபிக்கவேண்டி வந்தகாலத்தில், ஐரோப்பிய அரசர்களுக்குள்ளே தன்னிடத்தில் உடுப்பு செய்வித்துக்கொள்ளாதவர் இங்கிலாந்து மஹாராணி ஒருவர்தாம் என்று சொன்னானாம். இதனால் இராணியவர்கள் வீணாகப் புச்சமும், குச்சமுமான இடம்பமான உடைகளில் பணத்தைக் கொட்டுவதில்லையென்பது நன்றாக விளங்கும்.

இளவரசி, பல சமயங்களிலும் தாமே நேரிட்டுக் கடை கண்ணிகளுக்குப்போவது வழக்கம். ஒருநாள், தாம் ஒரு நகைக்கடைக்காரன் கடைக்குப்போயிருந்த காலத்தில், அங்கு இளம்பிராயமுள்ள துரைமகள் ஒருவள் தங்கக்கொலுசொன்று வாங்கவேண்டி வெகு நேரம் பலதினுசுகளைப் பரிசோதித்துப் பார்த்தும் திருப்திப்படாமல், கடைசியில் ஒரு கொலுசை ஆராய்ந்து எடுத்துக்கொண்டு விலையை விசாரித்ததில், அது அதிக விலைபெற்றதாயிருந்ததுகண்டு, கொஞ்சம் முகம்வாடி "அம்மா! இவ்வளவு விலை கொடுத்து எனக்கு வாங்க நிர்வாகமில்லை" என்றுசொல்லி அதைத்திரும்பக்கொடுத்து

விட்டு இன்னென்று இலகு விலைக்கு வாங் கிக்கொண்டுபோனுள். அதைப் பார்த்துக் கொண்டிருந்த இளவரசி, அவள்போனபின், கடைக்காரனை நோக்கி "இவள் பெயர் உனக் குத்தெரியுமா?" என்று கேட்க அவன் தெரி யும் என்றதும் "அவள் விரும்பின கொலு சை அவளுக்கு அனுப்பி தனக்கு வாங்கச் சக்தியில்லாததொன்றை வாங்காமல் தன் விருப்பத்தை அடக்கிய அவள் குணத்துக்கு மெச்சி விக்டோரியா இளவரசி அதை அவ ளுக்குப் பரிசாகக்கொடுத்தனுப்பினுர், என் று தெரிவிப்பாய்" என்று உத்தரவு செய் தார்.

இதற்கு நெடுநாளைக்குப்பின், அரசியின் உருவம் எடுக்கப்பட்ட ஒரு காலத்தில், அவர் யாதோர் நகைகளும் பூட்டிக்கொள்ளாமல் ஒருகறுப்புப்பட்டுமாத்திரம் உடுத்து உருவம் எடுக்கத் தயாராயினுர். அப்போது, அருகில் இருந்தவர்கள் "ஏதாவது சில நகைகள் பூட் டிக்கொண்டால் அலங்காரமாயிருக்குமே" யென்ன, அரசி "வேண்டாம்; இவ்வுருவம் என் பிரஜைகள் பலரும் பார்க்கக்கூடியதா கலினுலும், என்னுல் ஆனவரையில் அவர் களுக்குள்ளே வீண்செலவு செய்வதைத் த விர்க்கவேண்டுமென்பது என்னிச்சையாத

லாலும், இப்படியேதான் இருத்தல்வேண்டும்." என்றனர். (48-வது பக்கத்திலுள்ள படத்தைப்பார்க்க.)

இளவரசி யாதேனும் ஒரு தப்பிதம் செய்தால், "தான்பிடித்த முயலுக்கு மூன்றேகால்" என்று சாதிக்கும் சில குணக்கேடர்களைப் போல் பிடிவாதம்பண்ணாமல், அதை உடனே ஒப்புக்கொள்ளும் சுபாவமுடையவர். ஒரு நாள் ஒரு துஷ்டநாயைக்கண்டு, அதனோடு குழந்தைகளின் வழக்கம்போல விளையாடப் போயினர். அந்நாய்க்குடையவன் " அம்மா, அது பொல்லாத நாய்; ஒருவேளை கடித்து விடும்; அதனிடத்தில் போகாதேயும்" என்னவும் கேளாமல் அதனுடன் விளையாட, அது வெள்ளென்று குரைத்து மேலே பாய்ந்தது. நாய்க்காரன் அவரை அது கடித்து விட்டதோ என்று பயந்தபொழுது, அவர் அவனை நோக்கி, "பயப்படாதே, நீ சொல்லியது சரியே, நான் செய்ததுதான் பிசகு; அது இந்தத் தடவை என்னைக் கடிக்கவில்லையாயினும் இனி அதனோடு விளையாடுதல் பிசகென்றறிந்தேன். இனி ஜாக்கிரதையாயிருப்பேன்" என்றனர்.

இளவரசியை அவர் தாயார் விளையாட்டில் கூட மனம்போனபடி ஒருகாரியத்தை அரை

குறையாகப்போட்டுவிட்டு இன்னொரு காரி யத்தைத் தொடங்க இடங்கொடுப்பதில்லை. ஒருநாள் விளையாட்டாக அவர் வைக்கோலை வாரிப் போர்போட்டுக்கொண்டிருக்கையில், அது முழுதும் முடியுமுன்னமே, இன்னொரு விளையாட்டின்மேல் திருஷ்டியாய் அதை அப் படியே எறிந்துவிட்டுப்போயினர். அதுகண் டு, தாயார், அவரைப் போகவொட்டாமல் தடுத்து வைக்கோல் முழுதும் போர்போட்டு விட்டே போகும்படி ஆஞ்ஞாபித்தார்.

இவ்வாறு, குழந்தைப் பருவத்தில் பழகிய பழக்கத்தால் அரசியின் இயற்கையான குண மும் செயலும் வெகுவாக விளங்கியவற்றில் இன்னம் இரண்டொரு அம்சங்களைக் குறிப் பிட்டு, இவ்விஷயத்தை முடித்துவிடுவோம். அரசி பால்யத்திலேயே, காலவினியோகத் தில் மிக்க கவனமுள்ளவராகக் கற்பிக்கப்பட் டனர். அரசி ஒவ்வொரு காரியமும் அரைக் கணமேனும் தாமதியாமல் குறித்த காலத்தி லேயே செய்துமுடிக்கும் கொள்கையுடைய வர். நம்மவர்களுக்குள் சில உத்யோகஸ்தர் களும், பிரபுக்களும், ஏதேனும் காரியமாக ஒருவர் அவரைத் தரிசிக்கச் சென்றால், அ வர் வந்த காரியம் எவ்வளவு தலைபோகிற அவ சரகாரியமானாலும் சரி, அவர்களுக்கு இன்

னம் அதுபோன்ற அவசரமான காரியம் எவ்வளவு இருந்தாலும் சரி, அவ்வையொன்றையும் ஆலோசியாமல், உடனே தரிசனம் கொடுத்தால் எங்கே தமக்கு கௌரவக்குறைச்சல் வந்துவிடுமோ என்னும் மௌட்டியத்தினால், தமக்கு யாதொரு காரியமும் இல்லாமல் இருந்தாலும், இரண்டு மணிநேரம் மூன்றுமணிநேரம் காக்கவைத்துப் பின்பு, "இப்போது பார்ப்பதற்குச் சமயமில்லை. நாளைக்கு வரச்சொல்லு" என்று மகா கௌரவமாக அனுப்பிவிடுவதைப் பலமுறையும் நமது அனுபவத்தில் நாம் பார்த்திருக்கலாம். அரசியோ அப்படியல்ல. தமக்காகப் பிறரை க்ஷணமாத்திரமும் அனுவசியமாகக் காக்கவைப்பதில்லை. அரசர்களுக்குமரியாதை காலநிஷ்கர்ஷை யென்பர். இவ்விஷயத்தில் அரசி ஒருபோதும் தவறுவதேயில்லை. "காட்சிக்கெளியன் கடுஞ்சொல்லனல்லனேல், மீக்கூறும் மன்னனிலம்" என்ற இறைமாட்சிக் குணங்கள் அரசிக்கேயுரியனவாகச் சொல்லத்தகும்.

மேற்கூறியவையல்லாமல், இன்னொருவிஷயமும் பால்யப்பழக்கத்தால் அரசிக்குண்டான நற்குணத்தை விளக்கும். அரசி தமது ஊழியக்காரர்களிடத்தில் மிக்க ஆதரவும்

அநுக்ரகமும் உடையவர். தமது ஊழியக்காரர் தமக்கு எவ்வளவு பிராணனைக்கொடுத்து உழைத்தபோதிலும் திருப்தியடையாமல், எப்போதும் அவர்கள்மேல் சலிப்பும் கோபமும் கொள்ளும் சில பிரபுக்களைப்போலல்லாமல், அவர் தமக்குச்செய்த உதவிகளைப் பலமுறையும் எடுத்துச்சொல்லி சிலாகித்துக் கொள்ளுவார். தனது நேசமுள்ள சேவகன் ஒருவனையிழந்துபோன ஒரு தனவானுக்கு அவ்விஷயத்தைக் குறித்து எழுதினகாலத்தில், அரசி, "நன்றியுள்ள சேவகனையிழத்தல் சிநேகிதனையிழத்தலபோல என் மனசுக்கு அருந்துயர் விளைக்கும்" என்று எழுதியிருக்கின்றனர். இன்னொருகாலத்தில் தம் கணவருக்கு நெடுநாளை ஊழியக்காரன் ஒருவன் இறந்துபோனனென்று கேள்விப்பட்டு அதைப்பற்றி எழுதும்போது, "இதை எழுத என் மனம் கொள்ளவில்லையே; இம்மரணத்தை நினைக்க எனக்கு அடக்கமுடியாத அழுகையும் விசனமும் உண்டாகின்றதே. இச் சேவகனிடத்தில் எத்தனையோ விசுவாசமும் பிரீதியும் வைத்திருந்தோம். அவனை நினைக்குந்தோறும் கண்ணீர் தாரைதாரையாக வடிகின்றதே" என்று எழுதியிருக்கின்றனர்.

இளவரசி, அதிபால்யம் முதலாக மிக்க

தர்மசிந்தையுள்ளவராகித் தமக்குக் கிடைக்கும்பொருள் எல்லாவற்றையும் ஏழை பரதேசிகளுக்குக் கொடுத்து உதவிசெய்வது வழக்கம். ஒருநாள், தாம் மெச்சிக்கொண்ட ஒரு நாடகமாடும் பெண், தன் புருஷனையிழந்து வறுமையால் வருந்துகின்றாளென்று கேள்விப்பட்டுத் தமது தாயாரிடம் அவளுக்காக ரூபாய் 100 வாங்கித் தாம் சேர்த்து வைத்த பணத்தில் ரூபாய் 100-ம் சேர்த்து, அந்த ரூபாய் 200-ையும் தாமே கொண்டு போய் அவ்வேழை ஸ்திரீக்குக் கொடுத்து அவள் வருத்தத்தை மாற்றினார்.

தமது பிதாவுக்கு நெடுநாளைச் சேவகன் ஒருவன் இருந்தான். அவனுக்கு ஒரு பெண்ணிருந்தாள். அப்பெண் தேக அசௌக்கியமாயிருந்தகாலத்தில், இளவரசி அடிக்கடி போய் அவளைப் பார்த்து வருவது வழக்கம். பின்பு தாம் அரசியானபின் தம்முடைய காரியத் தொந்தரவில் அப்பெண்ணை மறந்துவிடாமல் அவளுக்கு ஒரு வேத புஸ்தகமும் வேறு சில பொருள்களும் ஞாபகார்த்தமாய் அனுப்பினார். அப்பெண் அவற்றை மிக்க மகிழ்ச்சியோடு பெற்று அரசியின் தயாள குணத்தை நினைந்து கண்ணீர்பெருக அப்பொருள்களைப் பலருக்குங் காண்பிப்பாள். இவ்வாறு கல்வி

யறிவுகளில் நாளுக்குநாள் விருத்தியடைந்து நற்குண நல்லொழுக்கங்களில் சிறந்து இள மதிபோல அழகும் வடிவும் நிரம்ப வளர்ந்து வருகையில், தாம் மேலால் ஆளுதற்குரிய நாடுநகரங்களை நேரிட்டுக் கண்ணாரப்பார்வை யிடும் பொருட்டும் ஜனக்கூட்டங்களைக் கண்டு திகைப்படையாமல் பழக்கமடையும்பொருட் டும் வருஷாவருஷம் தாயாருடன் வேடிக்கையாகப் பிரயாணம் செய்து வருவாராயி ஞர். அவ்வாறு பிரயாணம் செய்துவருகை யில் ஒரு தடவை **ப்ளிமத்** நகருக்குச் சென்று அங்கு மரக்கலங்கள் செய்யும் இடங்களைப் பார்வையிட்டு அக்கப்பல்வேலைகளை நடத் தும் மேல்விசாரணைத் தலைவரால் உபசரிக் கப்பட்டனர். அப்போது அங்குநடந்த ஒரு விஷயம் இளவரசியின் நற்குணத்தைத் தெரி விக்குமாதலின், இங்கு குறிப்பிடத்தக்கது. அவ்விசாரணைத் தலைவரின் புத்திரி உடம்பு சௌக்கியமில்லாமல் இருந்ததனுல் இள வரசி தாமே தாயாரோடு அவள் அறையில் அவளைச் சென்று கண்டதுமல்லாமல், அவள் அரசிக்கு ஓர் ஆசனம் போடும்பொருட்டு எழுந்திருக்க, அரசி "வேண்டாம், நீ சிரமப் படவேண்டாம்; நானே எடுத்துப்போட்டுக் கொள்ளுகிறேன்" என்று அங்கிருந்த நாற்

காலியொன்றை எடுத்துப்போட்டுக்கொண்டு வீற்றிருந்தனர்.

இளவரசி தமது 18-வது பிறந்த நாளாகிய 1837ஞு மேயீ 24உ தமது பால்யதசை நீங்கித் தாமே சுயமாகக் காரியங்களை நடத்துதற்குரிய ஈட்டை அடைந்தனர். அன்று காலையில் 7-மணிக்கு அவரது பள்ளியறைச் சன்னலின் புறத்து திருப்பள்ளியெழுச்சிப் பாட்டொன்று பாடித் துயில் எழுப்பப்பட்டார். அப்பாடல் பின்வருமாறு :—

"வேனில் கனவெனவே வீங்கு மொளிவிரிக்கும்
வானிற் பறவை மரந்தோறும் பாடுவன ;
மானக் கதிரோனே! மற்றுன் னிளஞ்சுடரைத்
தேனுற்ற **மேமலர்***மேற் செவ்வே பொழிகுகவே."

[மேல்

"தெய்வதங்காள்! எங்களெழிற் செய்ய செழுமலர்
மெய்விளங்கு முங்கள் விரிசிறையை மேல்விரித்துத்
தொய்வுதரும் வெய்ய துயர்க்காற் றடிக்குங்கால்
நைவிரிய **மேமலரை** நன்குநீர் காக்கவே."

இவ்வாறு பாடித்துதித்து எல்லோரும் இளவரசியைத் தரிசித்துப் பெருமகிழ்ச்சி கொண்டார்கள். அன்று, பிறந்தநாள்உத்ஸவம் மிகச்சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அ

* "The fairest flower of May" in allusion to the fact that the Queen was born in May.

ரண்மனையில், பிரபுக்கள் முதலானோர் அநேகருக்கு விருந்துகள் செய்யப்பட்டு, ஆடல் பாடல்களும், வாணமத்தாப்பு வேடிக்கைகளும், இன்னம் பண்டிகை தினத்தில் கொண்டாடப்படும் பல வரிசைகளும், சிறப்பாகச் செய்யப்பட்டன. அரசன் அன்று வைத்த ஆட்டக்கச்சேரியில், இளவரசி முதல் முதல் தமது தாயாருக்கும் மேலான உயர்ந்த ஸ்தானத்தில் வைத்துக் கௌரவிக்கப் பெற்றனர். அரசன் தன் அன்பைத்தெரிவிக்கும்படி இளவரசிக்கு இரண்டாயிரம் ரூபாய் விலைபெற்ற ஓர் சிறந்த வாத்தியப்பெட்டியை வெகுமதியாகக் கொடுத்தான். அங்குவந்து கூடிய பெரியோர்கள் எல்லோரும், இளவரசிக்கு தக்கபடி கல்விமுதலியவைகளைக் கற்பித்துத் தங்களுக்குச்செய்த பேருதவிக்காக, **கேன்ட் பெருமாட்டி**யைத்துதித்து அவருக்கு வந்தனோபசாரங்கள் பலவும் செய்தனர்.

இனி, அரசியின் வடிவழகைப்பற்றிச் சொல்லுமிடத்து, ஒருவர் "அவர் குழந்தைப் பருவத்தில் கொழ கொழவென்று வளர்ந்து நல்ல ஆரோக்கியமுடையவராயிருந்ததையன்றி அள்ளிக்கொள்ளும் பேரழகையுடையவர்" என்றும், ஒருவர் "ஆகா! குழந்தையின் வடிவும் குறியும் பார்த்தால் இவர் ஒரு

நாள் நம்தேசத்துக்கு அரசியாதல் நிச்சயம் என்று நன்ருக விளங்குகின்றது" என்றும், இன்னொருவர் "குழந்தையின் மலர்ந்த முகமும் அகன்று பரந்த கண்களும் சிறந்த முடியும் எவ்வளவு இனிமையானவை!" என்றும் ஓதியிருக்கின்றனர். இளவரசியின் 10-வயதுப்பருவத்தில் அவரது வடிவைப்பற்றிப் பேசும் ஒருவர் "அவர் அவ்வளவு அழகாகத் தோன்றவில்லை" என்றும், 18-வயதாயிருந்த காலத்தில் அவரது வடிவழகைக் குறிப்பிட்ட ஒருவர் "இளவரசியின் அழகின் நலம் அவர் உருவம் தீட்டிய படங்களில் விளங்குவதிலும் எவ்வளவு சிறந்துள்ளது! இங்கிலாந்தை ஆளப்போகும் அரசிக்கு இவ்வளவு அழகு எதுக்கு? அநாவசியமே!" என்றும் இப்படி பலரும் பலவாறு அபிப்பிராயப் பட்டிருக்கின்றனர். ஆனல் ஒன்று; அரசியின் ரூபலக்ஷணம் கண்டவர் மனமும் கண்ணும் கவர்தரும் தன்மையதன்றென்று தோன்றுமாயினும், அரசி சிலரைப்போல் நடையுடை ஆபரணங்களால் செயற்கையழகு செய்துகொள்ளும் சுபாவமுடையாரல்லராயினும், எந்தச் சபையிலும் எத்தனை அழகைச்சுமந்த அதிசுந்தரமான நங்கையர் கூட்டத்திலும் அவரது ராஜதேஜசும் உன்

னதபாவமும் தாரகைக்கூட்டத்தில் சந்திர னைப்போல அவரைப் பிரித்தறியும்படி பளிச் சென்று ஒளிவிட்டு விளங்கியன. இத்தன்மை யானது அரசிக்கு பாலயத்திலேயன்றி இப் போதும் சிறந்திருக்கின்றது. “பறவையின் அழகு சிறையினால் தோன்றும்” என்னும் பழமொழி அரசியின் திறத்துப் பொய்த்துப் போனதென்று பலமுறையும் காட்டப்பட் டுள்ளது. இத்தகையான அரசியின் பெரு மிதத்தோற்றத்துக்குக் காரணம் யாதென் னில், அவர் தாமே தமது ராஜ்யத்தில் தலை மையானவரென்றும், தமக்கு மேம்பட்டவர் ஒருவரும் இல்லையென்றும், தாம் தலைமுறை தலைமுறையாக அநேக அரசர்கள் தாங்கி வந்த முடியைத் தாங்குபவர் என்றும், உள் ளெழுந்து தோன்றும் எண்ணமேயாகும்.





Her Majesty Queen Victoria in 1837.

மஹாராணியார் பட்டத்துக்கு வந்தவருஷம் எடுத்த படம், (1837)
(வயது 18.)

## III.

### சிங்காசனம் ஏறினது.


The Coronation Chair.
பட்டாபிஷேக ஆசனம்.

இராஜவம்சத்தில் இளவரசியிலும் முந்திப் பட்டத்துக்குரியோர் பலரும் ஒருவர்பின் ஒருவராகத் தெய்வகதியால் நீங்கிவிட்டபடியால், இளவரசியே முடிவில் பட்டத்துக்குரியர் ஆயினர். ஆனால், இந்தசசங்கதியை அவர் தாயார், தமது புத்திரி தம்நிலைமையை உண்மையில் இன்னதென்று பால்யத்தில்தானே அறிவாராயின், அதனால் அகங்கரித்து கர்வங்கொண்டு ஒருவேளை வீணான டாம்பீகத்தில் இச்சைகொள்வாரோ என்னும் அச்சத்தால, அவருக்கு நெடுநாள் தெரிவிக்காமல் 12-வயது வரையிலும் இரகஸ்யமாகவே வைத்திருந்தார். அப்பொழுது ஒருநாள், இளவரசி சில தினமுன் ஒரு கடையில பார்த்த அருமைப் பண்டமொன்றை வாங்க ஆசைகொண்டு, உடனேவாங்கக் கையில் பணமில்லாமையால் அதைத் தனக்காக வைத்துவைக்கும்படி சொல்லிப், பிந்திவந்து வாங்கிக்கொண்டு போகச் சென்றார். தான் வாங்க ஆவலுற்ற பண்டத்தை வாங்கிக்

கொண்டு கடையை விட்டு வெளியில் வரு கையில் வாசற்படியில் பசியால் ஒட்டியுலர்ந் து ஜீவன்போகும்படியான ஸ்திதியிலிருந்த ஓர் எளியவன், கால் தள்ளாடக் கண்பஞ் சடைய, நாக்குழற, நன்ருகப்பேசவும் சக்தி யின்றி, இளவரசியின் முன்வந்து கையை நீட்டி முணுமுணுத்துப் பிச்சைகேட்டான். இளவரசி அவனுக்குக்கொடுக்கத் தன்னிடத் தில் ஒன்றுமில்லேயே யென்று வருத்தப்பட் டுச்சொல்ல அவன் "இல்லேபா, ஆனுல் போ கிறேன்" என்று தட்டித்தள்ளாடிக்கொண்டு அப்பால் போகமுயன்ருன். அந்தக்காட்சி யைக்கண்டு இளவரசி மனமுருகி, சரேலென மறுபடியும் கடைக்குள் நுழைந்து வியாபாரி யிடம் சென்று இதை மறுபடியும் எடுத்துக் கொண்டு இன்னம் கொஞ்சநாளேக்கு எனக் காகவைத்துவைப்பீரா என்று கேட்டார். வியாபாரி 'ஆகா' என்று சொல்லி, உங்கள் ப ணத்தைத் திருப்பிவிடட்டுமா என்று கேட்க, இஷ்டப்பட்டுக் கொடுத்தால் பெற்றுக்கொள் வேன் என்ருர். அந்தப்படி வியாபாரி ப ணத்தைக்கொடுக்க, அதை வாங்கிக்கொண்டு ஓடிவந்து அப்படியே வாசலிலிருந்த எளிய வன் கையில் கொடுத்தார். நித்தியதரித்திர னுக்குப் பெருநிதி புதையல அகப்பட்டாற்

போல் அவன் அவ்வளவு பணத்தைத் தீண்டப் பெற்றதே பாக்கியமென்று புளகாங்கித மடைந்து மனதார இளவரசியை வாழ்த்தி "மகராஜி, கொடைவள்ளல், ஒருநாள் முடிசூட்டிப்பட்டமாளும் அரசியாகும்படி கடவுள் அனுக்ரகிப்பார்" என்று ஹிருதயபூர்வமாகச்சொல்லிச சென்றனன். இளவரசி நடந்த விர்த்தாந்தங்களைத் தம்தாயாரிடம் சொல்லியபோது எளியவன் வாழ்த்தியதைச் சொல்ல அவர் தாயார், அப்பொழுது, இளவரசி வாஸ்தவத்திலே பட்டத்திற்குரியவராயிருப்பதை அவர் அறியாது ஒளித்துவைத்திருத்தல் இனி நியாயமல்லவென்று உணர்ந்து, அது விஷயத்தை அவருக்குத தெரிவிக்கத் தீர்மானித்து அதற்காகப் பின்வரும் உபாயம் செய்தாரெனத்தெரியவருகிறது. (மேலே சொன்னகதை உண்மையெனச்சாதித்து சமீபகாலத்தில் ஒருவர் வரைந்திருக்கிறார்.) ஒருநாள், இளவரசியின் சரித்திரபுத்தகத்தில் ராஜவம்சாவலியை விவரித்துக் காட்டிய நூதனமான ஓர் காயிதத்தை வைக்கும்படி இளவரசியின் உபாத்தினியாகிய லேஷன் துரைசானிக்கு ஆஞ்ஞாபிக்க, அவரும் அவ்வாறே செய்தனர். இளவரசி பாடம் முடிந்ததும் அப்புத்தகத்தில் ஒரு காயி

தம் புதிதாக இருந்ததைக்கண்டு, 'இது எது? இத்தனை நாளாகக் காணேமே' என்று பிரித்துப்பார்த்து அதன் விவரங்களை அறிந்ததும், உபாத்தினியை நோக்கி, "நான் எண்ணியிருந்ததைவிட அரசுரிமைக்கு அதிசமீபமாய்விட்டதாகக் காண்கின்றேனே" என்று, பின்பு சற்று நிதானித்து, மறுபடியும் உபாத்தினியைப்பார்த்து, "பார்த்தீரா, எப்போலும் சிறுபிள்ளைகள் இந்தச்சங்கதியை அறிவாராயின், அரசியலில் உள்ள வருத்தங்களை அறியாமல் மிக்க கர்வமடைந்து தம்மைக் கொண்டாடிக்கொள்வார்கள். அரசியாவதில் எவ்வளவோ பெருமை உளளதுதான் மெய்யே; ஆகிலும், அதில் எவ்வளவோ அதிலும் மிக்க பொறுப்பும் பாரமுமுள்ளது. நான் நல்லவளென்று பெயரெடுப்பேன். மற்றப் பிள்ளைகளைப்போலன்றி எனக்கு அநேக அருமையான விஷயங்களைக் கற்பிப்பதின் உத்தேசமும் இன்றுதான் அறிந்தேன். நான் நல்லவளாயிருப்பேன்" என்றனர். இவ்வாறு "நான் நல்லவளாயிருப்பேன்" என்று குழந்தைப்பருவத்தில் கொண்ட உறுதியை அரசி இன்றும் கைவிடவில்லை. அவர் பெற்றிருக்கும் பெருமைக்கெல்லாம் அதுவே சூக்ஷ்ம காரணம்.

இளவரசியைப் பட்டத்துக்கு வாராமல் தடுத்து, அவரது இளந்தந்தையர் இருவரில் ஒருவராகிய கம்பர்லாண்ட் பிரபுவை அரசாக ஏற்படுத்துவதற்குச் சில துராலோசனைகளும் கிர்த்திரமச்செய்கைகளும் நடந்தனவாயினும், அவையொன்றும் முடிவில் பலிக்கவில்லை. இராஜ்யத்தில் உள்ளவர் அனைவரும் ஒரு மனசாக அழைத்துக்கொண்டாட அவரே பட்டத்துக்கு வந்தனர்.

வில்லியம் ராஜன் 1837-ம் ௵ ஜூன்௴ 20௳ தேகவியோகமாக, உடனே விக்டோரியாவவர்கள் அரசைக் கைக்கொள்வாராயினர். இளம்பெண்ணாயிருந்த அரசி அப்போது தமக்குரிமையாகக்கிடைத்த அரசை ஸ்வீகரித்த தன்மையையும், அமைச்சர், பிரபுக்கள், முதலானோரோடு கொலுவிருந்த தன்மையையும், யாவரும் அறிய விரும்புவார்களாதலின், அவ்விஷயங்களை இங்கு சிறிது விவரமாக எடுத்துச் சொல்வோம். அரசன் இராத்திரி இரண்டரைமணியளவில் இறந்துபோகவும், இளவரசிக்கு அவ்விஷயத்தை உணர்த்தும் பொருட்டு *'காண்டர்பரி' பிர

* The Arch Bishop of Canterbury — இவர் மதபோதகர்க்கெல்லாம் தலைவர்.

தான அத்யக்ஷரும் *அரண்மனைக் காரியக் காரரும் ஆகிய இருவரும் புறப்பட்டு கேன்சிங்டன் மாளிகையை நோக்கி அதிவேகமாகச்சென்று அங்கு அருணோதயத்தில் 5-மணி வேளையில் வந்துசேர்ந்தார்கள். அப்போது, அரண்மனையைச் சூழ்ந்த தோப்புகளில் பக்ஷிகள் தூங்கியெழுந்து அங்குமிங்கும் பறந்து பாடிக்கொண்டிருந்தன. அரண்மனையில் ஒருவரும் இன்னம் தூங்கியெழாமையால் எங்கும் நிச்சப்தமாயிருந்தது. வந்தவர் இருவரும் வாயிலில நெடுநேரம் நின்று தம்மாலானமட்டும் கதவைத்தட்டி, மணியை அடித்து தொண்டையைவிட்டுக் கத்திக் கூப்பிட்டும், ஒருவராயினும் அவர்கள் வரவை அறியவில்லை. பின்பு வாயிலாளன் விழித்தெழுந்து கதவைத்திறந்து அவர்களை உள்ளேவிட்டான். அவர்கள் உள்ளே சென்றபிறகும் அரண்மனை முற்றத்தில் சிறிதுநேரம் காத்திருக்கவேண்டியதாயிற்று. பின்பு ஏவலாட்களில் ஒருவன் வந்து அவர்களை ஓர் அறையில் இருக்கும்படி விட்டுவிட்டு அவர்கள் வரவை இளவரசிக்குத் தெரிவிக்க அரசியின் தாதிகளை எழுப்பப்போனான். போனவன் போனதுதான். ஒருவரும் ஏனென்

* Lord Chamberlain.

று கேட்பவரில்லை. அவர்கள் நெடுநேரம் காத்திருந்தும் ஒருவரும் வாராமையால், 'இதேது! நம்மை இவர்கள் முற்றும் மறந்து விட்டார்போலிருக்கின்றதே!" என்றெண்ணி மறுபடியும் மணியை அடித்துச் சேவகனைக் கூப்பிட்டு அரசியின் சேடியைக்கொண்டு அரசியைத் துயிலுணர்த்தித் தங்கள் வரவைத் தெரிவிக்கும்படி வேண்டினார்கள். அதன் பின்னும் ஒருவரும்வாராமையால இன்னொருதரமும் மணியை அடிக்க, அப்போது, சேடி தானே அவர்களுக்கு முன்வந்து, 'இளவரசி இனிதாக அயர்ந்து நித்திரை செய்கின்றனரே, எவ்வாறு நித்திரைபங்கம் செய்வேன்,' என, அவர்கள், "நாங்கள் ராஜகாரியமாக வந்திருக்கின்றோம். அரசியின் நித்திரைக்குப் பங்கம் வந்தாலும நாங்கள் அவரை உடனே காணவேண்டியதுதான்" என்றனர். 'அரசி' யென்ற வார்த்தை காதில் பட்டதும், சேடி ரகஸ்யம் இன்னதென்று தெளிந்து உடனே விரைந்துசென்று இளவரசியைத் துயில் எழுப்பி சமாசாரத்தைத் தெரிவித்தாள். அரசி அதைக்கேட்டதும் அரைக்கணமேனும் வந்தவர்களைக் காக்கவைக்காமல் படுக்கையை விட்டுத் திடும் என்று குதித்து, மேலே மாத்திரம் ஒரு சால்வையை விரித்துப்போர்த்துக்

கொண்டு, தமது இராவுடையுடனே அவிழ்ந்த கூந்தல் தோள்மேற்புரள, இருவிழிகளிலும் கண்ணீர் ததும்ப, அவர்களுக்கெதிர் வந்து நின்றனர். அவர்கள் அரசிக்குத் தாம் சொல்லவந்த விர்த்தாந்தங்களை விவரித்துரைக்கவும், அரசி 'காண்டர்பரி' அத்யக்ஷரை நோக்கி, "ஐயா, எனக்காகக் கடவுளைப் பிரார்த்திக்கத் தங்களை வேண்டிக்கொள்கிறேன்" என்றனர். உடனே அவர்கள் மூவரும் தரையில்படிந்து அரசிக்கு மேல்வரும் பாரங்களைத் தளராமல் வகிப்பதற்கு அருளும் வலியும் கிருபைசெய்யவேண்டுமென்று கடவுளைப் பிரார்த்தித்தார்கள். நமது அரசி அரசை முதல் முதல் ஸ்வீகரித்தது இவ்வாறென்றறிக. இவரது அரசு பல்கிப் பெருகி பிரஜைகளும் தாமும் ஒருவர்க்கொருவர் மாறு அன்பு பாராட்டி நேசித்துவருதல் ஓர் ஆச்சரியமாமோ?

"செந்திரு வுறுகினும், தீமை சேர்கினும்,
நந்தலி லொருவினை நடத்தல் மேயினும்,
விந்தை செயீசனற் றுணையை வேண்டுகின்,
சிந்தையி னொருதுயர் செறியற் பாலதோ?"

இவ்வாறு பிரதான அத்யக்ஷரும் அரண்மனைக் காரியக்காரரும் அரசிக்குச் சமாசாரத்தைத் தெரிவித்துப் பிரிந்துபோனபின், அன்

றைக்கே பகல் 11-மணிக்கு இராணியவர்கள் தமது முதற்சபைக்கு எழுந்தருளுவாராயி ஞர். ஒரு பெண், தான் தரிக்கக்கூடிய அணி உடைகளில் கூட, இன்னது தனக்குவேண் டும் இன்னதுவேண்டாம் என்று தீர்மானிக் கப்போதாத இளம்பிராயத்தில், மகாதிர முள்ள மகாநுபவர்களும் கூட நம்மால் ஆகா தென்று அதைரியப்பட்டுப் பின்வாங்கி நிற் கத்தக்க பெரிய பாரத்தை நிர்வகிக்கவேண்டி வந்தமையால், அரசி எவ்வாறு தம் காரியங் களை நிறைவேற்றுவாரோ பார்க்கவேண்டு மென்று பலருக்கும் ஆவலாயிருந்தது. ஆத லால், அரசிகொலுவிருக்கப்போகின்றார் என் னும் சமாசாரம் கேள்விப்பட்டதும், தேனை விரும்பிவந்தடையும் வண்டுகள்போல, சிறி து நேரத்துக்குள்ளாக லண்டன் நகரிலும் சமீபத்திலுமுள்ள பிரபுக்கள் முதலிய பெரி யோர்கள் அனைவரும் வந்து கூடிவிட்டார்கள். பிரபுக்களெல்லோரும் வந்து கூடினதும், அவர்களுக்குள் அக்ராசனாதிபதியாயிருந்த வர் மற்றவர்களுக்கு அரசன் இறந்த சங்கதி யைத்தெரியச்சொல்லித் தாங்கள் எல்லோ ரும் ஏகமாய் இராணியின் சமுசத்துக்குச் செல்வதைவிட சிலர்மாத்திரம் சென்று அர சியைக் கொலுமண்டபத்துக்கு அழைத்து

வருதல் உசிதமாயிருக்குமென்ன, அவர்களும் அவ்வாறே ஆகுகவென்றனர். ஆதலின், அக் ராசஞதிபதியும் முதன்மையான வேறு ஆறு பிரபுக்களுஞ்சென்று அரசியைத் தரிசித்து அரசன் இறந்த சங்கதியையும் தாங்கள்வந்து கூடிய விருத்தாந்தத்தையும் உணர்த்தி வந்தார்கள். இராணியும் தமது இளந்தையர் இருவரும் எதிர்கொண்டழைத்து வரச் சபா மண்டபத்துக் கெழுந்தருளிப் பிரபுக்களுக்கு வணக்கம்செய்து சிங்காசனத்தில் வீற்றிருந்தனர். பின்பு, சபையோர்களைப் பார்த்து எள்ளளவேனும் கூச்சமும் குழப்பமுமில்லாமல் தாம் சொல்லவேண்டிய விஷயங்களைத் தெளிவாக யாவரும் கேட்கும்படிப் பின்வருமாறு படித்துச் சொல்லினர். அப்போது அரசியின் கலங்காத சாந்த நிலைமையைக்கண்டு மகிழ்ந்துகொண்டாடாதவர் ஒருவருமில்லை.

"எனது பிரியமான பெருந்தந்தையர் ஆகிய அரசர் இறந்துபோனதினால் ஜனங்களுக்குண்டானதுக்ககரமான பெரிய நஷ்டத்தால் இவ்விராஜ்யபாரம் எனக்கு வகிக்கக்கடமை ஆயிற்று. இந்த பயங்கரமான பாரத்தை இவ்வளவு பால்யத்திலும் இவ்வளவு சடிதியிலும் நான் தாங்க விதித்த கடவுள் அதனை

நிர்வகிக்கப் போதுமான வலியையும் எனக்குக்கொடுப்பார் என்றும், என்னிலும் வயது முதிர்ச்சியும் நெடுநாள் அனுபவமுமுள்ளவர்கள் பெறக்கூடிய துணையும் வலிமையும் என் களங்கமற்ற சிந்தையினாலும், பிரஜா சௌக்கியத்தில் நான் வைத்த ஆவலினாலும் எனக்கும் சித்திக்கும் என்றும் நான் நம்பியிராவிடின் இவ்வளவு மலைபோன்ற பாரத்தைச் சுமக்கவும் ஆற்றுவேனோ? கடவுளுடைய பரம ஞானத்தையும் என் பிரஜைகளின் நன்றியையும் விஸ்வாசத்தையுமே நான் உறுதியாக நம்பியிருக்கின்றேன். தம்பிரஜைகளின் சுதந்திரங்களையும் உரிமைகளையும இடைவிடாமல் கௌரவித்து இத்தேசத்தின் சட்டங்களையும் ஏற்பாடுகளையும் விருத்திபண்ணும் ஆசையினால் தம் பெயரைக் குடிகள் நேசித்துப்பத்திபூணும்படிச்செய்துகொண்ட வேந்தருக்குப்பின் நான் அரசாளப்பெற்றது எனக்கு விசேஷ அநுகூலமென்றெண்ணுகிறேன். இவ்விங்கிலாந்து தேசததில்தானே, மிக்க நேசமும் விவேகமுமுள்ள அருமைத் தாயாரின் விசாரணைக்குள்ளாக வளர்ந்து கற்பிககப்பட்டிருப்பதினால், என் சுதேச சட்ட திட்டங்களையும் சம்பிரதாயங்களையும் நேசித்துக் கௌரவிக்கப் பால்யமுதலாகப் பயின்

றிருக்கின்றேன். எல்லோருக்கும் அவரவர் மதங்களை அனுஷ்டிக்க சர்வசுதந்திரம அளிப்பினும் சட்டப்படி ஏற்படுத்தப்பட்ட மதத்தைத் தளராமல் நிலைநிறுத்துவது எனது நீங்காத முயற்சியாகும். என் பிரஜைகளில் ஒவ்வொரு வகுப்பினர்தம் க்ஷேமத்தையும சுகத்தையும் என்னால் கூடியவரையில் விர்த்திபண்ணி அவர்கள் உரிமைகளையும் எப்போதும் ஒரேதன்மையாக நான் காக்கக்கடவேன்."

இவ்வாறு படித்து முடித்தபின், பிரதான மந்திரிகளும் அரசியின் இளந்தந்தையர் இருவரும் அரசிக்குக் கீழ்ப்படிந்திருக்க உறுதிமொழிகொண்டார்கள். வயோதிகரான அவ்விரு சிறுதந்தையர்களும் அரசிக்கு முன் படிந்து பணிந்தமாத்திரத்தில் அவர்களுக்கும் தமக்கும் இயல்பாகவும் ஆளுகை சம்பந்தமாகவும் ஏற்பட்டுள்ள தாரதம்மியம் தம்மனதிற் சுருக்கென்று பதிந்ததுபோல சற்றே திடுக்கிட்டனர். இது ஒருவிஷயத்தில்தான் அரசிக்குண்டான சஞ்சலம் அவர் பார்வையிலும் நடத்தையிலும் வெளிப்பட்டது. அவ்விரு சிறுதந்தையரிடத்தும் அரசி அச்சபையில் காட்டிய நேசமும் செய்கையும் யாவர்க்கும் சந்தோஷத்தை விளைவித்



The Queen's First Privy Council.] [மஹாராஜ்ஞியாரின் முதல் சபை.

தன. ராஜசபையிலுள்ள மற்றவர்களோடு அவர்களிருவரும்வந்து ராஜபக்திக்கறிகுறியாக அரசியார் கையை முத்தமிட்டுப்போக வருகையில் இருவரில கட்டித்தள்ளாடிக் கொண்டுவந்த சஸ்ஸக்ஸ் பிரபு சற்றுதூரத்தில் இருந்தமையால் தம்மை எளிதில் எட்டமாட்டாமற்போக அரசிதாமே அரியணையிலிருந்து எழுந்து அவரைக்கிட்டியணைந்து அவா முத்தமிடக் கையை நீட்டினர். ஒருவர்பின்னொருவராக உறுதிமொழி கொள்ள வருபவர்களின் பெருங்கூட்டத்தைக்கண்டு சற்றுத் திகைத்தது போலத் தோற்றினாராயினும், அவர்கள் ஒருவரோடாயினும் ஒரு வார்த்தையேனும் பேசவுமில்லை; அவர்களின் பெருமையும் நிலைமையும் கொள்கையும் எப்படிப்பட்டவாயினும அவர்களிடத்தில் தமது முகக்குறியாலாவது நடத்தையாலாவது எள்ளளவேனும் வித்யாசம் காட்டவுமில்லை.

இவ்வாறு அரசியின் முதற்சபை கலைந்து பிரபுக்களெல்லாம் விடைபெற்று மீண்டபின் பிரதான மந்திரிகள் அரசியைக் கொலுக் கூடத்தில்வந்து தரிசித்தார்கள். இந்தச்சபையிலும் அரசி பிறந்தது முதல் அதுவே தொ

ழிலாகப் பயின்றதுபோலக் கொஞ்சமும் கலக்கமின்றி நிர்வகித்தனர்.

இந்தக்கோலாகலமெல்லாம் ஆனபிறகு, அரசி மிகவும் களைத்துப்போய் தம் அன்னையைச்சார்ந்து, அவரது மார்பில் விழுந்து கண்ணீர்பெருக விம்மியழுது பரவசமாயினர். பின்பு தேறிச் சாந்தமானபின், அன்னையைப் பார்த்து, "நான் இங்கிலாந்துக்கு அரசிதானென்று எனக்கு இன்னம் நம்பிக்கைப்படவில்லை. ஆயினும் அப்படித்தானென்று எண்ணுகிறேன்" என்றனர். பின்பு இரண்டுமணி நேரம் தாம் தன்னந்தனியே தமது அறையில் இருந்து அதுவரையில் நடந்ததும் அதின் மேல் நடக்கப்போவதும் ஆகிய எல்லாவற்றையும் மனத்தில் எண்ணிக் கடவுளை நோக்கி அன்போடும் தியானித்துத் துதித்து வேண்டியிருந்தனர். அதுமுதலாக அரசி தினந்தோறும் சிறிது நேரம் ஏகாந்தமாகவிருந்து கடவுளைத்தியானித்துத் துதிப்பதை விரதமாகக் கொண்டனர்.

அரசியின் அற்புதமான நன்மையையும், நேர்மையையும், தயாளகுணத்தையும் விளக்கும்சங்கதிகளில் சில இச்சந்தர்ப்பத்தில் எடுத்துக்காட்டத் தக்கவைகள். தமது பெரிய தாயாராகிய அடிலேய்ட் அரசாணிக்கு அவர்க்

கு நேரிட்ட பெருந்துயரைத் தணிக்கும் பொருட்டு ஆறுதலாக எழுதிய உபசாரக்கடிதத்தில், 'மாக்ஷிமைதங்கிய எம்மையாளும் மஹாராணியவர்களுக்கு' என்று வழக்கப்படியே விலாசம் எழுத அப்போது அருகிருந்தவர் அவர்பட்டமிழந்து விட்டதனால், 'எம்மையாளும் மஹாராணி' என்று விலாசம் எழுதுதல் சரியன்று என்றனர். அது கேட்டு அரசி "ஆமாம் அடிலெய்ட் அரசியின் நிலைமை மாறியிருத்தல் எனக்குத் தெரிந்தவிஷயமே. ஆயினும் அதை நானே அவர்க்கு முதல் முதல் உணர்த்தி ஞாபகமூட்டுதல் தகுமோ? நான் அப்படிச்செய்யேன்" என்றனர். ஆ! ஆ! அரசியின் நற்குணமானது இதில் எவ்வளவு விசதமாக விளங்குகின்றது பாருங்கள்! அம்மட்டோ? அரசமாளிகையான விண்ட்சர் அரண்மனையை அடிலெய்ட் அரசி அவரது சுகத்துக்கும் சௌகர்யத்துக்கும் ஏற்றபடி எவ்வளவு காலம் வேண்டுமாயினும் உறைவிடமாக உபயோகித்துக்கொள்ளலாமென்றும் அனுமதி கொடுத்தனர். இதுபோலவே ஒவ்வொரு விஷயத்திலும் எவ்வளவு சொற்பமானாலும் வரன்முறை தவறாமல் தமது கருத்தைச் செலுத்திவந்தனர்.

ஒருநாள் ஓர் இரத்தினவியாபாரி தமது பார்வைக்கு அனுப்பின ஹஸ்தகடகங்களில் 250-ரூபா பெறுமான ஒருஜோடிக் கடகங்களை அரசி தமக்குத் தெரிந்தெடுத்துக்கொள்ள, அத்தருணத்தில், தமது தாதிகளில் ஒருத்தி, தம் உத்தியோகஸ்தர்களில் ஒருவரின் மனைவி புருஷனையிழந்து கைம்பெண்ணாகி ஆதரிப்பாரில்லாமல் அரசிக்குச் செய்துகொண்ட விண்ணப்பத்தை அவர் கையில் கொண்டு வந்துகொடுத்தனள். அரசி அதைப்பிரித்து வாசித்ததும் சற்று ஆலோசித்துக் கடகங்களைத் திரும்பவும் பெட்டியில்வைத்து வியாபாரிக்கு அனுப்பிவிட்டு அந்த 250-ரூபாயையும் அவ்வேழைஸ்திரீக்கு அனுப்பிவிட்டார்.

கென்ஸிங்டன் அரண்மனைக்கெதிரில் உள்ள ஒரு பாதையில் ஓர் ஏழை மனிதன் நெடுநாளாகப் பெருக்கிக்கொண்டிருந்தான். அவ்வழியாகப் போகும்போதெல்லாம் இளவரசி அவனுக்கு அடிக்கடி வண்டியின் ஜன்னல் வழியாய் ஒன்று, அரை கொடுத்துப்போவது வழக்கம். இப்போது அரசியானபின் அவனைத் தாம் முன்போலச் சந்தித்தல் கூடாமையால் அவனுக்கு வாரத்துக்கு நான்குரூபாய் வீதம் அவன் ஆயுசு முழுதும் நன்கொடையா

கக் கொடுத்துவரும்படிக் கட்டளையிட்டார்.

அரசி தம் தந்தையார் பட்ட 5-லக்ஷம் ரூபாய்க் கடனையும் பட்டத்துக்கு வந்தபின் தாமே கொடுத்துத் தீர்த்தார். தம் தாயார்க்குக்கூடச் சிறிது கடன்கட்டிருந்ததாகத்தெரிந்து ஒருநாள் காலமே சத்தியசந்தரான அப்புத்திரி ஓர் காயிதக்கட்டை அவருக்கு மேல் விலாசம் எழுதி காலைப்போசனம் செய்யும் சமயத்தில் அவர் பக்கத்தில் வைத்தார். தாயார் அதைப் பிரித்துப் பார்த்ததும், தாம் வாங்கிய ஒவ்வொரு கடனுக்கும் செல்லு வைத்துக்கொடுத்த பத்திரங்களென்று கண்டு, சந்தோஷ மடைந்தார்.

தாம் பட்டத்துக்கு வந்த சில நாளைக்செல்லாம், ஓர் உத்சவத்துக்குப்போயிருந்த காலத்தில், அங்கு வண்டிகளின் கூட்டத்திலும் ஜனஙகளின் நெருக்கத்திலும் ஒரு சிறு பையன் தள்ளுண்டு கீழேவிழுந்து வண்டிச்சக்கரங்களின் கீழ் அகப்பட்டு நசுங்கிப்போகத் தெரிந்தான். நல்லவேளையாய் அருகில் இருந்த அரசி விரைந்துசென்று அவனைத் தூக்கி எடுத்துக் காப்பாற்றினார். அப்பையன்தான பின்பு 'மெலனேஷியா' தீவுகளின் மதபோதகர்களுக்கு அத்யக்ஷராக வரப் பெற்ற கோலரிட்ஜ் பாட்டிசன் என்பவர்.

## IV.

### மகுடாபிஷேகம்.



இராணியார் பட்டத்துக்கு வந்தபின் ஒரு வருஷகாலமளவும் மகுடாபிஷேக மஹோத்ஸவம் நடக்கவில்லை. அம்மஹோத்ஸவத்துக்கு வேண்டிய சாமக்கிரியைகளைச் சேகரிக்க அவ்வொரு வருஷகாலமும் சென்றது. பழைய கிரீடம் மிக்க பளுவாயிருந்ததனல், அதைத்தள்ளிப் புதிதொன்று அதில் பாதிக் கனமுள்ளதாய் 12-லக்ஷம் ரூபாய் விலைபெற்ற மணிக்ள் இழைத்து வெகு அலங்காரமாகச் செய்யப்பட்டது. ஆயினும், இப்போது நடுநாயகமாக விளங்கும் "ஒளிமலை" யென்று பெயர்பெற்ற கோகினூர் ஆகிய நமது தேசத்தில் பிறந்து சிறந்த மகாவயிரம் அரசிக்கு இன்னம் அளிக்கப்பட்டில்லையாதலின், அப்போது அம்மணியரசு அப்பெண்ணரசின் கிரீடத்தில் விளங்கப்பெற்றதில்லை.

இவ்வாறு, கிரீடம் முதலிய பல பொருள்களும் சேகரித்து இன்னம் வேண்டிய அநேக ஆயத்தங்களும் செய்துமுடிந்து சமஸ்தமும் தயாரானபின், 1838ஹு ஜூன்மீ

28உ அரசிக்கு முடிசூட்டும் சுபதினம் நியமிக்கப்பட்டது. அச்சுபதினத்துக்குப் பல நாள் முன்னமே, லண்டன் நகரவீதிகள் எங்கும், அம்மகோற்சவத்தைப் பார்க்கவந்த அந்நிய தேசாதிபதிகளின் பிரதிநிதிகளைச் சேர்ந்த பரிசனங்களாலும், இதர தேசத்தவர்களாலும், வெளிநாட்டுச் சனங்களாலும், ஏகமாய் நெருங்கிவிட்டது. அன்று லண்டன் நகரத்தின் ஜனநெருக்கத்தையும், வைபவத்தையும் எம்மால் எடுத்துரைக்கவும் முடியுமோ? "வாழு மன்னுயிர் பாவையும் ஒருவழிவாழ,—ஊழிநாயகன் திருவயிறுருத்துள திவ்வூர்" என்றபடி, அகிலசராசரங்களையும் பிரளயத்தில் அழியாது உய்யும்படித் தனது வயிற்றில் வைத்துக் காத்தருளிய கருணைக் கட்லாகிய எம்பெருமான் திருவயிற்றையே ஒக்கும் இந்நகர்; என்னும்படி இருந்தது. பெரிய பெரிய தனவந்தர்களான பிரபுக்கள் கூட, தமது வீடுகளை வாடகைக்குவிட விருப்பங்கொண்டவராயினர். ஒருவர் மூன்று நாளைக்குத் தமது வீட்டை வாடகைக்குவிட்டுப் பதினாறாயிரம் ரூபாய் சம்பாதித்தார். பட்டாபிஷேக தினம் கிட்டக் கிட்ட ஜனங்களுக்குள்ளுண்டான உற்சாகமும், போரவலும்,

சொல்லிமுடியாது. எல்லாரும் மகுடாபிஷேகமயக்கம் கொண்டவரானார்கள்.

அச்சுபதினத்தன்று சூரியோதயமாகுமுன்னமே, ஜனங்கள் எல்லோரும், மகுடாபிஷேகம் செய்யும் இடமாகிய "வேஸ்ட்மின்ஸ்டர் ஆபி" என்னும் தேவாலயத்தின் உள்ளும் புறமும், எள்விழ இடமில்லாமல், ஏகமாய் வந்து குவிந்து விட்டார்கள். நகரமெங்கும், அதிர்வெடிகளும், மணியோசையும், ஜனங்களின் காதுகளைத் துளைத்தன. பத்துமணியடித்ததும், அரசி சர்வாலங்கிருதபூஷிதராகி, தமது அரண்மனையை விட்டுப்புறப்பட்டு, பால்வண்ணப்பரிகள் எட்டுப்பூட்டிய பொன்மயமான இரதத்தில் ஏறிப், பீரங்கிகள் தமக்கு ஆசிகூறுதல்போல வாய்விட்டுத் தழங்க, அதன்மேல் வீற்றிருந்து, முன்னே வீரர்கள் வெற்றிக்கொடிகள் பிடிக்கவும், பதினெண்வகை வாத்தியங்களும் கடல்போல் முழங்கவும், அவர்பின் மெய்க்காப்பாளர் ஆயுதபாணிகளாய் அணியணியாக முதலில் செல்லவும், அவர்களின் பின் அந்நிய சமஸ்தான ஸ்தானாபதிகள் தத்தம் விருதுகளுடனே பரிசனர்சூழ இரதங்களில் செல்லவும், பின்னே ராஜகுடும்பத்தார்கள் அவரவர் இரதங்களில் ஏறிவரவும், ஆலயம் நோக்கிச் செல்வாராயினர்.

இவ்வாறு, பொன்மயமான இரதத்தின் மீது தருமதேவதை தானே எழுந்தருளியதுபோலும்விளங்கப் பவனிவரும் அரசியைக்கண்டு, ஜனங்கள் எல்லோரும் பூரண சந்திரனைக் கண்ட பொருதிரைக் கடலைப்போல, ஆரவாரித்தார்கள். வீதிகள் எங்கும்,

" நீளெழுத்தொடர்வாயினும் குழையொடுநெகிழ்ந்த;
ஆளகத்திஞேடரமியத்தலத்தினு மலர்ந்த ;
வாளரத்தவேல் வண்டொடு கொண்டைகள் மயங்
சாளரத்தினும் பூத்தன தாமரை மலர்கள்." [கச்

என்றபடி, இருபக்கத்திலும் உள்ள சாளரங்கள், மேன்மாடங்கள், வாசற்படிகள், மண்டபங்கள், எங்கும் மகளிரது மலர்முகங்களால் நிறையப்பெற்றன. ஆடவர்கள் அனைவரும்,

" ஆர்த்தனர் களித்தனர் ஆடிப்பாடினர் .
வேர்த்தனர் தடித்தனர் சிலிர்த்து மெய்ம்மயிர்
போர்த்தனர் நங்கையைப் புகழ்ந்து வாழ்த்தினர்
தூர்த்தனர் நறுமலர் தோடரும் வாயெலாம்."

என்றபடி, ஆரவாரித்துக்களித்துக் கையில் பிடித்த வஸ்திரங்களை மேலேவீசி "வாழ்க வாழ்கப் பல்லாண்டு வாழ்க, இங்கிலாந்தாளும் இறைவிவாழ்க, உலகெலாம் புரக்கும் உத்தமி வாழ்க" என்று வாய்விட்டுக் கூறி வாழ்த்திப் புஷ்பவர்ஷம் பொழிந்தார்கள்.

இவ்வாறு, நெருங்கியிருக்கும் ஜனக்கூட்டங்களையும் அவர்கள் தம்மை வாழ்த்தி ஆரவாரிக்கும் பேரொலியையும் கண்டு, அரசி கண்ணீர் பெருகி, வாய்துடித்து, மனங்கரைந்து, பரவசமாயினர். அங்கு சில சேவகர்கள் ஜனங்களைத் தண்டால் ஓச்சித் தாக்கி ஒதுக்குவது கண்டு கருணைக்குறைவிடமாகிய அரசி வருத்தமுற்று அவ்விதக் காரியங்களைச் செய்யாதிருக்கும்படிக் கண்டித்தனர். இங்ஙனம், அரசி, வழிநெடுக வீடுகள்தோறும் மாலைகள் கட்டி மாடமெங்கும் மகளிரும் மைந்தரும் நெருங்க விளங்கிய வீதிகளைக் கடந்து, கடைசியில் ஆலயத்தைச் சார்ந்து, அதிர்வெடிகளின் ஓசையும் பேரிநாதமும் கடல்போல் முழங்க இரதத்தைவிட்டுக் கீழே இறங்கினர்.

அப்போது, கோயில் வாயிலில், செங்கோல், மணிமுடி, முதலான ராஜாங்கங்களை ஏந்தி நின்ற உத்யோகஸ்தர்களும், பூந்தட்டு, பொற்கிண்ணம், வேதபுஸ்தகம் முதலான பூஜா உபகரணங்களை ஏந்திநின்ற மத அத்யக்ஷர்களான புரோகிதர்களும் வந்து எதிர்கொண்டு, அரசியை உள்ளே அழைத்துச் சென்று, அங்கு பொன்மயமான பலிபீடத்தின் முன் பொற்றுகில்விரித்த ஓர் மேடை

யின்மேல் அமைக்கப்பட்ட இரண்டு ஆசனங்களில் ஒன்றில் வீற்றிருக்கச் செய்தனர். அரசி அரியணையில் வீற்றிருந்ததும், அதுவரையில் மப்புப்போட்டு மூடியிருந்த வானம் வெளிகொண்டு பளிச்சென்று வெயில் எறித்துக் கோயிலுக்குள்ளும் கிரணங்களைவீசியது. அது கண்டு எல்லோரும் ஈதோர் நற்குறியென்று ஆனந்தித்தார்கள். அவ்வெயிலொளியால் அங்கு சூழ்ந்திருந்த சீமாட்டிகள் அணிந்திருந்த வஜ்ரவைடூரியங்கள் ஒளிவிட்டுத் தகதகவென்று ஜொலித்தன. பின்பு 'கான்டர்பரி' மகாஅத்யக்ஷர் சபையோரை நோக்கி, தொன்றுதொட்டுவரும் வழக்கப்படி, "ஐயர்காள்! இந்நாட்டுக்குரிய அரசியாகிய விக்டோரியா மஹாராணியை இதோ உமக்கு முன் தருகின்றேன். இன்று இவர் கோலின் கீழ் அமைந்திருப்பதாகச் சத்தியவாக்களிக்க வந்திருக்கும் உங்கள் எல்லோருக்கும் அவ்வாறு செய்தல் இஷ்டம் தானோ?" என்று கேட்டனர். உடனே எல்லோரும் மகாகுதூகலத்துடனே, "எம்மரசி நீடூழிவாழ்க!" என்று வாய்விட்டுக்கூறி வாழ்த்தினார்கள். அதன் பின் விதிப்படி கடவுளுக்குத் தோத்திரம் புரிந்தபின் அரசி ஓர் பொற்றுகிலும் பொன் கட்டியும் கோயிலுக்குப் பரிசாகக்கொடுக்க

அவற்றையும் ராஜசின்னங்களாகிய கோலும், புறவும், கோளமும், கழலுமாகிய பொருள் களையும் பலிபீடத்தில் வைத்து விதிப்படிப் பூசனைசெய்து, ஓர் உபநியாசமும் செய்யப் பட்டது.

பின்பு பொற்சரிகையிட்ட பட்டுவஸ்திரம் ஒன்றை நான்கு வீரர்கள் நான்கு பக்கங்களி லும் நின்று மேல்விரித்துப் பிடிக்க அதன் கீழ் ஓர் ஆசனத்தில் அரசி வீற்றிருந்து, பலி பீடத்தில் வைத்திருந்த ஓர் பொற்சிமிழிலிருந் து முகந்த தைலத்தால் தமது சிரசையும் கை யையும் தொட்டுத் தைலாபிஷேகம் செய் யப்பெற்றனர். அதன்பின், பிரபுக்களும் அ வரது மனைவியரும் எல்லோரும் அரசியோடு ஏககாலத்தில் தத்தம் முடிகளைத் தரித்துக் கொள்ள அரசிக்கு முடிபுனைந்த காட்சியா னது என்றும் மறவாது பார்த்தவர் மனத் தில் பதியும் தன்மையதாயிருந்தது. அரசி யின் முடியில் கிரீடத்தைச் சூட்டியதும் அ வர் முகத்தில் சூரியகிரணம் ஒன்று பளிச் சென்று வீழக் கிரீடத்தின் வயிரங்கள் தகதக வென்று ஜொலித்ததனால் அவர் முடியைச் சுற்றி தெய்விகமான காந்திபோல் ஓர் ஒளி வட்டம் விளங்கியது. அதுபொழுது, அனை வரும் ஆனந்தமேலிட்டால் கைகளைக்கொட்டி

ஆரவாரித்தார்கள். பின்பு, பிரதான அத்யக்ஷர் அரசியைப் பார்த்து "நீவிர் சஞ்சலமின்றித் தைரியமாயிருக்கக் கடவீர்!" என்று உரக்கச் சொல்லி ஆசிகூற அதற்குப் பிரதியுத்தரமாக "கர்த்தா! நின் பலத்தாலே அரசி களித்திருக்கக்கடவர்" என்னும் கீர்த்தனம் பாடப்பட்டது. அதன்பின் அரசி வேத புஸ்தகம் ஒன்று அளிக்கப்பெற்றுக் கடவுளைப் புகழ்ந்து கானம் முழங்கச் சிங்காதனத்தில் ஏற்றிவைக்கப் பெற்றனர். பின்பு பிரபுக்கள் எல்லோரும் அரசியை அடுத்து ஒவ்வொருவராகத் தலைவணங்கித் தாழந்து பக்தியோடும் அவரது ஆக்கினைக்குட்பட்டு நடப்பதாக உறுதிமொழி கொண்டார்கள்.

இவ்வாறு, செய்வனவெல்லாம் செய்து முடிந்தபின் நான்கு மணிக்கு மகுடம் பொலிந்த முடியோடும் பிரபுக்களும் பிரபு நங்கையரும் தம்மைச் சூழ்ந்துவரத் தாரகைக் கணத்தின் மத்தியில் விளங்கும் சந்திரனைப் போல கிரீடதாரியாய் அரசி தமது அரண்மனைக்குத் திரும்பிச் செல்வாராயினர். அது கண்ட நகரமாக்கள் அனைவரும் காலையிலும் பன்மடங்கு சந்தோஷத்தை அடைந்தார்கள். இவ்வளவு ஆடம்பரங்களோடும் முடிசூட்டித் திரும்பிய அரசி அரண்மனைவாயிலில் வந்து



Her Majesty the Queen in her Coronation Robes.

மாக்ஷிமைதங்கிய மஹாராணியார் முடிசூட்டியகாலத்து எடுத்த படம்.

வண்டியைவிட்டு இறங்கினதும் அவர் செல்வமாய் வளர்த்த 'டாஷ்' என்னும் நாய்க்குட்டி அவரைக்கண்டு சந்தோஷம் பொறுக்காமல் கூத்தாடிக் குரைக்க, அவர் தாம் தரித்திருந்த ராஜசின்னங்களையெல்லாம் மறந்து "அதோ டாஷ்" என்று சொல்லிக்கொண்டோடி அதை ஆவலோடெடுத்துச் சீராட்டுவாராயினர். அது அரசியின் கள்ளங்கரவடமற்ற மனதையும் எளியார்க்கிரங்குஞ் சிந்தையையும் காட்டுவதாயிற்று. இம்மகுடாபிஷேக வைபவங்கள் நடக்க ராஜ்ஜிய பொக்கிஷத்திலிருந்து 70-ஆயிரம் பவுன் செலவழிந்தது. ஆனால் அன்று ஜனங்கள் வேடிக்கைபார்ப்பதற்காகச் செலவிட்ட தொகையின் மொத்தம் இதைப் போல் மூன்று மடங்கு ஆயிற்று. அன்று முதல் சிலநாள்வரையில் லண்டன் நகரத்தேயன்றி இங்கிலாந்து தேசம் எங்கும் நித்யோத்ஸவம் கொண்டாடப்பட்டது.



*(From an Etching by H. M. the Queen.)*
(மஹாராணியாரவர்கள் செய்த சித்திரவேலை.)

V.

இராணியின் அரசாக்ஷி.

அரசி முடிபுனைந்து சிங்காசனம் ஏறி ராஜரீகத்தைக் கைக்கொண்ட விர்த்தாந்தங்களை மேலே எடுத்துச் சொன்னோம். இனி அவரது அரசாட்சியைப்பற்றிச் சிறிது விவரிப்போமாக. அரசி "நான் நல்லவளாயிருப்பேன்" என்று பால்யத்தில கொண்ட கொள்கைக்குத் தக்கபடியே முழுதும் நடந்துவந்தனர். தமக்குச் செய்யக்கடமையென்று தோற்றியது எந்தக் காரியமானாலும் அதை அவர் அசட்டை பண்ணுவதில்லை. தமக்கு முன் வைக்கப்பட்ட கடிதங்களைப்பற்றி இன்னவை, யாவை, யென்று விசதமாகக் கேட்டறிந்துகொள்ளாமல் காட்டும் இடத்தில் கண்ணை மூடிக்கொண்டு கையெழுத்துப் போட்டுவிட்டுக் கவலையற்றிருக்கும் கசட்டு வழக்கம் அவரிடத்தில் ஒருநாளுமில்லை. அவர் ராஜ்யகாரியங்கள் ஒவ்வொன்றிலும் உள்நுழைந்து, ஒவ்வொரு விஷயமும் தமக்கு விளங்கும்படி எடுத்துக்காட்டித் தெரிவிக்கும்படி மந்திரிகளைக் கேட்பாராதலின், ஒருவிசை, அவர்க்கு முதல் முதல் பிரதான மந்திரியாயிருந்த மேல்போர்ன் பிரபு, வேடிக்கை

யாகச் சிரித்துக்கொண்டு, "அப்பா! பத்து அரசர்களைக் கட்டிமேய்ப்பது பெரிதல்ல; ஒரு அரசிக்கு வகைசொல்ல நம்மால் இல்லை" என்று கூறியிருக்கின்றனர். அரசியின் அரசாட்சியின் ஆரம்பத்தில், ஒரு தடவை, மந்திரிகளில் ஒருவர் அவரை நோக்கித், "தங்களுக்கு இவ்விஷயத்தில் திருப்தியில்லாவிடினும் நமக்கு இது அநுகூலமாதலின் சமயத்துக்குத் தக்கபடி சாதித்தல் தவறுகாது; ஆதலால் தாங்கள் இதற்குச சம்மதித்துக் கையெழுத்துப் போடவேண்டும்" என்று ஒரு காயிதத்தை நீட்ட, அரசி அவரை எறிட்டுப்பார்த்துச் சாந்தமாக "ஐயா! எனக்குக் கற்பித்தவர்கள் நியாயாநியாயங்களைப் பகுத்தறிந்து நியாயபபடி பிரவிர்த்திக்கக் கற்பித்தார்களேயன்றி 'சமயத்துச்குத்தக்கது' என்னும் வார்த்தையை நான் கேட்டதும் இல்லை அறிந்ததும் இல்லை. அதை ஒருபோதும் என் காதில் ஓதவேண்டாம்" என்றனர். இது தவிர அரசி கேட்க விரும்பாத இன்னொரு வார்த்தை என்னெனில் 'சிரமம்' என்பது. அரசியின் மந்திரிகளில் ஒருவர் ஏதோ சில காரியங்களில் அரசிக்குச் சிரமமுண்டாகாதபடி ஒரு ஏற்பாடு செய்வதாகச் சொல்ல, அரசி அவரை நோக்கி, "ஐயா! 'சிரமம்'

என்கிற வார்த்தையை என்காதில் படும்படிச் சொல்லவேண்டாம்; காரியங்களைச் செய்ய வேண்டுவது எவ்வாறென்றும் சரியாகச்செய்து முடிக்கும் வழி இன்னதென்றும் மாத்திரம் சொன்னால்போதும். என்னால் ஆகுமானால் செய்கிறேன்" என்றாராம். இக்கொள்கையையே அவர் அன்று முதல் இன்றுவரையில் கைக்கொண்டிருக்கின்றனர்.

அரசி தமது துரைத்தன சம்பந்தமான முக்கியமான பெரிய விஷயங்களைத் தமது நெடுநாளைப் பழக்கத்தினால் விசதமாக அறிந்து நடத்துவதையன்றி ஆளுகை சம்பந்தமான ஒவ்வொரு நுட்பமான அற்பவிஷயத்தையும் கவனித்து ஆராயும் தன்மையுடையவர். தமக்கு யுக்தமானதென்றும் அவசியமென்றும் தோன்றாத யாதேனும் புதிதான ஏற்பாடொன்றைச் செய்யத் தமது அநுமதியை மந்திரிகள் கோரினால், அவ்விஷயமாக ஒவ்வொரு காரணத்தையும் தாம் தெரிந்துகொண்டு, அது தமது அபிப்பிராயத்துக்குப் பொருந்தாவிடின் தாம் அதற்குச் சம்மதியளிப்பதில்லை. அவர் சதாகாலமும் சலிப்பின்றிக் காரியங்கள் செய்யும் உலையாமுயற்சியுடையவர். அவர் சிலபோது இரவில் நெடுநேரம் வரையில் ராஜ்யகாரியமாகக் கண்வி

ழித்தாராய்ந்துகொண்டிருந்தும், மறுநாள் காலையில் வழக்கம்போலவே அருணோதயத்தில் விழித்தெழுந்து மறுபடியும் தம் காரியங்களைத் தொடங்கிச் செய்வதைக்கண்டு, அவரை அடுத்திருக்கும் பரிசனர்கள் பலமுறையும் ஆச்சரியப்பட்டிருக்கிறார்கள். மகுடாபிஷேககாலத்தில் தொன்றுதொட்டுவரும் வழக்கப்படி தமக்கு ஆக்ஞாபிக்கப்பட்ட ஆக்ஞைகளை மற்ற அரசர்களைப்போல அரசி அவமதித்து அலக்ஷ்யம் செய்தவரல்லர். பிரதான அத்யக்ஷர் ராஜவாளைத் தம்கையில் அளிக்கும்போது தம்மைநோக்கி "எம்மிறைவீ! கடவுளின் பலிபீடத்திருந்து கொண்டுவந்து, அக்கடவுளின் எளியதொண்டர்களாகிய எம்மால் அளிக்கப்பட்ட இவ்வாளை நீவிர் ஏற்றுக்கொள்வீராக. இவ்வாளால், நீதிபுரிந்து, அதர்மத்தைக் கடிந்து, அறத்தைக்காத்து, ஆதாரமற்ற கைம்பெண்களையும் தந்தை தாயிழந்த பிள்ளைகளையும் காத்தருள்வீராக; அழிந்துபோனவற்றை உண்டுபண்ணி மீண்டும் ஆக்கப்பட்டவற்றைப் பாதுகாப்பீராக; குற்றங்களைக் கண்டித்து விலக்கி, நற்றங்களை நிலைபெறுத்துவீராக; இவற்றைச் செய்வதினால் இம்மையில் பெரும்புகழடைந்து கடவுளருள்பெற்று, மறுமையில் பரலோகத்தில்

கடவுளுடன் என்றும் நீங்காது வாழ்ந்திருக் கக்கடவீர்” என்று கூறிய இவ்வார்த்தைகள் அரசியின் ஆளுகை முழுதும் செய்கைகளால் நிறைவேற்றப்பட்டு, அரசி தமது லாபலோ பங்களை ஆலோசியாமல் தமக்கு விதிக்கப் பட்ட கடமைகளைத் தளராமல் தைரியமாக நிறைவேற்றும்படி அவரைத் தூண்டியிருக் கின்றன. இவ்வாறு, தம் கடமைகளை நிறை வேற்றிவருதலினாலே, அரசி, தமக்கு முன் னரசாண்ட அரசர்களால் இழக்கப்பட்ட ராஜபக்தியையும் விஸ்வாசத்தையும் மீளவும் தாம் பெறலாயினர்.

இன்னொருதடவை, அரசியின் மந்திரி அ நேக பத்திரங்களைக் கொண்டுவந்து, அவ் வளவு பத்திரங்களையும் அரசியின் பார்வைக் குக் கொண்டுவர நேரிட்டதற்காக ஏதோ சமாதானம் சொல்லிவர, அரசி அவரை நோக்கி, “ஐயா! இதனால் எனக்கோர் சிரம மும் இல்லை. ஒரு வேலையை விட்டொழிந்து இன்னொருவேலையைத்தொடங்குவதேயன்றி இதில் எனக்கு அதிக சிரமம் ஒன்றையும் கா ணேம். காரியமில்லாமல் வீண்பொழுது போக்கும் வழக்கம் நான் படித்தகாலத்தில் எனக்கு ஒருவரும் கற்பிக்கவில்லை. நான் என் படிப்புக்களைவிட்டு நெடுநாள் ஆகவில்லை

யென்பதும் தமக்குத்தெரியுமே" என்றனர்.

சிலர், அரசிக்கு என்னவேலையுள்ளது? சமஸ்தகாரியங்களும் மந்திரிமுதலான உத்யோகஸ்தர்கள் செய்துவிட்டுப் போகிறார்கள்; என்று எண்ணக்கூடும். அப்படி எண்ணுவது சரியன்று. அரசியின் வேலைத்தொந்தரவைப் புலப்படுத்துவதற்கு இவ்வொரு சங்கதிபோதுமானது. வருஷம் ஒன்றுக்கு அரசியின் பார்வைக்கு அனுப்பப்படும் பத்திரங்களை இவ்வளவென்று கணக்கிடவேண்டி, 1848-ம் வருஷத்தில் அவ்வாறு கணக்கிட்ட *பாமர்ஸ்டன் பிரபு என்னும் மந்திரத்தலைவர் அவை கொஞ்சம் குறைய முப்பதினாயிரம் இருந்தனவென்று குறிப்பிட்டிருக்கிறார். ஆகவே நாளொன்றுக்குக் கிட்டத்தட்ட 100-கடிதங்கள் ஆகின்றன. துரைத்தன சம்பந்தமான கடிதங்கள் மிகவிரிவாயும் அதிமுக்கியமாகவும் இருக்கக்கூடுமாதலின், இவ்வளவு பத்திரங்களையும் செவ்வையாக ஆராய்தல் அற்பசொற்பமானகாரியமல்லவே!

இவ்வாறு அரசிக்கு ராஜ காரியங்களைக் குறைவறச்செய்து முடிக்கும் விஷயத்தில் விசேஷ பரிசிரமமுண்டாதலன்றி ஓரோர்கால் தாமரையில் தளும்பும் நீர்போல மனோ

* Lord Palmerston.

சஞ்சலம் உண்டாதலுமுண்டு. * "முடியணிந்த சிரசுக்குக் கவலொழிந்த துயிலில்லை" என்று ஷேக்ஸ்பியர் மஹா கவி சொல்லியது பொய்யாமோ? ஒரு தரம் அரசியின் மந்திரிகளில் ஒருவராகிய வெல்லிங்டன் பிரபு மரண தண்டனைக்குள்ளான ஒரு குற்றவாளிக்கு அத்தண்டனை விதிக்கப்பட்ட தீர்ப்புக்காயிதத்தைக்கொண்டுவந்து அரசியை அதில் கையெழுத்து வைக்கும்படிவேண்ட அரசி அது கண்டு மனநடுங்கி வருந்திச் கண்ணீர் சோர அவரை நோக்கி "இக்குற்றவாளிக்கு அநுகூலமாய்ச் சொல்லும்படியானதொன்றுமில்லையோ" வென்ன, கல் நெஞ்சுடைய அப்பிரபு "இல்லை" யென்றனர். அரசி மறுபடியும் "அப்படியன்று, கொஞ்சம் ஆலோசித்துப்பாரும்" என்ன, பிரபு "இவன் குற்றவாளியென்பதில் சந்தேகமில்லை. யாரோ ஒருவர் இவனைப்பற்றி நன்மையாகச் சொல்லியிருப்பதாக ஞாபகம். ஏதாவது நன்மை செய்திருந்தாலும் இருக்கலாம்" என்றனர். உடனே அரசி மிக்க சந்தோஷத்துடன் "நல்லவேளை" என்று அத்தீர்ப்புக்காயிதத்தை வாங்கி "மன்னிக்கப்பட்டான்" என்றெழுதி அதன் கீழ் 'விக்டோரியா மஹாராணி' என்

* Uneasy lies the head that wears a crown.

று தமது அழகிய கையெழுத்தை வைத்துக் கொடுத்தார்.

அரசி தாம் செய்யும் ஒவ்வொரு காரியமும் நறுக்கித்தறித்தது போல் சீராகச் செய்யும் தன்மையுள்ளவர் என்பதைச் சுட்டி, ஒரு திருஷ்டாந்தம் இங்கு விவரிப்போம். அரசியின் வீட்டுக் காரியஸ்தர்களில் ஒருவன் மிக்க பயந்த பிரகிருதியுள்ளவன். அவனிடத்தில் ஒருநாள் ராஜ்யசம்பந்தமான ஒரு விஷயத்தில் சிற்சில ஏற்பாடுகள் செய்யும்படி மந்திரிக்குத் தெரிவிக்கும்படிச் சொல்லியனுப்ப, அவன் பாவம்! தன் மனக்குழப்பத்தினல் அரசி தனக்குச் சொன்னதத்தனையும் மறந்துவிட்டான். அந்த சங்கதி அரசிக்குத் தெரிந்ததும், அரசி பெட்டியைத்திறந்து, தமது சொந்தக்கையெழுத்தில் நெருக்கமாய் எழுதப்பட்ட ஒரு காகிதத்தை எடுத்து அவன் கையில் கொடுத்து "இதைக்கொண்டுபோய்க் கொடு. நான் சொன்ன விஷயங்கள் ஒவ்வொன்றும் அதைப் பார்த்தால் விளங்கும்" என்று சொல்லியனுப்பினர்.

அரசியின் காலநிஷ்கர்ஷையைப்பற்றி இதற்குமுன் அரசியின் குணதிசயங்களை விவரித்த பாகத்தில் குறிப்பிட்டிருக்கின்றோமல்லவா? அரசி தாம் செய்துவந்த அத்தனை

காரியங்களும் காலஹரணத்தில் மிக்க கவன மில்லாத பக்ஷத்தில் செய்யமுடியாதாதலின் ஒவ்வொரு க்ஷணமாத்திரமும் வீண்போக்கா மல் ஏதாவது ஒரு காரியம் செய்துகொண்டே யிருப்பார். தாம் தலை வாரி முடித்துக்கொள் ளும்போதுகூடச் சும்மா இருப்பதில்லை. ஒரு வள் சீவி முடிக்கையில் இன்னொரு சேடி யாதேனும் எடுத்துப்படிக்க அரசி கண்ணை மூடிக்கொண்டு காது கொடுத்துக் கேட்டுக் கொண்டிருப்பார்.

---

## VI.

### திருமணம்.

அரசி முடிபுனைந்து உலகை ஆண்டுவருங் காலத்தில் அவருக்குத் திருமணஞ்செய்யும் பருவம் உண்டாகத் தமது அன்னை, மாமன் முதலான உறவினர்களின் விருப்பப்படித் தமக்கு அம்மான்சேயும் தம்மைநெடுநாளாக நேசித்துவந்தவருமாகிய ஆல்பர்ட் பிரபு என் பவரை மணம்புரிவாராயினர்.

ஆல்பர்ட்பிரபு, அரசிக்கு மூத்தமாமனாரா கிய கோபர்க்பிரபுவின் இரண்டாம்புத்திரர். இவர் குழந்தையிலேயே விசேஷ அழகும், குற்றமற்ற நற்குணங்களும், உற்சாகமும், ஊக்கமுமுடையவராயிருந்தனர். இவர்த

மக்கு ஐந்துவயதாயிருக்கும்போது, தந்தையும் தாயும் ஒருவரோடொருவர் கலகித்து விரோதப்பட்டுப்பிரிந்துபோனபடியால், இவரும் தமது தாயாரைவிட்டுப் பிரிந்திருக்க நேரிட்டது. இவர் தம் தாயாரை வடிவத்திலும் குணத்திலும் ஒத்திருந்ததையன்றி, அதிபால்யத்தில் அவரை விட்டுப் பிரியநேருகினும், அவரிடத்து ஆயுள்முழுதும் மாருத பேரன்புடையவராய் இருந்தார்.

ஆல்பர்ட் பிரபுவுக்கு மேற்கூறிய காரணத்தால் தாயின்போஷணை யில்லாமற்போனுலும், பாட்டிமார் இருவர் அவரை அன்போடும் ஆதரித்துவந்தார்கள். இவ்விருவரையன்றி, இவருக்கு ஏற்படுத்தப்பட்ட உபாத்தியாயரும் இவரை மிகுந்தபக்ஷமோடு செவிலித்தாய்போல அன்புபாராட்டி வளர்த்து வந்தனர்.

இவர் குழந்தையாயிருந்தபோதே இவருக்கு விக்டோரியா இளவரசியைக் கல்யாணம் செய்விக்க இவர் பாட்டியும் சிற்றப்பாகிய லியோபோல்ட் என்பவரும் உத்தேசித்திருந்ததனுல், அவர்கள் இவரது கல்வி விஷயத்தில் மிக்க கவனமுடையவராய் அதிஜாக்கிரதையாக இவருக்குக் கல்வி கற்பித்து வந்தனர். இவர், கணிதம், தேசசட்டம், ராஜநீதி முத

ஷிய நூல்களில் ஆரம்பத்தில் அரண்மனையி லேயே தக்க உபாத்தியாயர்களைக் கொண்டு கற்பிக்கப்பட்டதை யன்றிப் பின்பு, 'ப்ரஸ் ஸல்ஸ்' நகரில் தமது சிறுதந்தையரின் விசார ணையில் சிறிதுகாலம்படித்துக், கடைசியாக 'பான்' சர்வகலாசாலையிலும் அந்நூல்களைக் கற்று மிக்க தேர்ச்சியடைந்தனர்.

விக்டோரியா இளவரசி இவரை முதல்மு தல், 1836-ஆு, இவர்தமது தந்தையோ டும் தமயனோடும் கேன்ட் பெருமாட்டியைப் பார்க்கும் பொருட்டுக் கொஞ்சநாள் இங்கி லாந்திற்கு வந்திருந்தகாலத்தில், பார்த்துப் பழகநேர்ந்தது. அப்போதே இவரைத்தமக்கு மணமகனாகக் கருதும்படி உறவினர் தமக்குப் போதித்ததை இளவரசி விருப்பாகக் கொண் டார் ஆயினும், அப்போது இருவரும் இன் னம் தகுந்த வயதுவராமல் சிறுவயதாகவே இருந்ததனால், இளவரசி அவ்விராஜகுமா ரர்மீது கொண்டகாதல் அதிதீவிரமாக அவ ரைமணம்புரியத் தூண்டவில்லை. பின்பு, இள வரசி பட்டத்துக்கு வந்தபின், தமது துரைத் தனக்காரியங்களில் மிகவும் உத்யுக்தராய்த் தமக்குரிய ராஜதர்மங்களைக் கற்றுக்கொள்வ திலும் ராஜாங்கத்தைப் பரிப்பதிலும் தமது கருத்து முழுதும் செலுத்தி வந்ததனாலும்,

தாம் பின்பு அனுபவித்தறிந்தபடி தமக்குண்டான ஐஹிக சௌக்கியம் முழுதும் அந்த சம்பந்தத்தினலே உண்டாகத் தக்கதென்று அப்போது அறியாமையினலும், அவர் தமது மணவிஷயத்தைப்பற்றி அவ்வளவாகக் கருதவில்லை. தம்மனமும் நெஞ்சும் தமது காதலர்மேல் செல்லும்போதெல்லாம், "இப்போதென்ன, கிணற்றுநீரை வெள்ளங்கொண்டுபோய்விடுமா? ஆல்பர்ட்டுக்கும் நமக்கும் எத்தனைவயதாய்விட்டது? இன்னம் நான்கு வருஷம் செல்லட்டுமே; ஆல்பர்ட்டும் அதற்குள் இங்கிலீஷ் பாஷையைச் செவ்வையாகக்கற்றுக்கொள்ளட்டுமே;" என்று தமக்குத்தாமே சொல்லிக்கொள்வதன்றியும், தமது மாமனகிய லியோபோல்டுக்கும் அவ்வாறே எழுதிவந்தனர்.

பின்பு, சிறிதுகாலத்துக்கெல்லாம், அவர்க்கும் அவரதுகாதலருக்கும் அதற்குமுன் கடிதமூலமாக நடந்துகொண்டிருந்த் பரஸ்பர யோகக்ஷேம சமாசாரங்கள்கூட நின்றுவிட்டதுகண்டு, லியோபோல்ட் அரசர், பின்னெருதரமும் 1839-ம் வருஷத்தில், தமது மருமகனை இங்கிலாந்துக்கு அனுப்ப நிச்சயித்தார்.

ஆல்பர்ட்பிரபு முன்தடவை போலல்லாமல் இப்போது அழகுசிறந்து குணங்களிலும் நிறைந்து 'தோகையர்க்கனங்கள்' என்று சொல்லும்படி யிருந்தனர். அனுப்புமுன்



Prince Albert.] [ஆல்பர்ட்பிரபு.

லியோபோல்டும் அவரும் அரசிக்கும் அவருக்கும் செய்யக்கருதிய திருமணத்தைப் பற்றி விரிவாக ஒருவர்க்கொருவர் பேசிக்கொண்டபோது, அவர் அதிகாரத்தில் ஆசை வைத்த சிலவீணர்களைப்போல பெருமை பாராட்டி அசங்காரம் கொள்ளாமல், தமக்

கும் பிறருக்கும் மிக்க கண்யமும் கௌரவமும் உண்டாகும்படித் தாம்கொண்ட மேலான எண்ணங்களைத் தெரிவித்தனர். இங்கிலாந்தில் அவர் அடையப்போகும் பெரும்பதவிக்குத் தக்கபடி பெறவேண்டிய எல்லா உயர் குணங்களையும் பெற்றிருந்தனர் என்பதையும் விளங்கக்காட்டினர். அவர் ஒவ்வொருவிஷயத்தையும் ஆழ்ந்து விசாரித்துத் தேர்ந்திருந்ததேயன்றி, எதிரியின் நோக்கத்தையும் தெளிவாக விரைவில் உணரவல்லவராகித், தள்ளவேண்டியவற்றைத் தள்ளிக் கொள்ள வேண்டியவற்றைக் கொள்ளும் அருங்குணங்களையும் பெற்றிருந்தனர்.

ஆல்பர்ட் பிரபுவை அரசி நேரிடையாகக் கண்டதும் தாம் முன்கொண்ட எண்ணங்களெல்லாம் வெயில்முன் பனிபோல உடைந்துபோய்விட்டன. பெண்கள் யாவராயினென்ன? அரசியானாலென்ன? தங்களுக்குக்கல்யாணம்வேண்டாம் என்று அவர் எண்ணும் எண்ணம் வீணெண்ணமேயன்றோ? அரசி தமதுகாதலரைக்கண்ட சிலநாளைக்கெல்லாம், "ஆல்பர்ட்டின்வடிவழகை என்னென்றுசொல்வேன்! அவரது குணமும் நடையும் எவ்வளவு இனிமையானவை! அதிகமாக வர்ணிப்பதேதுக்கு? மஹாமனோ

ஹாராயிருக்கின்றனர்" என்று தமது மாமனுக்கு எழுதும்கடிதத்தில் எழுதியிருக்கின்றனர்.

இவ்வாறு, நாளுக்குநாள், பரஸ்பரம் அன்பும் விருப்பமும் அதிகரித்துவரக் கடைசியில் ஒருநாள், அரசி அவரை ஏகாந்தமாக வரவழைத்து, காதல்வெள்ளம் கரைபுரண்டொழுக அவரைநோக்கி, "நீர் எனதுநெஞ்சைத்திறைகொண்டீர். எனக்காக உம்மை உதவி என்னோடு எனதுவாழ்க்கையைப் பகிர்ந்துகொள்வீராயின் எனக்கு அளவற்ற அருஞ்சுகத்தை உண்டுபண்ணினவர் ஆவீர்" என்றனர். பிரபுவும் மிக்க காதலோடும் அரசியின் வேண்டுகோளுக்கிசைந்தனர்.

இவ்வாறு இருவரும்நிச்சயித்துக்கொண்டபின் அரசி முதல்முதல் மாமனாகிய லியோபோல்ட் அரசருக்கு ஒருகடிதம் எழுதியனுப்பினர். அதில் அவர், "நான் அவரைச் சொல்லுக்கடங்காதபடி நேசிக்கின்றேன். எனக்கு இப்போது இன்னது எழுதுவதென்று ஒன்றும் தோன்றவில்லை. மனஸுக்கு மஹா சந்துஷ்டியை அடைந்திருக்கிறேன்" என்று எழுதியிருக்கின்றனர்.

பின்பு, அரசி அச்செய்தியை முதலில் தமது அந்தரங்க ஆலோசனை சபையாருக்

கும், பின்பு **பார்லிமேண்டாருக்கும்,** முறைப் படி தாமேநேரில்சென்று துணுக்கமும் நாண மும் பற்றி யிழுப்ப ஒருவாறு வாய்திறந்து கூறியதும் அவர்கள் எல்லோரும் அந்தச் சுபச்செய்தியைக் கேள்விப்பட்டு ஆனந்த வெள்ளத்தில அமிழ்ந்தவரானார்கள்.

பின்பு ஆல்பர்ட் பிரபுவுக்கு அரசியின் மண மகனென்னும் நிலைமையில் செய்யவேண்டிய சீர்களையும் உரிமைகளையும் பற்றிப் பேசி முடிந்து இருதிறத்தாரும் ஒற்றுமைப்பட்ட பின், அரசி 1840ஹு பிப்ரவரிமீ 10உ யன்று, தாம் நெடுநாளாக நேசித்துக் காத லித்த மணமகனை யாவரும்களிக்கும்படி மாலை யிட்டு மணம்புரிந்தனர். அரசியின் திருமணச் சடங்கு சம்பந்தமாய் நேரிட்ட ஒரு சிறிய சம்பவம் அவருக்கு இயற்கையாலமைந்த நற் குண விசேஷமொன்றை விளக்கிக்காட்டுவ தால் அதை இங்கு சொல்லாமல் விடுவது சரியாகத் தோன்றவில்லை. கிறிஸ்தவமதச் சடங்குப்படி மணமகன், மணமகள் இருவரை யும் விவாக பந்தத்திற்கட்டுப்பட்ட தம்பதி களாக்குமுன், ஒருவரை யொருவர் அங்கி கரித்தேற்றுக்கொள்கிறார்களாவென்று கோ யில் பலிபீடத்தின் முன் நின்று விவாகச் சடங்கு நடத்தும் குரு இருவரையும் தனித்

தனி அவர்கள் வேதத்திற் குறித்த இரண்டொரு கேள்விகள் கேட்பதுண்டு. அப்பொழுது மணமகள் கடவுள் சாக்ஷியாக வாக்குறுதி செய்யவேண்டியவைகளில் ஒன்று: தான் தனது கணவனைக் கண்ணியப்படுத்தி அவனுக்குக்கீழ்ப்படிந்து நடப்பதாக ஒத்துக்கொள்ளவேண்டியது. மணமகள் பட்டமாளும் அரசியாதலால் வேறொருவருக்குக்கீழ்ப்படிந்து நடப்பதாகச் சுவாமிசாக்ஷியாக வாக்குக் கொடுப்பது அவர் அந்தஸ்துக்குத் தகாதென்று எண்ணி அந்த வாக்கியத்தை விவாகச்சடங்கில் விட்டுவிடலாமாவென்று குரு கேட்டார். அதற்கு அரசி உடனே, தாம் ஒரு ஸ்திரீயாக விருக்கும் முறையில் மணம் புரியப்போகிறாரேயன்றி அரசியாகவிருக்கும் முறையிலல்லவாதலால் எல்லாருக்கும் நடப்பதுபோல் தமக்கும் வேதவிதிப்படி நடத்த வேண்டுமென்று பதில் சொன்னார். இதனால் அரசியினிடத்தில் வீண்பெருமை யென்பது சிறிதுமில்லையென்று ஸ்பஷ்டமாகப்படும். அரசியின் திருமணத் தன்று மழையும்துளியுமாயிருந்ததாயினும் அவற்றை லக்ஷயம் பண்ணாமல் அம்மணக்கோலத்தைக் காணும் பொருட்டு அநேகர்வந்து கூடினார்கள்.

"ஆர்த்தன தடாரி பேரி, யார்த்தன முருடு மொந்தை
ஆர்த்தன வுடுக்கை தக்கை, யார்த்தன படகம் பம்பை
ஆர்த்தன முழவந்தட்டை, யார்த்தன சின்னம் தாரை
ஆர்த்தன காளம் தாளம், ஆர்த்தன திசைகளெங்கும்."

என்றபடி, அஷ்டா தசவாத்தியங்களும் எங்கும் கடல்போல முழங்கின. அரசி பகல்பன்னிரண்டு மணியளவில், ஆயிரம்பொன்பெற்ற மணவுடைதரித்து, சர்வாலங்கிருத பூஷித



Her Majesty the Queen in her Bridal dress.
மாக்ஷிமைதங்கிய மஹாராணியாரின் திருமணக்கோலம்.

ராய், முடியில் மலர்மாலையணிந்து, தாதிகள் சூழ, அரண்மனையினின்று புறப்பட்டு, மந்திரிகள் முதலான உயர்ந்த உத்தியோகஸ்தர்களும் பந்துவர்க்கங்களும் அணியணியாக உடன் வரவும், வாத்தியங்கள் ஒலிக்கவும் ரதாரூடராய்க்கோயிலுக்கு எழுந்தருளி, வேதவிதிப்படித் தமது இளந்தந்தையாராகிய சஸ்ஸக்ஸ் பிரபுவால் அளிக்கப்பட்டு, ஆல்பர்ட்பிரபுவுக்குச் சுபமுகூர்த்தத்தில் வாழ்க்கைப்பட்டனர்.

மணவினையெல்லாம் நிரம்பியபின், அரசி தமது மணமகனோடும் இரதமேறிக் கோயிலை விட்டு அரண்மனைக்குவந்து போஜனம் முடித்துக்கொண்டு, அன்று சாயங்காலமே லண்டனுக்கு இருகாதம் தூரத்தில் உள்ள விண்ட்ஸர் நகரில் தமதுராஜமாளிகைக்கு எழுந்தருளினர். வழியெங்கும் தோரணம் கட்டி, பந்தலிட்டுக், கொடிகள்நட்டு, ஜனங்கள் ஆயிரக்கணக்காகத் திரண்டுவந்து கல்யாணம்பாடிக்கொண்டாட, அஸ்தமனசமயத்துக்கு அந்நகர் போய்ச்சேர்ந்தனர். இங்கிலாந்துமுழுதும் அன்றைத்தினம் அஹோராத்திரம் மஹோத்சவம் கொண்டாடினார்கள். நாடகசாலைகள், வேடிக்கையிடங்கள், எங்கும்வந்தவர்க்கெல்லாம்பணம்வாங்காமல்

வேடிக்கை காட்டப்பட்டது. ஏழைஜனங்களுக்கு பஞ்சபக்ஷ்ய பரமான்னங்களோடு மிருஷ்டான்னம்போடப்பட்டது.

ஆல்பர்ட்பிரபு, அரசிக்கு அன்புடைய காதல் நாயகராயிருந்ததன்றி, அவருக்கு வேண்டிய உதவிகளைப்புரிந்து தக்க ஆலோசனைகளைமொழிந்து அரிய மந்திரிபோலவும் உற்றதுணைவரைப்போலவும் அரசியின் காரியங்களைப் பார்த்துவந்தார். தம்மோடு பழகித் தமதுகுணாதிசயங்களை அறிந்த ஒவ்வொருவரும் தம்மிடத்தில் மிக்கநேசமும் மதிப்பும் கொள்ளும்படி அவர் செய்துகொண்டனர். சிலவேளைகளில் தமக்குச்சிற்சில இடையூறுகளும் மனக்கிலேசங்களும், பிரபுக்கள் மந்திரிகள் முதலானோர்விரோதமும் தம்முடைய நிலைமையைப்பற்றி உண்டானபோதிலும் அவற்றைத்தமது நற்குணத்தினால் பாராட்டாமல் இருந்ததன்றியும்,—இராஜ்யத்தில் எவ்விதமான பெரியமாற்றங்கள் சம்பவிக்கினும் அரசின்நிலைமைக்கு யாதும் பங்கம் வாராதபடி ராஜவுரிமைகளை ஸ்திரமாக ஸ்தாபிக்க எண்ணம் கொண்டவராதலின்,—

> "மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
> எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்—செவ்வி
> அருமையும் பாரார் அவமதிப்பும் கொள்ளார்
> கருமமேகண்ணாயினார்."

என்றபடி, தாம்கொண்ட கருமத்தைச் செய்து வந்ததினாலும் உறுதி யுடைமையினாலும் தமக்குண்டான விரோதங்களையும் மாற்சரியங்களையும் வென்று, அவைகளைச் சிறிதும் பொருள் பண்ணாமல் தம் கடைமைகளை நிறைவேற்றிச் சலிப்படையாமல் இருந்துவந்தார்.



The Throne Room, Wendsor Castle.
விண்ட்ஸர் அரண்மனை, கொலுமண்டபம்.

## VII.

### மரணபாயங்கள்.

அரசிக்குத் தற்செயலாக நேரிட்ட சில அபாயங்களைப்பற்றி, இதற்குமுன் விவரித்திருக்கின்றோமல்லவா? இங்கு அவருக்குச் சில ராஜத்துரோகிகளால் சம்பவித்த அபாயங்களையும், அவற்றிற்கு அவர் தப்பிப் பிழைத்த விவரங்களையும், எடுத்துக்கூறுவோம்.

அரசிக்குத் திருமணம் முடிந்த வருஷத்தில், தாமும் கணவருமாகப் பகல்வேளையில், ஹைட்பார்க் என்னும் உபவனத்தில், வண்டியேறிச் சவாரிபோகையில், ஆக்ஸ்போர்ட் என்னும் பெயருடைய பதினேழுவயதுள்ள குசப்பையன் ஒருவன் மகா நெஞ்சழுக்கனத்துடன் அரசியைநோக்கித் துப்பாக்கியினால் சுட்டான். அக்குண்டு அரசியின் செவியருகே கிண்ணென்று ஒலித்துக்கொண்டு சென்று அவர்முடியில் தாக்க மயிரிடைதப்பியது. அரசியும் கணவரும் இருவரும் அப்பையன் இரண்டுகையிலும் காலதண்டம்போல இரண்டு துப்பாக்கியை ஏந்திக்கொண்டு சுடும்பாவனையாக நிற்பதைப் பிரத்தியக்ஷமாகக் கண்டார்கள். அக்கசடன் குறிதப்பிப்போனதுகண்டு, "ஒன்றுபோனால் இன்னொன்றில்லையா என்

கையில்" என்று சொல்லிக்கொண்டு, அதை யும் அவர்மேற் சுட்டான். நல்லவேளையாய், அரசியைக் கணவர் உள்ளுக்கிழுத்துக்கொண் டு அதிவேகமாய் வண்டியை ஓட்டிக்கொண்டு போயினர். இந்தச் சங்கதியைக்கேட்டதும் வெகு ஜனங்கள் அரசிக்குற்ற அபாயத்துக்கு வருந்தி, அன்றுமுதல் சில நாளைக்கு அரசி வெளிப்படும்போதெல்லாம் தாமும் உடன் சென்று, அரசியைக்காத்துவந்தார்கள். லண் டன் நகரில் உள்ள நாடகசாலைகள்தோறும் அன்று இராத்திரி "இராணியின் காப்பு" வெகு உத்ஸாகமாகப் பாடப்பட்டது. பார்லி மெண்டு மஹாசபையார் அனைவரும் கூடி, அரசிக்குத் தமது சந்தோஷத்தைத் தெரி வித்து ஒரு வந்தனோபசாரப்பத்திரம் வரைந் து படித்தார்கள். "ஆக்ஸ்போர்ட்" என் பவன் சிலநாள் பித்தர்களுக்குச் சிகித்ஸை செய்யும் வைத்தியசாலையில் வைக்கப்பட்டுப் பின்பு ஔஸ்திரேலியாவுக்கு அனுப்பப்பட் டான்.

இன்னொருநாள், அரசியும் கணவரும் வழக் கப்படி வண்டியேறிச்சென்று அரண்மனைக் குத் திரும்பி வருகையில், 'ஆக்ஸ்போர்ட்' என்பவன் சுட்ட. அதே இடத்தில் "கறுத்து விகாரமான குள்ளக்கயவன்" ஒருவன் அர

சியை நோக்கிச் சுட்டான். அதற்கும் கடவுளருளால் அரசி தப்பிப் பிழைத்தனர். அக் கீழ்மகன் ராஜஹத்திக்காக விசாரணை செய்யப்பட்டு முதலில் மரணதண்டனை விதிக்கப் பெற்றுப், பின்பு, அரசியின் கருணையால் மரணபரியந்தம் தண்ணீர் மேலேற்றப்பட்டான்.

அதற்குப்பின் ஏழுவருஷம் சென்று, ஹாமில்டன் என்னும் ஐரிஷ் கூலிக்காரன் ஒருவன் அரசியைக் கொல்லமுயன்று அதனுல் ஏழுவருஷம் தண்ணீர்மேலேற்றி நாடு கடத் தப்பட்டான்.

1850 - ஸ்ரீ, அரசிக்கு இன்னுருவிதமான அபாயம் நேரிட்டது. அவர் தமது சிற்றப்பராகிய கேம்பிரிட்ஜ் பிரபுவைப் பார்த்துவிட்டுத் திரும்பிவருகையில், மேல்மகன் போல மேனுக்குக்காணப்பட்ட கீழ்மகனுெருவன் ஒரு சிறிய கோலினுல் அரசியை எதிர்த்து முகத்தில் அடித்துக் காயப்படுத்தினுன். அதற்குப்பின் இருபத்திரண்டு வருஷம்வரையில் அரசிக்கு இவ்விதமான அனர்த்தங்கள் ஒன்றும் சம்பவிக்கவில்லை.

பின்பு ஒருநாள் அரசி தமது வண்டியிலிருந்து இறங்கும்போது ஓகானர் என்னும் ஒரு பைத்தியக்காரன் அரசியைக்கொல்ல நினைந்து துப்பாக்கியை ஏந்திக்கொண்டு மேல்

வந்து தாக்சப், பரிசனர்களிலொருவன் அவனைப்பிடித்து நிறுத்தினுன்.

பத்து வருஷத்துக்குப்பின் மாக்ளீன் என்னும் இன்னெரு பித்துக்கொள்ளியும் அவ்வாறே அரசியைக்கொல்ல முயன்றுன். கடவுளருளால் அரசி அதற்கும் முன்போலவே தப்பிப் பிழைத்தார்கள். அக்காலத்தில் ஜனங்கள் அரசிக்குற்ற ஆபத்தைக்கண்டு பரிதபித்ததற்கு திருஷ்டாந்தம் பின்வரும் ஒரு குழந்தையெழுதிய கடிதம் ஒன்றே போதுமானது:—

என்பிரியமுள்ள அரசியே,

எங்கள் அப்பா இப்பொழுதுதான் அகத்துக்குவந்து தங்களை எவனே ஒரு துஷ்டன் கொல்லப்பார்த்ததாகச் சொன்னுர். இவ்வளவு நல்ல அரசியைக் கொல்ல நினைத்தவன் எவ்வளவு கொடியவனுயிருத்தல்வேண்டும். அவன் அதற்காகத் தண்டிக்கப்படுவான் என்றெண்ணுகிறேன். அப்பா அவனுக்குப் பயித்தியம் பிடித்திருக்கவேண்டும் என்கிருர். நான் அவனைப்போல பயித்தியக்காரன்வேறே இருக்கமாட்டான் என்றெண்ணுகிறேன். தங்களுக்கு ஒன்றும் கெடுதியுண்டாகாததினுல் நான் நிரம்ப சந்தோஷிக்கிறேன். அப்பாவும் அம்மாளும் அப்படியே சந்தோஷிக்கிருர்கள். வந்தனம். கடவுள் தங்களைக் காத்தருள்வாராக!

(ஒப்பம்) எடித் இ. எலியட்.

இக்கடிதத்தைப் படித்ததும் அரசி அக் குழந்தைக்கு வந்தனம்செய்து ஒரு கடிதம் அனுப்பினார்.

அரசி அக்கொடிய மரணத்துக்குத் தப்பிப் பிழைத்ததற்காக இங்கிலாந்திலேயன்றி இப் பூமண்டலத்தில் அரசிக்குட்பட்ட நாடுகளி லெங்கும் கோயில்கள் தோறும் வந்தனைவழி பாடுகள் சிறப்பாகச் செய்யப்பட்டன. சகல மான ராஜாக்களும் தாம் அடைந்த சந்தோ ஷத்தையும் அரசியின் பொருட்டுத் தாம் கோ ரிய நன்மைகளையும் அவர்க்குத் தந்தித்தபால் மூலமாகத் தெரிவித்தார்கள்.

அரசி தமக்கு நேரிட்ட மேற்கூறிய மரணோ பாயகாலங்களில் ஒருபொழுதாவது, தமது தைரியத்தைக் கைவிட்டதில்லை. "பிரமாத மான பெரிய காரியங்கள் சம்பவிக்கும்போ தெல்லாம் என்மனம் அலையற்றதடாகம் போ லச் சஞ்சலமின்றிச் சாந்தமாயிருக்கும்" என்று அரசி ஒரு சமயத்திற் கூறியிருக்கின் றனர். அன்றியும் "பெரியவர்தம் நோயிற் பிறர்நோய் கண்டுள்ளம், எரியினிழுதாவர்" என்றபடி எப்போதும் பிறர்க்கு யாதேனும் திங்குண்டாயிற்றோ ஏதோவென்று பரிதபிப் பதையன்றித், தமக்கு நேரிட்ட கெடுதிகளைப் பாராட்டும் குணம் அரசியிடத்தில் எள்ளள

வும் இல்லவேயில்லை. தமக்கு ஹைட்பார்க்கில் அபாயம் நேரிட்டவன்று தம் தாயார் தமக்கு விசேஷமாக ஹானியுண்டாயிற்றென்று ஆராவது ஒன்றுக்குப் பத்தாய்ச்சொல்லக்கேட்டு வருந்துவரோ என்னவோ என்று பயந்து, நடந்த விஷயங்களைத்தாமே அவர்க்கு உணர்த்தும்படி விரைந்து சென்ருர். இரண்டாவது தடவை, முதல் நாளில் நடந்த சில சங்கதிகளால் தமக்கு யாதேனும் ஒரு அபாயம் சம்பவிக்கும் என்று அறிந்திருந்ததனுல், தம்முடன் வழக்கமாகக் கூடச் செல்லும் ஒரு துரைசானியைப் பின்னிறுத்திச் சென்ருர். இதனுல், தம்மூலமாய்ப் பிறருக்குத் தீங்கும் துயரும் சம்பவிக்கக் கூடாதென்பதையன்றிப் ‘பிறர் எங்ஙனமாயினுமாகுக; தம்முயிர் பிழைத்தால் போதும்’ என்னும் எண்ணம் அரசிக்குச் சற்றும் இல்லை என்பது நன்ருய் விளங்கும். இத்தகையான அருங்குணங்களுடைய நம்சக்கிரவர்த்தினிக்கு இனிமேலும் யாதும் தீங்குவராமல் அவர் நெடுங்காலம் சுகமாக வாழ்ந்திருக்கும்படிப் பரங்கருணைத் தடங்கடலாகிய பரமேஸ்வரன் அருள்புரிவாராக.

---

## VIII.

### இல்வாழ்க்கையும் சந்தானவிருத்தியும்.

அரசியும் கணவரும் உடலும் உயிரும்போல மனமொத்துக் கலந்து சுகித்த சுகவாழ்க்கைக் கிணையாக வேறொன்றைச் சொல்லக்கூடுமோ? ஒன்றை யொன்று பிரியத்தரியாத ஆணும் பெண்ணுமாகிய இரண்டு 'அன்றில்' பக்ஷிகளைப் போல அரசியும் கணவரும் ஒருவரைவிட்டு ஒருவர் இரண்டொருதினம் கூடப் பிரிந்திருக்கச் சகியார்களாய்,

" மந்திரத்திடையினு மிருவர்மாசிலாச்
சிந்தையின்மகிழ்வினு மிருவர்செய்வினைப்
பந்தமாமதனினு மிருவர் பண்புசேர்
சந்தமார் அறத்தினு மிருவர் தாமரோ."

என்றபடி, எவ்விஷயத்திலும் தாமிருவரும் கலந்திருப்பதையன்றி ஒருவரை யொருவர் விட்டிருப்பதில்லை.

ஒருதரம் கணவர் தம்மைவிட்டு ஏதோ காரியமாக இரண்டுதினம் பிரிய நேரிட்டகாலத்தில் அரசி "எனது பிராண நாயகரில்லாமையால் என்தனிமை தரிக்கமுடியவில்லை. எத்தனையோ பேர்கள் தங்கள் கணவரைவிட்டுப் பிரிந்திருக்கின்றார்கள் என்பது எனக்குத் தெரியுமாயினும், எனக்கு மாத்திரம் அவ்வாறு சிறிதேனும் பிரிந்திருக்க முடியாதென்று தோற்றுகின்றது.

அவரில்லாமையினுல் ஒன்றிலும் எனக்கு விருப்பமில்லை. அவரைவிட்டு இரண்டொரு பகல் கூடப் பிரிந்திருப்பது மிக்க துயரமாயிருக்குமாதலின், கடவுள் நான் அவருக்குப்பின் உயிரோ டிம்மண்மீதுறையாமல் கருணைபுரிய வேண்டும். அவரைக் கண்குளிரக்கண்டு நேசிப்பதே எனக்கு ஆனந்தம்." என்று எழுதியிருக்கின்றனர். அரசி எவ்வாறு கணவரை நேசித்தனரோ அதுபோலவே அவரும் அரசியை நேசித் திருந்தனர். அவர் தமது நண்பருக்கு எழுதிய ஒருநிருபத்தில் "விக்டோரியா எனக்குப் பெறலரும் பெருநிதிக்கொப்பாவள். அவளையின்றி நான் வாழத்தரிப்பேனே? நாங்களிருவரும் ஒருவரை யொருவர் நேசித்திருக்கும் இச்சுகவாழ்க்கையில் எங்களுக்கு இனி வேண்டற்பாலது யாதுள்ளது? எமது சம்பந்தம் உயிரோடுயிரும் உணர்வோடுணர்வும் ஒன்றியதேயன்றி வேறின்று" என்று கூறியிருக்கின்றனர்.

அரசியும் கணவரும் தினம்தோறும் ஒன்பது மணிக்குப் போஜனம் முடித்துக்கொண்டு சிறிதுநேரம் இருவருமாகக் கால்நடையாக உலாத்திவருவார்கள். பின்பு துரைத்தனக் காரியங்களில் அரசி கவனமுற்ற ...க் கணவர் அரசிக்கு அவ்விஷயங்களில் வேண்டிய உதவிகளை

உடனிருந்து செய்வார். அதுமுடிந்தபின் இருவரும் சித்திரம் எழுதியும் தகடுகளில் உருவங்கள் வெட்டியும் சிறிதுநேரம் விநோதிப்பார்கள். இல்லாவிடில் ஏதாவது இனிமையான புஸ்தகத்தை யெடுத்து உரக்க வாசிப்பார்கள். பின்பு மத்தியான்னபோஜனம் ஆனபின் பிரதானமந்திரி அரசியைப்பார்க்கவருவார். அவருடன் ராஜ்ய காரியமாகச் சிறிது ஆராய்ந்து கொண்டிருந்த பின் அரசி கணவருடன் வண்டியேறிச் சவாரிபோவார். இல்லாவிடில் இருவரும் சேர்ந்து குதிரையேறிச் சவாரிசெய்வார்கள். பின்பு மாலைப்பொழுதில் இருவரும் சேர்ந்து வீணைமுதலிய வாத்தியக் கருவிகளில் வாசித்துப் பாடி விநோதிப்பார்கள்.

இவ்வாறு அரசியும் கணவரும் ஒருவரையொருவர் இணைபிரியாது சுகித்து வாழ்ந்துவருங்காலத்தில், அவ்வின்பம் பன்மடங்கு பல்கிப் பெருகுமாறு மற்றப்பாக்கியங்கள் யாவற்றினும் மேலானதாகிப் பெறுதற் கரியதாம் புத்திர பாக்கியத்தையும் அவர்கள் பெறலாயினர். அரசிக்கு நவமணி போலும் ஒன்பது குழந்தைகள் பிறந்தார்கள். அவர்களில் நால்வர் ஆண்குழந்தைகள், ஐவர் பெண் குழந்தைகள். முதற்குழந்தை 'இராஜ பெருமாட்டி' என்று சொல்லப்படும் விக்டோரியா

அடிலெய்ட் மேரி லூயிசா பெருமாட்டி இவர் 1840 - ம் வருஷம் நவம்பர்மீ 21உ பக்கிங்ஹாம் அரண்மனையில் பிறந்தனர். இவர் அரசியின் முதற் குழந்தை யாதலினால்தானோ யாதோ இவரது குணாதிசயங்களையும் பால லீலைகளையும் பற்றி அரசி அடிக்கடி வெகுவாகப் புகழ்ந்து கூறியிருக்கின்றனர். இவர் சுபாவத்தில் மிக்க நுட்பமான கூரிய புத்தியுடையவராகச் சொல்லப்பட்டிருக்கிறார். இவர் குழந்தையாயிருந்தபோதுகாட்டிய புத்திசாதுர்யங்களையும் வேடிக்கைப் பேச்சுக்களையும் பற்றி அநேக கதைகள் உண்டு. இவர் ஜர்மானியசக்கிரவர்த்தியின்ஜேஷ்டபுத்திரரான ப்ரின்ஸ் ப்ரிடரேக் அவர்களுக்கு வாழ்க்கைப்பட்டு தம்கணவர் சக்கிரவர்த்திப்பட்டத்துக்கு வந்த பொழுது ஜர்மானியதேசத்துக்குச் சக்கிரவர்த்தினியானார். இவரது புத்திரர் வில்லியம் என்பவர் தான்இப்பொழுதுஜர்மானிய சக்கிரவர்த்தியாயிருக்கிறார்.

அரசியின் மூத்தபுத்திரர் வேல்ஸ் இளவரசர். இவர் 1841-ம்வருஷம் நவம்பர்மீ 9உ ஜனித்தனர். அரசிக்கு முதற் பிறந்த குழந்தை பெண் குழந்தையாய்ப் போனதினால் கொஞ்சம் மனச்சலிப்புற்று, பிள்ளைக் குழந்தையொன்று அரசியின் வயிற்றில் பிறந்து காணவேண்டுமென்று தாம் கொண்டிருந்த மனோரதம் நிறைவேறுதலின்,

ஜனங்களுக்குள் அன்றுண்டான சந்தோஷ மிகுதியைச் சொல்லி முடியாது. அன்று முழுதும் அதிர்வெடியின் ஓசை இடைவிடாமல் இடிமுழக்கம்போல் முழங்கிக்கொண்டேயிருந்தது. மணிகள் நாவோயாமல் கணகணவென்று அடித்துக்கொண்டேயிருந்தன. அரசியும் கணவரும் பெறலரும் பயனைப் பெற்றாராகிப் பெருமகிழ்வடைந்தார்கள்.

இரண்டாம் குமாரியாகிய அலிஸ் இளவரசி 1843-ம் ஞு ஏப்ரல் மீ 25 உ உதயமாயினர். இவர் பிறந்து சில நாளைக்கெல்லாம் அரசியின் கணவர் எழுதுகின்றார்:—"குழந்தைகள் மூவரும் அறிவிலும், உருவிலும் அதி தீவரமான அபிவிர்த்தியை அடைந்து வருகின்றார்கள். மூத்தவளாகிய 'புஸ்ஸி' இப்போது ஆறுடன் சேர்ந்துவிட்டாள். அவள் இங்கிலீஷ், ப்ரேஞ்சு இரண்டும் மிக்க தாட்டியாகவும் பொறுக்கியெடுத்தாற்போலேயும் பேசுகிறாள். இரண்டாவது குழந்தையோ, பெரியமனுஷன், முன்னிலும் இப்போது மிக்கதிடமடைந்து விட்டான். கடைசிக் குழந்தைதான் குழந்தைகளுக்குள்ளே அழகும் மகா நற்குணமும் களிப்புமுடையவள்."

இரண்டாம் புத்திரராகிய 'ஆல்ப்ர்ட் எர்னஸ்ட்' என்பவர் மறுவருஷம் ஆகஸ்டு மீ 6 உ பிறந்

தார். ஹெலினு வென்னும் மூன்றும் புதல்வி 1846 - ம் வருஷத்திலும், லூயிஸ் என்னும் நான் காம்புத்திரி 1848-ம் வருஷத்திலும் பிறந்தார்கள். அதன்பின் பிறந்த இரண்டு குழந்தைகளும் ஆண்குழந்தைகள். அவர்களில் ஆர்தர் பாட்ரிக் என்பவர் 1850-ம் வருஷத்திலும், லியோபோல்ட் என்பவர் 1853-ம் வருஷத்திலும் ஜனித்தார்கள். பாட்ரிக் என்னும் பெயர் இடவந்ததைப்பற்றி ஒரு கதையுண்டு. அரசி 1849-ம் வருஷம் தமது குடும்பசஹிதம் ஐர்லாந்துக்குப் போயிருந் தனர். அங்குஜனங்கள் எல்லோரும் அரசியின் குழந்தைகளை ஆசையோடும் கண்டு களித்தார் கள். அவர்களில் ஒரு கிழவி அரசியைநோக்கி, "ஓ அரசி, உமது அருமைக் குழந்தைகளில் ஒருவர்க்கு 'பாட்ரிக் இளவரசு' என்று பெயர் வையுமே; ஐர்லாந்து முழுதும் உமக்காகப் பிராணனை வேண்டுமாயினும் கொடுக்குமே" என்றனள். அதனுல் அடுத்தவருஷத்திற்பிறந்த குழந்தைக்கு அப்பெயர் இடப்பட்டது. லியோ போல்ட் என்னும் பெயர் அரசிக்கு அம்மாஞ கிய பெல்ஜியம் ராஜாவின்பெயர். அப்பெயர் அவர் அரசியினிடத்தில் பால்யத்தில் வைத்தி ருந்த ப்ரீதிக்குமாருக வைக்கப்பட்டது. 1857-ம் வருஷம் அரசிக்குக் கடைசிக்குழந்தையான பியட் ரிஸ் பெருமாட்டி பிறந்தனர். இவர் அரசிக்கு எல்லோரிலும் மிகப்பிரியமான குழந்தை.



Her Majesty the Queen and Prince Arthur.

மாக்ஷிமைதங்கிய மஹாராணியாரும் ப்ரின்ஸ் ஆர்தரும்.

## IX.

### குணம் நிறைந்த தாயார்.

அரசி தமது குழந்தைகளிடத்து வைத்த நேசத்தையும் அவர்களை வளர்த்துப் பாது காத்த தன்மையையும் இங்கு சிறிதுவிவரித்துக் கூறுவோம். அரசிக்கு மற்றத் தாய்மாரைப் போலப் பிள்ளைகளைத்தாமே எடுத்து வளர்க்கப் போதுமான சாவகாச மில்லாததனால் செவிலிகளை நியமிக்கவேண்டி வந்ததாயினும், அக்காரணத்தால் தமக்கு அப்பொறுப்பு முற்றும் விட்டுப் போனதாக எண்ணவில்லை. தமதுகுழந்தைகளுக்கெல்லாம் முதலில் தாமே முலைப்பால் கொடுத்து வளர்த்து வந்தார். கொஞ்சம் பணம் படைத்தவர்களெல்லாம் இளம்பிள்ளைத்தாய்ச்சி வைத்துக் குழந்தைகளை வளர்த்து வருவது வழக்கமாயிருந்த அக்காலத்தில் அரசிமட்டும் அந்தவழக்கத்தைக் கவனிக்காது யாவருக்கும் இயற்கையாகவுள்ள சுபாவசித்தத்தை யனுசரித்து, தம் குழந்தைகளுக்குத் தாமே தாய்ப்பால் கொடுத்து வளர்த்துவந்தார். அரசிதாமும் குழந்தையாயிருந்தபொழுது தாய்ப்பால் குடித்துவளர்ந்தவரே. இதுமட்டு மன்றி கைக் குழந்தைகளுக்கு அரசியார் தாமே தம் கையினால் ஸ்நானம் செய்துவைக்க அவகாசம் தேடிக்கொள்வார். அரசியின் பெருமைக்குமுக்கியமான கா

ரணம் யாதெனில், அவர் தமது ஒப்புயர்வற்ற ராஜபதவியினாலே தமக்கடுத்த பெண்மைக்குணங்களைச் சிறிதும் கைவிடாததுதான். ஒருதரம் "பால்மோரல்" அரண்மனைக்குச்சமீபமாக ஒருஎளியவன்குடிசைக்கெழுந்தருளியபோது, அங்கு சடிதியில் வந்த அரசியைக்கண்டு அவ்வீட்டு ஸ்திரீகள் தாம் செய்துகொண்டிருந்த காரியங்களை விட்டுச் சற்று பிரமித்து நிற்க, அரசி அவரைப்பார்த்து, "நீங்கள் ஏன் என்னைக்கண்டு திகைக்கவேண்டும்; நானும் உங்களைப் போலே ஒரு பெண்பிள்ளைதானே" என்று அன்பாகப் பேசி அவர்கள் திகைப்பையோட்டி அவர்களுக்குச் சமானமாக அவர்களுடன் சம்பாஷித்துக்கொண்டிருந்தார். இப்படியே ஒவ்வொருவிஷயத்திலும்தமக்கடுத்தசுபாவமான குணங்களைக் கைவிடாமல், கணவரிடத்தில் காதல்நாயகிபோலவும், புதல்வரிடத்து அன்புற்ற நற்றாய் போலவும், ஏனையிடங்களில் அவ்வவ்விடங்களுக்குத் தக்கபடியும் அன்பும் அருளும் மாறாமல் இருந்து வந்தார்.

"புவியினுக் கரசியாகிப் பொருந்துதங் காதல்நாதற்
கெவமறு காந்தையாகி யினியதம் புதல்வர்க்கன்பார்
நவையறு நற்றாயாகி நண்ணரும் பெண்மை வாய்ந்து
தவனிடையவர்க்குச் சூளாமணி யெனத்துவன்றானன்றே."

பிள்ளைகளை வளர்க்கும் விஷயத்தில், அவர்களை நடை யுடை ஆகாரங்களில் கூடியவரை

யில் எளியவர் போல நடத்தி, சாத்தியமான வளையில் அவர்களைத் தாய்தந்தையரோடு கூடியிருக்கச் செய்து, ஒவ்வொரு விஷயத்திலும் தமக்குத் தாய் தந்தையரிலும் இதம் செய்பவர் வேறொருவர் இல்லை யென்னும்நம்பிக்கை அவர்களுக்கு உண்டுபண்ணுதல் பெற்றோர் கடமை; என்பது அரசியின் கொள்கை யாதலின், அதற்குத் தக்கபடித் தம் பிள்ளைகளை வளர்த்து வந்தனர். இவ்விஷயத்தைச் சுட்டிச் செவிலிகளில் ஒருத்தி, "அரசி ராஜபதவிக்கு எவ்வளவு அருகமுடையாரோ அதுபோலவே ஒரு ஏழைக் குடித்தனக்காரன் மனைவியாயிருக்கவும் அருகமானவர்" என்றுசொல்லியிருக்கின்றனள்.

பிள்ளைகளுக்குப் படிப்புச்சொல்லிக்கொடுத்து அவர்கள் நடத்தையை மேற்பார்வை செய்துவர நியமிக்கப்பட்ட உபாத்தினிகளிடத்தும் தாதிகளிடத்தும் அரசி அதிகமதிப்புவைத்து அவர்களை நடத்தியதுமன்றி அவர்களதிகாரம் தம் குழந்தைகளிடத்தில் செல்லும்படி வெகு கண்டிப்பாயுமிருந்து வந்தனர். தாம் அப்படி நடந்துகொண்டால்தான் அவர்களிடத்தில் குழந்தைகளுக்குப் பயபக்தி யிருக்குமென்றும், தாதிகளுக்குக்கீழ்ப்படியாதகுழந்தைகள் மற்றவர்களுக்கும் கீழ்ப்படிய மாட்டார்களென்றும்

தம் பெற்ரோர் மதிப்பாய் நடத்தாதவர்களைக் குழந்தைகள் தாமும் மதிக்கமாட்டார்களென்றும் சொல்லி, தம் குழந்தைகளினிமித்தம் அவர்களை விசேஷ மரியாதையோடு நடத்திவந்தனர்.

அரசிக்கு அநேக காரியங்கள் இருந்தபோதிலும், தமது பிள்ளைகளைப் பாடம் ஒப்பித்துக் கேட்கப் பலமுறையும் சாவகாசம் எற்படுத்திக்கொள்வார். ஒருதரம் பிள்ளைகளின் உபாத்தினிகளில் ஒருவள் தன் தயாருக்குத் தேக அசௌக்கியமென்று கேள்விப்பட்டு அவளுக்கு உதவியாக விருக்கும்படி வீட்டிற்குப்போக விரும்பினாள். அரசி தம் அன்னையிடத்து மிக்க விசுவாசமுற்றவராதலால் உபாத்தினிகாட்டிய மாதுர்பக்திக்குச் சந்தோஷப்பட்டு அவளுக்கு விடைகொடுத்தனுப்பி, அவள் வருமளவும் தாமே அவளுக்குப் பதிலாகப் பிள்ளைகளின் படிப்பை விசாரித்துவந்தனர்.

அரசி தம் குழந்தைகளுக்குத் தெய்வபக்தியும் ஆத்மசுத்தியுமுண்டாகும்படி மதவிஷயங்களைப்போதிப்பதில் மிக்க கவனமுடையவர்; ஆதலின், பலமுறையும் தாமே மதவிஷயங்களைப் போதிப்பார். ஒருநாள் ஒரு பெரியவர் அரசியைப் பார்க்கவந்தபோது, பிள்ளைகளை மதவிஷயமாகக் கேள்விகள் போட்டுப் பரிக்ஷை

பண்ணவே, அவர்கள் கேட்ட விஷயங்களொன்றும் தவருமல் நன்ருகப் பரிக்ஷை கொடுத்தார்கள். அப்போது அவர் "உங்களுக்கு இவ்விஷயங்களை இவ்வளவு செவ்வையாகப் போதித்த உபாத்தியாயர் மிகவும் கெட்டிக்காரர்" என்று மெச்சிக்கொள்ளவே, பிள்ளைகள் சிரித்துக்கொண்டு "எங்களுக்கு இந்தப்பாடம் கற்பிப்பவர் எங்கள் தாயார்தாம்" என்றனர்.

அரசி தம் பிள்ளைகளுக்கு அதிகவிலை பெருத சாதாரணமான உடைகள் உடுத்திவந்ததைப்பற்றி ஒரு வேடிக்கையான கதை யுண்டு. ஒரு நாள் ஒரு துரைசானி அரசியையும் குழந்தைகளையும் பார்க்கலாமென்று கருதி விண்ட்ஸர் தோட்டத்துக்குப் போயிருந்தபோது அங்கு ஒரு புருஷனும் ஸ்திரீயும் இரண்டு மூன்று பிள்ளைகளுடன் உலாத்திக்கொண்டிருப்பதைக்கண்டு, அவர்களுடைய எளிய உடையால் அவரை இன்னுரென்று கூடத் திரும்பிப் பாராமல், சற்று அப்புறம் போய் அங்கு ஒரு தோட்டக்காரனைக் கண்டு, "அப்பா, இவ்விடத்தில் அரசியைப் பார்க்கலாமென்று வந்தேன்; அதற்கு எப்போது சமயம் கிடைக்கும்?" என்ருள். அவன் "இன்றைக்கு இனிமேல் பார்க்க முடியாது. அதோ அரசியும் கணவரும் பிள்ளைகளும் அரண்

மனைக்குத்திரும்பி விட்டார்கள் பார்த்தீரா ?" என்றான். அதுகேட்டு அவள் ஆச்சரியப்பட்டு "அவர்தானா அரசி! ஐயோ அசடி, நான் அந்தவழியாகத்தானே வந்தேன். யாரோ என்றெண்ணி யல்லவோ திரும்பிக்கூடப்பாராமல் வந்துவிட்டேன்" என்று தன்னை நொந்து கொண்டனள்.

அரசி பிள்ளைகளிடத்தில் மிக்க அன்பு பாராட்டி அவர்களைச் செல்வமாக வளர்த்த போதிலும் அவர்கள் தங்கள்மனம் போனபடியும் தம் கட்டளைகளை மீறியும் சிறிதும் நடக்க இடம் கொடுப்பதில்லை. அவர்கள் சொன்ன காரியங்களைக் கீழ்ப்படிந்து செய்தே தீரவேண்டும். எல்லோரிடத்தும் தயவும் மரியாதையுமாகவிருக்கவேண்டும். இவ்விஷயங்களில் அரசி மிக்க கண்டிப்புள்ளவர்.

ஒரு நாள், அரண்மனையில் ஒரு வேலைக்காரி ஜன்னல் கம்பிகளுக்கு வன்னமிட்டுத் துலக்கிக்கொண்டிருக்கையில், இராஜ குமாரிகளில் இருவர் அவளிடத்திலிருந்து அவ்வன்னமிடும் தூரிகையைவாங்கி விளையாட்டுக்கு அவளது முகத்தில் வன்னத்தைத் தேய்த்து விட்டார்கள். இவ்விஷயம் அரசியின் காதில் பட்டதும், அரசி அவ்விருவரையும் அழைத்துக்கொண்டு அத்தாதியிடம் சென்று, அவளது மன்னிப்பைக் கேட்கும்படிச் செய்தனர்.

பின்னொருதாம் தாம் இராணுவங்களைப் பரிசோதிக்கும்படிச் சென்றகாலத்தில், தம்முடன் சென்ற இராஜ பெருமாட்டியார் உடன் வரும் சேவகர்களிடத்தில் குழந்தைகளுக்குள்ள வழக்கப்படி சில சேஷ்டைகள் செய்ய அரசி கண்டு கோபிக்கவும் கேளாமற் போயினர். பின்பு தமது கைக்குட்டையைத் தவறி விழுந்தது போலக் கீழேபோட்டு விட்டுச் சேவகர்களை எடுத்துக் கொடுக்கச்சொல்ல அரசி அதற்குச் சம்மதியாமல் மகளை நோக்கி "நீயே வண்டியை விட்டிறங்கி எடுத்துக் கொண்டுவா" என்று ஆஞ்ஞாபித்தனர். பாவம்! அவர்தாமே வண்டியை விட்டிறங்கிப் புழுதியில் பிரண்ட அச்சவுக்கத்தை எடுத்துக் கொள்ள வேண்டியதாயிற்று.

பிள்ளைகளிடத்தில் அரசி வைத்த அன்பையும் கண்டிப்பையும் பற்றி இன்னம் அநேக கதைகளுண்டு. அரசியின் புதல்வர்கள் நாளைக்கும் அவரிடத்தில் மிக்க பயபக்தி யுடையவர்களாய் அவர் சொல்லை மீறிநடக்கமாட்டார்கள். வேல்ஸ் இளவரசர் பிராயமடைந்த காலத்தில் அரசி அவருக்கெழுதிய கடிதத்தில் எவ்வளவு சிலாக்கியமான புத்திமதிகளை எடுத்துச் சொல்லியிருக்கிறார்! தாமும் தமது கணவரும் அவரது படிப்பு விஷயத்தில் ஏற்படுத்திய சில ஏற்பாடுகள் அவருக்குக் கடினமாகத் தோற்றியிருக்கலாமாயினும் தங்கள் உத்தேசம் அவர் மேலால் நன்மையடைந்து சுகப்படுதலே யன்றி வேறொன்றல்ல வென்

றும், மேலால் பிறருடைய முகஸ்துதிக்கும் இச்சக வார்த்தைகளுக்கும் அவர் இடங் கொடாமல் அவரது மனசை ஸ்திரப்படுத்துவதற்கு எண்ணிச் செய்தவை யென்றும், இனிமேல் அவர் தமது கட்டளைக்குட்பட்டு இருத்தல் அவசியமல்லவென்றும், அவர் தங்களைக் கேட்கும்போதெல்லாம் தக்க புத்திமதிகளைப் போதிக்கத் தாம் தயாராயிருப்பினும், தாமாகவே இன்னபடிசெய்,போவென்று ஒன்றையும் சொல்லார் என்றும், இன்னம் அநேக விஷயங்களையும் அதில் அவருக்கு வற்புறுத்தி யிருக்கின்றனர். அக்கடிதத்தைப் படித்துப் பார்த்ததும் இளவரசர் நெஞ்சுருகிக் கண்ணீர் விட்டு அரசியின் அன்பையும் அறிவையும் சிந்தித்துத் துதித்தனர்.



*Eos*

(*From an Etching by H. M. the Queen.*)

(மஹாராணியார் கைப்படச்செய்த சித்திரவேலை.)

## X.

### 'ஆஸ்போர்ன்', 'பால்மோரல்' அரண்மனைகள்.

ராஜ பரிவாரங்களைத் துறந்து, ராஜபோகங்களையும் அலட்டுகளையும் மறந்து, தம் இன்னுயிர்க்கணவரோடும் குழந்தைகளோடும் சுயேச்சையாய் இனிமையாகப் போதுபோக்குவதற்கு, பக்கிங்ஹாம் அரண்மனையாவது வின்ட்ஸர் மாளிகையாவது வசதியாகாமையினால், இங்கிலாந்தின் தென்கரையில் 'வைட் தீவில்' தமக்குச் சொந்தமாக 'ஆஸ்போர்ன்' என்னும் ஓர் அரண்மனையைக் கட்டுவித்து அங்குசென்று அரசி வசித்துவந்தனள். அங்கு பிள்ளைகளுக்கு முக்கியமான விளையாட்டு அவர்களுக்குச் சொந்தமாகக் கொடுக்கப்பட்ட ஒரு பூந்தோட்டத்தில் அவர்களுக்கிச்சையானபடிக் கொத்தி வெட்டிச் செடிகொடிகள் நட்டுப் பயிர் செய்வதேயாம். இத்தோட்டம் அரசியால் தமது பிறந்தநாளன்று அவர்களுக்கு வெகுமதியாகக் கொடுக்கப்பட்டதாம். அதன் மத்தியில் ஓர் அழகிய வசந்த மண்டபமும் அம்மண்டபத்துக் கெதிரில் ஒன்பது பிள்ளைகளுக்கும் ஒன்பது சிறுதோட்டங்களும் அமைக்கப்பட்டிருந்தன. அத்தோட்டங்களில் பிள்ளைகள் தினந்தோறும்,

இரண்டு மூன்று மணிநேரத்துக்குக் குறையாமல் தோட்டக்காரன் காட்டியபடி வேலை செய்து வருவார்கள். ஒவ்வொருவருக்கும் அவரவர்கள் பேர் வெட்டிய மண்வெட்டி முதலிய கருவிகள் கொடுக்கப் பட்டிருந்தன. ஆல்பர்ட் பிரபு பிள்ளைகள் ஒவ்வொருவரும் செய்த வேலைகள் இன்னின்னவென்று தமக்கு அன்றாடம் தவறாமல் ஒப்பிக்கும்படி தோட்டக்காரனுக்கு நியமித்து, அவன் சொன்னபடி அவரவர் வேலைக்குத் தக்கபடி பிரதிதினம் சம்பளம் கொடுப்பார். இது தவிர, இராஜகுமாரர்களுக்குத் தச்சுவேலை கற்றுக்கொள்ளும்படி ஒரு வேலைச் சாவடி ஏற்படுத்தப் பட்டிருந்தது. இராஜகுமாரர்கள் தச்சுவேலை கற்றுப்பழகித், தமதுபிதாவின் உதவியினால் சிறிய கோட்டை யொன்று தாமே செங்கல் அறுத்தல் சுவரெடுத்தல் முதலான சமஸ்த வேலைகளும் செய்து கட்டினார்கள்.

இராஜகுமாரர்கள் இவ்வாறு சுறுசுறுப்பாய் உபயோககரமானவேலைகள் செய்து விநோதித்துக்கொண்டிருக்கையில், இராஜகுமாரிகள் சோம்பலா யிருக்கவில்லை. அவர்களுக்கும் அவ் வசந்த மண்டபத்தின் கீழ்த்தளத்தில் சமையல் கட்டடமொன்று அமைக்கப்பட்டு, அதில் சமஸ்தமான சாமக்கிரியைகளும் ஏற்படுத்தப்பட்

டிருந்தன. இவ்விடத்தில் அப்பெண்கள் பக்ஷணம் பணியாரம் செய்யவும், தம்தோட்டத்திலிருந்து பறித்த காய்கறிகளைச் சமைக்கவும், பழவர்க்கங்களைப் பிழிந்து பாயசம்பண்ணவும், பலவிதமான ஊறுகாய் போடவும், பழகிவந்தார்கள். அவர்கள் அச்சமயற் கட்டடத்தில் ஆகா ! எத்தனை வேடிக்கைச் சமையல் விதம் விதமாய்ப் பண்ணி யிருப்பார்கள் ! எப்போதாவது பிறந்தநாளைக்கோ வேறு விசேஷ நாளைக்கோ இராஜகுமாரிகள் அரசியையும் ஆல்பர்ட் பிரபுவையும் தாம் சமைத்த உணவுகளைவந்து சாப்பிடும்படி அழைப்பார்க ளாயினும், சாதாரணமாக அவர்கள்சமைத்த பதார்த்தங்களைச் சமீபத்திலுள்ள ஏழை ஜனங்களுக்குக் கொடுத்துவிடுவது வழக்கம். இவ்வாறு, அரசி தம் பெண்களுக்குப் பரோபகாரகுணத்தை அதிபால்யத்திலேயே செய்கைகளால் காட்டும்படிப் போதித்து வந்தனர்.

இவைதவிர அவ்வசந்த மண்டபத்தின்மேல் மாளிகையில் பலபொருட்காட்சிச் சாலையொன்று அமைக்கப்பட்டிருந்தது. அதில் வைத்திருந்த ஒவ்வொரு பொருளும் பிள்ளைகளாலேயே சேகரிக்கப்பட்டது. அங்கு, ஓஷதி சாஸ்திர முறைப்படி வரிசையாக அடுக்கிவைக்கப்பட்ட அநேக மலர்களும், பூமிசாஸ்திர

விஷயங்களைப் புலப்படுத்துவதற்கேற்ற பல விதமான பாறைகளும் புதைந்த பொருள்களும், பஞ்சடைத்துத்தைத்த அநேக பக்ஷிமிருகங்களின் தோல்களும், இன்னம் பிள்ளைகளால் தானே செய்யப்பட்ட அநேக பொருள்களும் வைக்கப்பட்டிருந்தன.

அரசி இங்கு வசித்திருக்கும் காலங்களில் சமீபத்திலுள்ள ஏழை ஜனங்களுக்குச் செய்துள்ள நன்மைகளைப்பற்றி அநேகம் கதைகள் உண்டு. அவர்களை அடிக்கடிப் போய்க்கண்டு அன்பாய்ப்பேசிவருவதையன்றி, அவர்களுக்கு வியாதிமுதலிய சங்கடங்கள் நேரிட்டால் அவர்களுக்கு மருந்து முதலியன தம் கையினலே குழைத்துக் கொடுத்து ஆதரித்து, அவர்களுக்கு வேதபுஸ்தகத்தைப் படித்துக் காட்டி ஆறுதல் உண்டுபண்ணுவார். இவ்வாறு செய்யுங்காலங்களில் தாம் அரசியென்றும் தமக்கு அவ்விதக் காரியங்கள்செய்வது இளப்பம் என்றும் எண்ணுவதே யில்லை. அவற்றைத் தமக்குரிய கடமைகளாக நினைந்து மகிழ்ந்துசெய்து வருவார்.

ஆஸ்போர்ன் அரண்மனை இவ்வளவு இனிமையாயிருந்தும், ஆல்பர்ட் பிரபுவுக்கு உடம்பிற்கு ஒத்துக்கொள்ளவில்லை. சுபாவத்தில் மிக்கதிடகாத்திரமல்லாத அவர்க்கு அவர் சுதேச



Balmoral Castle.] [பால்மோரல் அரண்மனை.

மலைநாடு போன்ற ஓரிடம் வேண்டியிருந்தத
னால், அவர் தமக்குச் சொந்தமாக பால்மோரல்
என்னும் ஊரில் ஒரு அரண்மனையும் தோப்புத்
துரவுகளும் வாங்கி அங்கு அரசியுடனும் குழந்
தைகளுடனும் போய் வசிப்பாரானார். இந்நகர்
'ஸ்காட்லாண்ட்' தேசத்தில் உயர்ந்த காடுகள்
சூழ்ந்த மலைப்ரதேசத்தில் உள்ளது. 'லண்டன்'
நகரின் நெருக்கத்திலும் பூசலிலும் இருந்தொ
ழிந்து ஏகாந்தமாகவிருக்க எண்ணுவோருக்கு
இவ்விடத்திலும் இனிமையானது பிரிடிஷ்தீவு
களில் வேறில்லை.

இங்கு செம்மான் கன்றுகள் குன்றுகளின்
மீதும் மரங்களினூடும் துள்ளித் திரிவதைக்
கண்டு களித்து, குலைகுலையாகப் பூத்த பன்னிற
மான மலர்க்கொத்துக்களைப்பறித்து, மலைமே
லிருந்து மதுவுண்டு மகிழ்ந்து அழகிய மலைச்
சுனைகளின் கரையில் கட்டமுதுண்டு, பாறை
மேல் ஏறி அருவிநீராடிப் பலவிதமாகக்களித்து
ஏகாந்தமாக இனிப்புற்றிருத்தலின், 'பால்மோ
ரல்' என்னும் இப்பர்வதக் கிருகத்துக்குப்போ
வதென்றால் அரசிக்கும் குழந்தைகளுக்கும்
அபரிமித சந்தோஷமாகவும் அதைவிட்டுப் பிரி
வதென்றால் அதிக வருத்தமாகவும் இருக்கும்.

அரசியை அவரது ஸ்வக்கிருஹத்தில் பார்க்
கவேண்டுமாயின் பால்மோரலுக்குச் சென்றால்

தான் பார்க்கலாம். அவ்விடத்தில்தான் அரசிக்குத் தமது ராஜாங்கங்களை முற்றிலும் ஒழித்து சாதாரண ஜனங்களோடு கலந்து சகவாசம் செய்யத்தரம். பால்மோரல் அரண்மனையில் மற்ற இடங்களைப்போலக் கட்டுக்காவல் ஒன்றும் கிடையாது. யாராவது அயோக்கியர்களும் உள்ளே வரத்தகாதவர்களும் வந்தால் அவர்களைச் செல்லவொட்டாமல் தடுப்பதற்கு மாத்திரம் ஒருசேவகன் பாருவிருப்பான். அரசியும் இஷ்டப்படி வெளியே போவதும் வருவதுமா யிருப்பார். சுற்றுமுள்ள எளியஜனங்களின் குடிசைகளில் சென்று அவர்களோடு சமானமாகப் பேசிக்கொண்டிருந்து அவர் யோகக்ஷேமங்களை விசாரித்து, அவர்களுக்கு அடிக்கடி பலவித உபகாரங்களைச் செய்வார். அவ்வூரில் உள்ள ஒவ்வொரு பேர்வழியையும் அவர்குலம் கோத்திரம் முதலியவிவரங்களையும் நன்முக அறிவார்.

அரசி தம் அரண்மனைக்குச்சுற்றுக்காதத்தில் உள்ள எளிய ஜனங்களுக்கு நோய் நொடியுண்டானல் அவர்கள் ஔஷதமோ வேறு வேண்டிய பொருள்களோ அரண்மனைக்கு ஆளனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம் என்று உத்தாவு செய்து அவர்களின் உபயோகார்த்தமாக ஒரு தர்மவைத்தியசாலையும் அவர்கள்

பிள்ளைகளின் படிப்புக்காக அநேக பாடசாலைகளும் ஒரு புத்தகசாலையும் ஏற்படுத்தி யிருக்கின்றார். அரசி அவர்களுக் குண்டாகும் சுக துக்கங்கள் ஒவ்வொன்றிலும் அவரோடுகலந்து கல்யாணம் முதலிய சுபகாரியங்களில் தாமும் கூட விருந்து களித்தும் கஷ்ட நஷ்டங்களில் தாமும் அனுதாபம் அடைந்தும் தமது உறவினர் போல அவரைப் பாவித்து வருவார்.

அரசி அவ்வேழை ஜனங்களுக்கு அடிக்கடிச் செய்துள்ள உதவிகளைப் பற்றி அநேக இனிமையான விர்த்தாந்தங்கள் உள்ளன. ஒரு நாள் அரசி மழையும் தூளியுமாயிருக்க வண்டி போட்டுக்கொண்டு சிறிது சஞ்சரித்துத் திரும்பிவருகையில், வழியில் ஒரு குடிசை காற்றினால் பிரிந்து கிடப்பதைக் கண்டு வண்டியை நிறுத்தி அக்குடிசையில் சென்று பார்த்தார். அதில் ஒரு ஸ்திரீ படுக்கையில் கிடப்பதையும் ஒழுகும் இடங்களில் மழை ஜலத்தை ஏந்துவதற்கு அங்கங்கே பாத்திரங்கள் வைத்திருப்பதையும் பார்த்து உடனே அக்கூரையை வேய்ந்துகொடுக்கும்படித் தம் உத்தியோகஸ்தர் ஒருவருக்குக் கட்டளையிட்டார்.

இன்னொரு தடவை அவ்வூரில் ஒருவனுக்கு ஏதோ அகஸ்மாத்தாக அபாயம் உண்டாயிற்

றென்று தெரிந்து தமது வைத்தியனை முன் னாலனுப்பித் தாமும் அவனுக் குபயோகமாகக் கூடிய சிலபதார்த்தங்களை யெடுத்துக் கொண் டு அவனைப்போய்ப் பார்த்துவந்தார். பின்னொ ருதரம் அவ்வூரில் இரண்டு பிள்ளைகள் ஜலத் தில் விழுந்து இறந்து போக அரசி உடனே அப்பிள்ளைகளின் தாயைச் சென்று கண்டு அவளுக்கு ஆறுதல் சொல்லித் தேற்றியது மன்றி, அவளுக்கு உபகாரமாக நூறு ரூபாய் ரொக்கமும் கொடுத்தனர்.

அரசியின் பரோபகாரம் முதலிய குணங் களை விரிக்க இன்னம் இதுபோன்ற அநேக திர்ஷ்டாந்தங்கள் உள்ளன. அவற்றை விவ ரிக்கின் மிக விரியுமாதலால் சிலவற்றை மாத் திரம் குறிப்பிட்டோம்.

---

## XI.

### பிரயாணங்கள்.

அரசியும் கணவரும் 1842 ம் - ஆல் தமது ராஜ்யத்துக்குட்பட்ட இங்கிலாந்து, ஸ்காட் லாந்து, ஐர்லாந்து என்னும் முத்தேசங்களி லும், அழகிய காட்சி விசேஷத்தினாலோ விசே ஷமான கைத்தொழில் வர்த்தகங்களாலோ பிரசித்தியடைந்த ஒவ்வொரு இடத்தையும்

சென்று பார்க்கத் தொடங்கினார்கள். முதல் முதல் ஸ்காட்லாந்துக்குச்சென்று எடின்பரோ முதலிய நகர விசேஷங்களைக்கண்டு அங்கு ஜனங்கள் எல்லோரும் மகா குதூகலத்தோடும் தம்மை எதிர்கொண்டழைத்து மிக்க ராஜபக்தியோடும் விசுவாசத்தோடும் பெருஞ் சிறப்புச் செய்யப்பெற்றனர். அரசியின் சூக்ஷ்மதிருஷ்டியையும் எளியவரிடத்துக்காட்டும் ஆதரவையும் விவரிக்கும் திருஷ்டாந்தம் ஒன்று இச்சமயத்து நிகழ்ந்ததாதலின் இங்கு குறிப்பிடத்தக்கது. 'எடின்பரோ' நகருக்குச் சமீபத்தில் இருந்த ஒருகனவான் அரசி ராஜாங்கத்துடன் பட்டணப் பிரவேசம் ஆன அன்றைச்சாயங்காலம் தம் சேவகனைப்பார்த்து, "அடே ஜான், அரசியைப்பார்த்தாயா?" என்றார். அதற்கு அவன் "ஆமாம் சாமி பார்த்தேன்" என்றான். "நல்லது, அவரைப்பற்றி உன் அபிப்பிராயம் என்ன?" என்று மறுபடியும் அவர்கேட்க, அவன் "நிஜமாய்ச்சொல்லுகிறேன், அவர் வந்து அவரை நான்பார்ப்பதற்கு முன்னே நெஞ்சும் மார்பும் திடுதிடுவென்று அடிக்கப் பயந்துநடுங்கிக் கொண்டிருந்தேன்; பார்த்தபின் என் பயமெல்லாம் எங்கேயோ பறந்து போய்விட்டது! நான் அவரைப்பார்த்தேனோ இல்லையோ அவரும் என்னைப்பார்த்துத் தலைவணங்கினார். அது

கண்டு நானும் தலைவணங்கித்தண்டனிட்டேன். ஆகா! அவர் எவ்வளவு நல்ல சுபாவமுடையவர்! அவரிடத்தில் கர்வம் என்பது லவலேசமும் இல்லை" என்றான்.

மறுவருஷம் ஆகஸ்டுமாதத்தில் அரசியும் கணவரும் கப்பலேறி இங்கிலாந்தின் தென்கரையில் உள்ள இடங்களையெல்லாம் போய்ப் பார்த்தார்கள். அப்போது நடந்த ஒருவிஷயம் இங்கு குறிப்பிடத் தக்கது. அரசி ஸௌதாம்ப்டன் என்னும் துறைமுகத்தில் இறங்கினபோது மழை பலமாய்ப்பெய்ய அங்கு இறங்கும் துறை நனைந்து வழி சிறிது ஈரமாய்ப்போனபடியால் அரசியை எதிர்கொண்டுபசரிக்க வந்திருந்த அவ்வூர்ப் பிரதான அதிகாரிகள் தாம் மேல்தரித்த உத்தரீயங்களைக் கீழ்விரித்து அரசிக்குக் காலில் ஈரம்படாமல் நடந்துபோகும்படி நடைபாவாடை போட்டார்கள். மறுவருஷத்தில் அரசி பின்னொருதரமும் ஸ்காட்லாந்தின் மலைநாடுகளைப் போய்ப்பார்த்து வந்தார்கள்.

அதன்பின் ஐந்துவருஷத்துக்குப் பிறகு, அரசி ஐர்லாந்துதேசத்துக்கு முதல் முதல் சென்று அவ்விடத்தில் தமது பிரஜைகளெல்லாம் தம்மைக்கண்டு ஆனந்திக்கும்படி தரிசனம் கொடுத்தனர். அங்குநின்றும் நீங்குகை

யில் அரசி பதினாயிரம் ரூபாய் ஏழைகளுக்கு தர்மச்செலவு பண்ணும்படிக் கொடுத்துக் கன்றைநீங்கி இரங்கும் தாய்ப்பசுப்போலப் பிரிவாற்றாமையால் வருந்தித் தம்நகர்க்கு மீண்டனர்.

இவ்வாறு, தமது ராஜ்யத்தில் பலவிடங்களையும் போய்ப்பார்த்து வந்ததையன்றி அரசி இதர ராஜ்யங்களுக்கும் அடிக்கடிப் போய்வருவதுமுண்டு. அரசியும் கணவரும் 1843-ம் வருஷம் பிரான்சுதேசத்துக்குச் சென்று அங்கு தம் பிதாவின் சிநேகிதராகிய லூயி பிலிப் என்னும் ப்ரெஞ்சுதேசாதிபதியால் அன்போடும் உபசரிக்கப்பட்டு சில பகல் அங்கிருந்தனர். பின்பு, பெல்ஜியம் தேசத்திற்கும், அதன்பின் 1845-ம் வருஷம் ஜர்மனிதேசத்திற்கும் அரசியும் கணவரும் விஜயம்செய்தார்கள். அப்போது அரசியை ப்ரஷ்ஷிய தேசத்தரசர் எதிர்கொண்டழைத்து உபசரித்துச் சிறப்புச்செய்து, பின்பு அரசியுடன் நெடுந்தூரம் தாமும்சென்று அரசிக்கு விசேஷமரியாதை செய்தனர். அதன்பின் பத்துவருஷம் சென்றபிறகு இராணியவர்கள் பாரீஸ் நகருக்கு எழுந்தருளி, அங்கு நிகழ்ந்த பலபொருட் பெருங்காட்சி விசேஷத்தையும் அவ்வழகிய நகரின் மற்ற விசேஷங்களையும் கண்டு களிப்புற்றனர்.

அரசி தம் புத்திரிகளைக் கல்யாணம் செய்து கொடுத்தபின் அவர் தம் புக்ககத்தார்களாகிய ஐரோப்பியநகரங்களுக்கு அடிக்கடி போய்வருதல் வழக்கம். 1869-ம் ஆ அரசி தம்பெயரைத் தெரிவிக்காமல் மாறு பெயர் பூண்டு ஸ்விட்சர்லாந்து தேசத்துக்குப் போய் வந்தனர். அரசிக்கு மற்றத்தேசங்களிலும் இத்தலி தேசம் மிக்க பிரியமானது. அதிலும் ப்ளாரன்ஸ் பட்டணம் தமது கணவருக்குஅதிக பிரியமாதலின் தமக்கும் அதுமிக்க பிரியமாயிற்று. அரசி அந்நகருக்கு அடிக்கடிச்சென்று பலநாள் தங்கியிருப்பது வழக்கம்.

இவ்வாறு 'இத்தலி' முதலிய வெளிநாடுகளுக்குச் செல்லுங்கால் அரசி முக்கியமாய் அநேக இந்திய சேவகர்களைத் தமது பரிவாரத்தில் சேர்த்துக்கொண்டு செல்வார் போலத்தோற்றுகின்றது. இவர்கள் நடையுடைகளில் மகாபகட்டாய்ப் பார்த்தவர்கள் கண்டு பயப்படும்படியாயிருப்பார்களென்றும் தெரியவருகின்றது. அரசி போய்ப்பார்த்துவந்த ஓர் ஊரில் அவர்போனபின் ஒருவர்சென்று அரசியைப்பற்றி அவ்வூரார் அபிப்பிராயத்தை விசாரித்தபொழுது, அவர்கள் ''அரசியிடத்தில் எங்களுக்குச் சிறிதும் பயமில்லை. அவரால்எங்களுக்கு ஓர் உபத்

திரவமும் உண்டானதில்லை. அவருடைய இந்தியச்சேவகர்கள்தான்-அப்பா! அவர்களுடைய நடையும் உடையும் நிற்பும் நிலையும் கண்டால் கிட்டநெருங்கப் பயமாயிருக்கும்" என்றார்கள்.

[அரசிக்குத்தம்மிடத்திலிருக்கும் இந்தியச் சேவகர்களிடத்தில் முன்னிலும் இப்போது விசேஷ அபிமானம் உண்டு. அவர் ஹிந்துஸ்தானிபாஷை கற்றுக் கொண்டபின் அப்பாஷையிலே அவர் தம் இந்தியச் சேவகர்களுக்கு உத்தரவு கொடுப்பது வழக்கமாய் இருந்து வருகிறது. இப்பொழுது மஹாராணியார் தம் குடும்பத்தோடு போஜனம் செய்கையில் அவருடைய இந்தியச் சேவகர்களைத் தவிர வேறு ஊழியர் யாரும் அண்டுவதில்லை. மஹாராணியார்தமக்கு ஹிந்துஸ்தானிபாஷை போதித்த முன்ஷி 'அப்தல்காரீம்' என்பவர் தன் குடும்பத்தோடும் அவருக்காக அமைக்கப்பட்ட இராஜவிடுதியில் ஜீவித்துவருகிறார். இப்பொழுது மஹாராணியாரிடத்துள்ள இந்தியச்சேவகர்கள் மூவர். அவர்கள் பேர்கள்: (1) மஸ்தாபாகான்; (2) சோட்டாகான்; (3) அஸிஸ்கான். இவர்களில் முதலிருவர் ஆக்ரா பட்டணத்திலிருந்து சென்றவர்கள். 3-வது பேர்வழி 'மொரடாபாத்' என்னுமூரிலிருந்து சென்றவன்.]

அரசி எங்குசென்றபோதிலும் அவ்வூர்ச்சனங்களுக்கு அவரால் மிக்கபிரயோசனம் உண்டாகும். சென்றதடவை 'ப்ளாரன்சை' விட்டு நீங்கினபோது, அவ்வூர் ஏழைஜனங்களுக்குக்

கொடுக்கும்படி ஐந்நூறுரூபாயும், ஆலயத்துக்கும் அநேகஜனங்களுக்கும் அவரவர்க்குத் தக்கபடி பலவெகுமதிகளும் அளித்துவந்தனர்.

ஆனால் அரசி ஒருதடவை நமது தேசத்துக்கும் வந்து பாராதது எவ்வளவு விசனிக்கத்தக்கது! நமது புராதனமான தேசத்துக்கு நம் சக்கிரவர்த்தினி எழுந்தருளி நம்மையும் நமது தேசவிசேஷங்களையும் பிரத்தியக்ஷமாகக்கண்டு, நாம் ராஜபக்தியிலும் விசுவாசத்திலும் அரசியின் பிரஜைகள் எவருக்கும் எள்ளளவேனும் பின்வாங்காத தன்மையையும் கண்ணாரப்பார்த்தறிந்து, நாம் அவர்க்கு அன்போடு செய்யும் சிறப்புக்களை அவர் ஆதரவோடும் ஏற்றுக்கொள்ளவும், நாமும் அரசியின் அனந்தமான நற்குணங்களையும் நம்மிடத்துத் தாய்போல் அவர் வைத்துள்ள பேரன்பையும் பெருங்கருணையையும் கண்டுகளிக்கவும் பெறாதது எவ்வளவு பெருங்குறைவு! ஆயினும்,ஓர் தாய்க்குத் தன்முன்னிருக்கும் பிள்ளைகளிடத்துள்ள அபிமானத்தைவிடத் தூரதேசத்தில் பொருள் வயிற்பிரிந்திருக்கும் பிள்ளைகளிடத்தில் விசுவாசம் அதிகமாயிருத்தல்போல அரசிக்கும் நம்மிடத்து மற்றவர்களிடத்துள்ளதைக் காட்டிலும் விசேஷ விசுவாசம் இருக்கும் என்பதில் யாதும் ஆக்ஷேபணையில்லை.



The Prince Consort.] [அரசியின் கணவர்

## XII.

சமாதானமும் சண்டையும்.

ஆல்பர்ட் பிரபு ராஜகாரியங்களில் அரசிக்குப் பலவாறு உதவிபுரிந்து வந்ததையன்றி, ஜனோபகாரமான அநேககாரியங்களையும் செய்துவந்தனர். அவற்றுள் முக்கியமானது, 1851-ம் வருஷத்தில், லண்டன் நகரில், பளிங்கு மண்டபம் என்று புதிதாகநிர்மிக்கப்பட்டதோர் கட்டிடத்தில், அவர் கூட்டிய பல்பொருட்காட்சி மஹாசபை யாகும். இது அடிமுதல் இறுதியாக அவரது முயற்சியினாலே தொடங்கி நிறைவேற்றப்பட்டது. இதன் உத்தேசம் என்னவென்றால்:—ஒவ்வொரு தேசத்திலும் விளைவு, கைத்தொழில், சிற்பம் முதலியவற்றில் சிறந்த அரிய பொருள்களைத் தருவித்து ஓர் இடத்தில் அணியணியாகச் சேர்த்துவைத்து, அவற்றைப் பார்க்கவரும் ஜனங்களுக்குக் காட்டி, அவர்களுக்குள்ளே மேற்கூறிய கைத்தொழில் முதலிய முயற்சிகளில் ஒருவரையொருவர் வெல்லவேண்டுமென்னும் ஆசையும் உற்சாகமும் உண்டுபண்ணி, அக்கைத்தொழில் முதலிய நன்முயற்சிகளை அபிவிர்த்திபண்ணவேண்டுமென்பதே. இவ்விதமான பொருட்காட்சிகள் இப்போது மிக்க உபயோகமானவையென்று கண்டு பல விடங்களிலும் சர்வசாதாரணமாகக்

கூட்டிவரினும், அப்போது, அது தேசத்துக்கு மிக்க கெடுதியைவிளைவிக்கும் என்று ஜனங்கள் தூபிப்பிராயப்பட்டிருந்ததனால் அரசியின்கணவர்க்கு இம்முயற்சியில் உண்டான ஏச்சுக்கும் இடையூறுகளுக்கும் அளவில்லை. ஆயினும் அவர் அவையொன்றையும் லக்ஷ்யம் பண்ணுமல், தமது சுபாவமான விடாமுயற்சியினுலும், அரசியின் ஒற்றுமையாலும், அருந்துணையினுலும், இப்பெருங்காரியத்தைச் செய்து முடித்தனர்.

"செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலாதார்."

அக்காட்சிமகாமண்டபத்தை அரசியார் தாமே அதற்கேற்ற வந்தனை வழிபாடுகளோடு பிரதிஷ்டைசெய்தார்கள். அன்று, அரசிக்குண்டான களிப்பும் செருக்கும் வேறென்றும் உண்டானதில்லை. அத்தினத்தில் நிகழ்ந்த மஹோத்சவம் தமது மகுடாபிஷேக தினத்திலும் ஆயிரம்பங்கு சிறந்ததென்றும், அன்று தாம்கண்ட அவ்வற்புதக் காட்சியானது தம் நினைவினின்று என்றும் நீங்காதென்றும், சொல்லியிருக்கின்றூர்.

அன்றுதினம் அக்கட்டடத்துள்ளே முப்பத்து நாலாயிரம் ஜனங்கள் கூடியிருந்தார்கள். வெளியில் வாயில்கள்தோறும் வழிநெடுகக்

கூடியிருந்த ஜனங்கள் சற்றேறக்குறையப் பத்துலக்ஷம் இருக்கும். அரசி தமது நாயகரோடும், மூத்த புத்திரரோடும், புத்திரியோடும், அப்பெருங் கூட்டத்தில் ஜனங்களை விலக்கியொதுக்கப் 'போலீசா'ருடைய உதவிசிறிதும் வேண்டி வாராமலே தமது ரதத்தைச்செலுத்திக்கொண்டு போய்வந்தார்கள். அரசியின் பட்டாபிஷேக காலத்திலும் இதுபோலவே ஜனங்கள் மிக்க ஒழுங்காக நடந்தபோதிலும், அன்று நூறுபிள்ளைகள் கூட்டத்தில் தப்பிப்போனார்களென்றும்,பின்பு அவர்கள் போலீசாரால் பெற்றோர்களிடம்தேடியொப்பிக்கப்பட்டார்களென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இப்பெருங் காட்சித் தினத்திலோ, அவ்வளவு பெருங்கூட்டத்திலும் ஓர் அவகேடாவது ஒருவர்க்கும் சம்பவிக்கவில்லை. அங்கு வந்திருந்த அயல்தேசத்தார்கள், ஜனங்களின் நன்னடக்கையையும் ராஜவிசுவாசத்தையும் கண்டு மிக்க ஆச்சரியமடைந்தார்கள்.

இப்பெருங்காட்சி அூரதேசத்துச் சனங்கள் பலரும் வந்து பார்க்கும்படிப் பலநாள்வரையில் கலைக்காமலே வைக்கப்பட்டிருந்தது. அதைப் பார்க்கவந்த ஜனங்களின் மொத்தம் அறுபதுலக்ஷமென்று கணக்கிடப்பட்டிருக்கிறது. அவர்களில் ஒருவள் 93 வயதானதொண்

டு கிழவி. இவள் அரசியையும் அப்பல்பொருட் பெருங்காட்சியையும் பார்க்கும்பொருட்டு, 'ரயில்' மார்க்கமாய் வந்தால் ஒருவேளை தனக்கு யாது இடையூறு சம்பவிக்குமோ என்று பயந்து மூன்னூறு மைல் தூரம் கால்நடையாகவே நடந்துவந்தாளாம்! அரசி தமது தினசரி விர்த்தாந்தப்பதிவில் இதைப்பற்றி "அவள் என்னைப் பார்க்கும்பொருட்டு வாசற்படியில் காத்துக்கொண்டிருந்தாள். அவ்வளவு வயசாயும் அவளுக்கு தேகக்கட்டுக் குலையவேயில்லை. நான் அவளைப் பார்த்ததும் என்னைக்கண்டு அவள் அழுதுவிடுவாள்போலிருந்தாள்." என்றுவரைந்திருக்கின்றார்.

இவ்வாறு இம்மஹோத்சவம் நடந்து மூன்று வருஷத்துக்கெல்லாம், அரசிக்கு மிக்க கவலையும் துன்பமும் உண்டாகும்படி, இங்கிலீஷ்காரருக்கும் ருஷிய தேசத்தாருக்கும் பிரமாதமான ஒரு பெரும்போர்விளைந்தது. ருஷிய சக்கிரவர்த்தியாகிய "ஜ்ஸார்" என்பவர் துருக்கி தேசாதிபதியாகிய 'சுல்டான்' என்பவரை துருக்கிதேசத்திலுள்ள கிறிஸ்தவர்களைத் தமது சம்ரக்ஷணையில் வைக்கவேண்டுமென்றுகேட்க, அதற்கவர் உடன்படாமையால், அவ்விருதிறத்தாருக்கும் அந்தயுத்தம் முதல் முதல் உண்டாயிற்று. அதில் இங்கிலீஷ்காரரும் ப்ரெஞ்சுக்கா



The Queen Reviewiny Troops.] [அரசி இராணுவங்களை அணிவகுத்துப் பார்வையிடல்.

ரரும் 'சுல்டான்' பக்ஷமாகப் போர்செய்யத் தீர் மானிக்க இக்காரணத்தால் இவர்க்கும் இப் போர் செய்யக்கடமையாயிற்று.

அரசியும் கணவரும் படைகளை ருஷியா வுக்கு அனுப்பும்பொருட்டுச்செய்த ஆயத்தங் களில் மிக்க சிரத்தையெடுத்துக்கொண்டு,இரா ணுவங்களைப்பரிசோதித்து, அவர்களை அன்பா கப் பிரயாணம் செய்தனுப்பித் தமது குடிக ளுக்கு வந்த விசாரமும் மனக்கவலையும் தமக் கேவந்ததுபோல உள்ளுணர்ந்து சமஸ்தமும் செய்தார்கள்.

இந்த யுத்தத்தில் அங்கிலேய வீரர்கள் அதிசௌரியமாகப் போர்செய்தார்களாயினும், சண்டையில் அநேகர் மடிந்து, அநேகர் குளிரி னுலும் பசியினுலும் இறந்துபோனார்கள். இரா ணியார் அவ்விசனகரமான சங்கதியைக்கேட்டு மிகவும்பரிதபித்து, அதனுல் தேஹாசௌக்கி யத்தைக்கூட அடைந்துவருந்தினர். மஹாசே னுபதியாகிய கார்டிகன்பிரபு அக்காலத்து அரசி யைக்கண்டு போகும்படி 'வின்ட்சர்'மாளிகைக் கு வந்திருந்தபோது, இளவரசரும் இளவரசிக ளும் அவரைப்பார்த்து, "நீர்அதி சீக்கிரமாகச் சென்று செபாஸ்டபோல் கோட்டை யைப் பிடிக்காமற் போனுல் எங்கள் அம் மாள் பாடு அநர்த்தம் தான்; அவருக்கு உயிர் நில்லாது" என்றார்கள்.

அந்தயுத்தம் அவ்வருஷம்முழுதும் கொடுமையாக நடந்தது. கப்பல்கள் வியாதிஸ்தரையும் காயம்பட்டவர்களேயும் ஏற்றிக்கொண்டு இடைவிடாமல் வந்துகொண்டே யிருந்தன. அரசியும் புதல்விகளும் அடிக்கடி 'ஆஸ்பத்திரி' களுக்குச்சென்று அவர்களேப் பார்த்து, அவர்களுக்குச் சந்தோஷமுண்டாகும்படி இனிய வார்த்தைகளேச்சொல்லி, சௌரியமாகப் போர் செய்தவர்களுக்கு முத்திரைப்பதக்கங்கள் பரிசளித்துவருவார்கள்.

கடைசியில், சேபாஸ்டபோல் கோட்டை பிடிபட்டது. அச்சந்தோஷ சமாசாரம்வந்ததும் பால்மோரலில் அரசிக்கு அப்போதே தெரிவிக்கப்பட்டது. ஆகா! அன்று அரண்மனையில் உண்டான சந்தோஷமிகுதியை என்னென்று சொல்லுவது! ஆல்பர்ட்பிரபுவும், அரண்மனையிலுள்ள வேலேக்காரர்கள் அனைவரும், மலேயின்உச்சியை அடைந்து,சுற்றுவட்டாரங்களில் உள்ள ஜனங்களெல்லாம் கும்பல்கும்பலாக வந்து சூழ, பெரிய சொக்கப்பனே யொன்று கொளுத்தி, அரசி அரண்மனேச்சாளரத்தில்நின்று பார்த்துக்களிக்கஅநேகவேடிக்கைகள்செய்தார்கள். அன்றுமுழுதும் பால்மொரலில் ஆடலும், பாடலும்,ஆர்ப்பும், அதிர்வெடியு மாகவே இருந்தது. அவ்வேடிக்கைகளேப்பார்த்தபோது,



Miss Nightingale.]　　　　[மிஸ் நைத்திங்கேல்.

அரசி தமது பிரார்த்தனை நிறைவேறியதென்றும், சமாதானமருளும்கடவுள் தம்மால் நேசிக்கப்பட்ட ராஜ்யத்துக்குச் சண்டையைநீக்கிச்சமாதானம் அருளினாரென்றும், நினைத்து மனக்களிப்புற்றார்கள்.

இந்த யுத்தத்தில்தான் நைத்திங்கேல் என்னும் பரோபகார சிந்தையுள்ள மாதுசிரோமணி தம்போலும் வியாதிஸ்தர்களையாதரிப்பதிற் றேர்ந்துபழகிய சிலபெண்களோடு முதல் முதல் சென்று யுத்தத்தில்காயம் பட்டவர்களுக்கு ஏற்படுத்திய வைத்தியசாலையில் தமது இனிய வசனங்களாலும், உரிய சிகிச்சைகளாலும்,அநேகருக்குஆறுதலும்சுகமும்உண்டுபண்ணி, அவர்கள் எல்லோராலும் கொண்டாடப்பெற்றார். இவர் யுத்தம்முடிந்தபிறகு, அரசியை பால்மோரலில் சென்று தரிசித்து அவரால் மிகவும் நன்குமதிக்கப்பெற்றார்.

---

## XIII.

### துக்கத்துக்குமேல்துக்கம்.

அரசிதமது இன்னுயிர்க் கணவரோடும் இருபத்தோரு வருஷகாலம் அளவில்லாத அருஞ்சுகத்தையடைந்து சௌபாக்யவதியாக வாழ்ந்துவந்தனர். ஆனால், துக்கரூபமாகிய இப்பிர

பஞ்சத்தில் ஒருவர் எத்தனைநாள்தான் சுகப்படக்கூடும் ? பிறத்தலும், வளர்தலும், மணத்தலும், இறத்தலும், இதுவன்றோ உலகின் இயற்கை ?

"பன்னிறத்துகில்களைப் படுத்துமூட்டிய
தென்னவிவ்வுலகினி லியல்வதாகிய
துன்னியவின்பமும் சூழும்துன்பமும்
உன்னியே ஒருவரால் ஒழிக்கலாவதோ."

பன்னிறமாகிய துணிகளை வைத்து மூட்டிய படாத்தைப் போல்வதாய், இன்பதுன்பங்கள் இடையிடையேவிரவப்பெற்றதாகிய இவ்வுலக வாழ்க்கையில், ஒன்றையொழித்து ஒன்றை மாத்திரம் அடைதல் யாவர்க்குவசம் ? அரசி இதுவரையில் துக்கமென்பது இன்னதென்று அறியாதவராய் சுகானுபவத்திலேயே மகிழ்ந்திருந்தனர். ஆனால், விதிவலியை ஒருவர்க்கு வெல்லல் ஆகுமோ ?

"சூழ்வினை நான்முகத் தொருவர்ச்சூழினும்
வாழ்வினையொருவரா லொழிக்கற்பாலதோ?"

அந்தோ ! ஒருவருஷத்துக்குள்ளே அரசியின் கிரகத்தில் நமன்தமர் இருகாற் புகுந்து, அரசியின் உயிர்க்குயிராகிய தாயையும், கணவரையும், கவர்ந்து சென்றனரே ! என்னகொடுமை !

"ஆற்றலும்காண்கிலான்; அறிவும்காண்கிலான்;
ஏற்றமும்காண்கிலான்; இளமைகாண்கிலான்;
சாற்றரும்செல்வமும் தகையும்காண்கிலான்;
கூற்றினும்கொடியவர் எவர்கொல்கூறினே!

"தாயெனப்பார்க்கலான்; தயவும்பார்க்கலான்;
சேயெனப்பார்க்கலான்; செயிரும்பார்க்கலான்,
ஆயநற்காதலா ரவரென்றோர்கலான்;
தீயினுங்கொடியனத் தெறுவெங்காலனே!"

அரசியின் தாயார் நெடுநாள் அசௌக்கிய மாயிருந்து, கடைசியில், 1861-ம் ௵, மார்ச் சு௴, காலம்சென்றனர். அரசிக்கு, அப்போது தமது வாழ்க்கையில் ஒரு கூறு மீட்கக்கூடாத படி நீங்கினதுபோலும் பெருந்துயர் உண்டா யிற்று. அவர்கள், அப்போது, இவ்விஷயமாய் எழுதியுள்ள விவரம் யாதென்னில்:— "எத்தனை பயங்கரம்! என்ன மாயம்! என்ன இனிய முடிவு! அவரது ஆன்மா நற்கதியை அடைந்தது. அவர் கஷ்டங்களெல்லாம் விடிந்தன. என் நிலைமையென்ன? வருந்தவிருந்த என்னை எவ்வளவோ உள்ளன்போடு நேசித்துச் சென்ற நாற்பத்தோரு வருஷகாலமாக, ஏதோ இடையில் கொஞ்சநாளன்றி வேறு, விட்டுப்பிரிந்திராத நற்றாயை இழந்த என் நிலைமையென்ன? நான் குழந்தையில் வளர்ந்ததும், இருந்ததும், எல்லாம் என்நினைவில் நிறைந்தது. அவற்றை

யெல்லாம் நினைக்கவே எவ்வளவோ காலமானது போலவும் தோற்றியது. நான் நெடுநாளாய் திகிற்பட்டு மனசால் நினைக்கவும் இடங்கொடாது தள்ளியது எனக்கு அனுபவத்தில் வந்துவிட்டது. அனுபவித்துத்தான் தீரவேண்டும். மேலுலகில் அவரைச் சந்திப்பதும், அவரண்டைக்குள்ள சுகமும் சமாதானமும்தான், எனக்கு ஆறுதல் இனிமேல்." என்பதுதான்.

இவ்வாறு, அன்னையை இழந்து வருந்தும் அரசிக்கு, அதேவருஷத்தில் அத்துயரம் ஆறுமுன்னமே அருமைக்கணவரையும் இழக்கவந்தது என்ன பரிதாபம்! ஆல்பர்ட் பிரபு மரணம் அடைதற்குக் கொஞ்சநாள் முன்னமே தேகம் திடமில்லாமல், அடிக்கடி அசௌக்கியமடைந்து வந்தார். ஏற்கனவே அரசிக்கு இராஜகாரியங்களில் இடைவிடாது முயன்று உதவிபுரிந்து சிரமப்பட்டு வந்தவருக்கு, கென்ட் பெருமாட்டி இறந்துபோக, அவரது குடித்தன யோகக்ஷேமங்களையும் விசாரிக்கவேண்டிவந்ததால், தேகம் முன்னிலும் தளர்ச்சியடைந்து முடிவில் " 'பேனா' வெடுத்துக்கையில் பிடிக்கவும் பலமில்லையே!" என்று சொல்லும்படியான ஸ்திதியை அடைந்தார். இவ்வாறிருக்குங்கால் தமது நெருங்கின உறவினரும் தம்மால் புத்திரபாவமாக நேசிக்கப்பட்டவரும்

ஆகிய 'போர்த்துகல்' அரசரும் அவர்தம்பியும் சுரநோய் கண்டு இருவரும் அதிபால்யத்தில் இறந்துபோகக்கேள்விப்பட்டு, ஆற்றமுடியாப் பெருந்துயரடைந்தனர். இக்காரணங்களால், அவருக்குத் தூக்கம் பிடிக்காமல் மிக்கவருத்த முண்டாகிப் பின்பு, சுரநோய்கண்டு வைத்தியர்கள் என்னசெய்தும் சுகப்படாமல், 1861-ம் ஸூ டிசம்பர்மீ 14உ தேசவியோகமானார்.

அரசிக்குக் கணவர் பிழைப்பாரென்கிற எண்ணம் அவர் பிராணன் போகிறவரையில் முற்றும் நீங்கவில்லை. வைத்தியர்கள் சுரத்தின் வேகத்தை ஒளியாமல் சொன்னபோது அவர் "நெஞ்சு பக்கென்று பிளந்துபோகும்போல் இருந்தது. ஆனால் எத்தனைபேருக்குச் சுரம் வருகிறதில்லை! சுரம் வந்தவர் பிழைப்பதில்லையா" என்று நினைத்து தைரியப்படுத்திக்கொண்டார்கள். அரசி தமது கணவர் உயிர் நீங்கும் வரையில் தம்மிடத்தில் காட்டிய மாறுத நேசத்தை நினைந்து நினைந்து அடிக்கடி வருந்துவார். பிராணன்போகுமுன் அரசியை 'என் இனிய சிறுமனைவி' என்று கூப்பிட்டருகழைத்துத், தாம் அவரைவிட்டுப் பிரிவதை உணர்ந்தவர் போலும் பெருமூச்சுவிட்டு, அவரை முத்தமிட்டனர். அவ்வளவுதான்; அதற்குமேல் கண் விழித்துப் பார்க்கவேயில்லை.

இவ்வளவு அன்பும் அந்தரங்கமுமுள்ள உயிர்க்குயிர்போன்ற கணவரை இழந்த துயரத்தை அரசி எவ்வாறு சகிக்கவல்லவர்? இப்பெருந்துயரம் அரசிக்குச்சம்பவித்த காலத்தில் அது ஏதோ தலைமேல் இடிவிழுந்ததுபோல் இருந்ததேயன்றி வேறில்லை. அவர்க்கு அக்காலத்தில் நடந்ததும் புகுந்ததும் ஒன்றும் ஞாபகமேயில்லாமற் போய்விட்டது. அவரை அப்போது ஆறுதல்சொல்லி ஆதரித்தவர் அவர் புத்திரியாராகிய ஆலிஸ் பெருமாட்டி. இவர் வழியாகத்தான் மந்திரிகள்கூட அரசிக்குத் துரைத்தன விஷயமான சமாசாரங்களைத் தெரிவித்து வந்தனர். அரசியின் நிலைமையைக்கண்டு அவருக்குப் பிராணுபாயம் உண்டாமோவென்று ஜனங்களுக்குப்பெரிய ஏக்கம் பிடித்தது. அவர் மிக்க பலவீனமடைந்து சிறிதுகாலம் இராத்தூக்கமில்லாமல் வருந்திக்கடைசியில் ஆலிஸ் பெருமாட்டியின் ஆதாவாலும் விண்ட்சரைவிட்டு ஆஸ்போர்னுக்குச் சென்றடைந்த காற்றுச்சுகத்தினுலும் சௌக்கியமடைந்தார்.

அரசியைப் பிரஜைகள் மிக்க உள்ளன்போடும் நேசித்தற்குப் பலகாரணங்களிலும் ஒன்று, அவர் தம் குடிகளுக்கு வந்தகஷ்டசுகங்கள் தமக்கேவந்ததுபோலப் பாவித்து அநுதாபப்படுதலேயாம்.



The Queen in her Mourning Dress.] [அரசி துக்கங்காத்தல்.

" அரசியாம்நிலைமைக்குள்ளவாறுபோல்
அரிவைமார்க்கு
மருவுநற் குணங்களெல்லாம் வாய்ந்திடப்
பெற்ற நல்லாள்
பெருமைகொண்டிடுவாள் தன்கீழ்க்குடி
பெறும் பெருமைகண்டு
பரிவுறும் எளியார்க்கெல்லாம் எளியவர்
பரிவுகண்டே."

ஆதலின் அரசிக்கு இப்பெருந்துயரம் நேர்ந்த காலத்தில் அவருடன் உலகம்முழுதும் அழுது வருந்தின. ஜனங்கள் எல்லோரும் ஐயோ! அரசி இத்துயரை எவ்வாறு சகிப்பார்களோ என்று மனம் பதைத்தார்கள். அரசியைப் பெண்கள் பிள்ளைகள் பிரஜைகள் முதலானோர் எல்லோரும் நேசிக்கும் நேசம்தான் இப்போது ஆறுதல் அளித்துக் காக்கவேண்டும் என்று வேண்டினார்கள்.

" காணாதபோதினு மனத்திலுணரப்படும்
கணவரது தனிவிலன்பு
கவிகநும்மீது ; நம்புதல்வரனைவோர்களது
காதலுமை வளைகவுற்றுக்;
கோணாதகுணமுடைய மகளிரரசருநேசநும்
கூர்துயர் தவிர்த்துவிடுக;
குற்றமறுபேரன்பு குறையாதநுமதரிய
குடிகள்நும்மிடைகொள்நேசம்
வாணாள்கள்முழுதநும்துயர்கெடுத்தாறுதல்
மகிழ்ந்திடநுமக்குதவுக;

மற்றுமிமொழிந்தபல நேசமுமணைந்துநும்
மனத்துயர் கெடுத்தருளுக;
சேணூர் விசும்புறையு நாயகர்மருங்குமைச்
சேரவுய்த்தளவில்மகிழ்வு
தேவனருள்பாலிக்கு மளவு மித்தரைமீது
செயிரில் எம்மரசி நுமையே."

என்று புலவர்திலகராகிய "டேன்னிசன்" என்பவர்கூறியது பிரஜைகள் ஒவ்வொருவரும் வேண்டிய வேண்டுகோளேயே விளக்கும் அன்றோ?

அரசிக்கு அநுதாப பத்திரங்கள் மேலோர் கீழோர்முதலான சமஸ்தமானஜனங்களிடத்திலிருந்தும் வந்தன. ஆயினும் அவர்தமக்கு நேர்ந்த பெருந்துயரத்தைக் கடவுளருளாலே தாங்கவல்லவரானார். இங்கிலாந்தில் உள்ள விதவைமார்களெல்லோரும் அரசிக்குற்ற பெருந்துயர்க்குபசாந்தியாக அழகிய வேதபுஸ்தகமொன்றை அவர்க்கனுப்பியபோது அவர் எழுதிய பிரதியுத்தரத்தில், தமக்கு எப்போதும் தம்கணவர் நீங்காமல் உடனிருப்பதாக உணரும் உணர்ச்சியும், தாம் அநுபவிக்கும் பெருந்துயர் முற்றும் கெட மேலுலகில் தம் கணவரொடும் எக்காலமும் நீங்காமல் கலந்திருக்கவெண்ணும் எண்ணமும் தவிர, வேறு ஒருவிதத்தினாலும் ஆறுதல் இல்லையென்றும்,

அவ்விதமான ஆறுதலையும் துணையையும் தம்மோடும் அநுதாபமடையும் பல விதவைமார்க்கும் பரமபிதாவாகிய கடவுள் அருள்புரிவாராக என்றும் எழுதியனுப்பினர். ஆதலின் அரசி கடவுள் அருளாலும் இவ்விதமான ஆறுதலாலும் நாளடைவில் ஒருவாறு தேறுதலடைந்தார்கள்.

ஆல்பர்ட்பிரபு இறந்துபோய் ஒருமாசத்துக்கெல்லாம், பயங்கரமான விபத்தொன்று உண்டாகியது. இங்கிலாந்தில் ஒருநிலக்கரிக்கனியில் சுரங்கம் இடிந்து விழுந்து, இருநூறு வேலையாட்கள் உயிரோடும் புதைபட்டிறந்தார்கள். அரசி அத்துயரமான சங்கதியைக் கேள்விப்பட்டதும், தமது துயர்க்கிடையே, இறந்துபோனவர்களின் மனைவிகளுக்கும் தாய்மாருக்கும் தமது அநுதாபத்தைத் தெரிவித்தனர்.

"தந்துயரந்தன்னை மறந்து பிறர்க்குற்ற
வெந்துயரம் கண்டு வெருவிமனம்—சிந்தைத்
தளர்வொழிக்குந்தன்மைஉடையாரும் சாற்றின்
உளர் கடல்சூழ் ஞாலத்தில் உற்று."

என்னும் சொல் அரசியைப்போல் உத்தமகுணமுடையாராலன்றோ உண்டாகியது.

---

## XIV.

### பிற்காலம்.

அரசி தம் நாயகனை இழந்தபின், ஓர் இடத்திற்கு விசேஷமாக வெளிப்புறப்பட்டுப்போதல் இன்றி, துக்க உடைதரித்து ஏகாந்தமாகவே வெகுநாள் இருந்துவந்தனர். தமது நித்யவிர்த்திகளை விட்டுவிடாவிடினும் 'லண்டன்' நகருக்கு அடிக்கடி வருதலும் இல்லை, ராஜகோஷ்டிகளுக்கு விசேஷமாகப் போவதுமில்லை.

அரசி தமக்கு நேர்ந்த பெருந்துயரத்துக்குப் பின், முதல்முதல், சபைகளுக்குமுன் வந்தது 1863-ம் ஹூ த்தில், அதற்கு ஏழுவருஷம் முன் தமது நாயகரால் பிரதிஷ்டிக்கப்பட்டதாகிய நேட்லி ஆஸ்பத்திரியைப் போய்ப்பார்த்தது தான். அங்கு வியாதிஸ்தர்களுக்குள், இந்தியாவில் சேவகம்செய்துவந்த ஐரிஷ் போர்ச்சேவகன் ஒருவன் மரணமடையும் தருணத்தில் இருந்தான். அரசி அவனை அடுத்து சில வார்த்தைகள் கனிவாகச்சொல்ல, அவன் அரசியை நோக்கி, "தேவரீரை என்னிரண்டுகண்களால் இறக்குமுன் கண்டுகளிக்க அருளியகடவுளுக்கு அநேக வந்தனம் புரிகின்றேன்" என்று சொன்னான். அவ்வாஸ்பத்திரி மிகவும் விசாலமானதால் அதன் ஒவ்வொரு விடுதிக்கும் சென்றுவருதல் மிகவும் பிரயாசமாகும். அரசி ஒருபக்கமெல்லாம்



The Queen Opening Parliament in 1866.] [அரசி 1866-ம் வருஷத்தில் 'பார்லிமெந்து' சபையாரம்பம்செய்தது.

சுற்றிப்பார்த்தபின், மற்றொரு பக்கத்துக்குப் போய்ப்பார்த்தல் அவருக்குச் சிரமமாகுமாதலின் இருக்கைக்குத் திரும்பிவிடுதலே நலம் என்று அருகிருந்தவர் கூற, அரசி "அப்படியன்று; நான் அவர்களைப் போய்ப்பாராவிடின், பாவம், அந்நோயாளிகள் வருத்தப்படுவார்கள்." என்று சொல்லி தமது சிரமத்தைப் பாராட்டாமல் எங்கும் போய்ப்பார்த்தனர்.

1866-ம் வருஷத்தில் பார்லிமெந்து சபை கூடியபொழுது அரசி தாமே நேரிற்சென்று சபையாரம்பம் செய்தனர். அப்பொழுது வழக்கமாயுள்ள ஆடம்பரங்கள் ஒன்றுமின்றி ராஜாங்க உடைகளைக்கூட தாம் தரித்துக்கொள்ளாமல் சிம்மாசனத்தில் வைத்து வைக்கச் சொன்னார். தம் கணவர் இறந்தபின் அரசி இவ்வாறே எவ்வித விசேஷ சந்தர்ப்பங்கள் நேரிடினும் அது சம்பந்தமான வெளியாடம்பரங்கள் வைபவங்கள் எதிலும் மனதைச் செலுத்தாது தாம் அரசியாய்ச் செய்யவேண்டிய கடமைகளைமட்டும் குறைவறச் செய்துவந்தனர். இன்றைக்கும் அவ்வாறே செய்து வருகின்றனர்.

அரசியின் பிற்கால சரித்திரத்தில் நாம் முக்கியமாகக் கவனிக்கத்தக்கவை நான்கு விஷயங்கள். அவற்றுள் முதலாவது 1858-ம் வருத்தில் இவ்விராச்சியத்தைக் கம்பெனியார் அதிகாரத்

தினின்றும் நீக்கி அரசிதமது சொந்த ஆளுகை யின்கீழ் ஏற்படுத்திக்கொண்டது. அக்காலத் தில் அரசி அவ்விஷயமாக ராஜவிளம்பரம் ஒன்று செய்தனர். இவ்விளம்பரம் மந்திரியால் எழு தப்பட்டு அரசியின் பார்வைக்கு அனுப்பப் பட்டபோது, அதைப் பார்வையுற்று, அதில், "இந்துக்களுடைய மதங்களை வேரோடுகளைந்து விடுதற்குஅரசிக்கு வல்லமையுண்டு" என்றுகூ றியிருந்த ஒருவாக்கியத்தைக்கண்டு, அங்ஙனம் கூறுதல் கூடாதென்றுணர்ந்து, அப்பத்திரம் ஜனங்களுக்குப் பட்டயசாசனமாக அளிக்கப் படுதலின் அதில் தயாளம், நன்மை, மதசுதந்தி ரம் ஆகிய விஷயங்கள் முதன்மையாகப் புலப் படவேண்டுமென்றும், இந்திய பிரஜைகளுக்கு அரசியின் மற்றப் பிரஜைகளோடு சமான நிலை யில் வைக்கப்படுதலினால் உண்டாகும் விசேஷ நன்மைகளையும், உரிமைகளையும், நாகரிகத் தைத் தொடர்ந்துவரும் ஐசுவரியாபிவிர்த்தி களையும், விகசிதமாக எடுத்துக்காட்டுதல் அவசி யமென்றும், ஆதலின் அப்பத்திரத்தை வேறு திருத்தி எழுதவேண்டுமென்றும், தமது மந்தி ரிக்கு ஆக்ஞாபித்தார். இவ்விளம்பரமானது நமக்கு அரசியால் கொடுக்கப்பட்ட மஹாசாசன மாக மதிக்கப்பட்டு வருதலின், அதன் சில பாகங்களை அடியில் எடுத்துக்கூறுகின்றோம்.

"எமது மற்றக்குடிகள் எல்லோருக்கும் அவரவர்க்குத் தக்கபடி எவ்வாறு எம் கடமைகளை நிறைவேற்றக் கட்டுப்பட்டிருக்கின்றோமோ, அவ்வாறே இந்தியாதேசத்தவர்களுக்கும் கட்டுப்பட்டிருக்கின்றோம். சர்வசக்தராகிய கடவுள் அருளால், அக்கடமைகளைத் தவறாமல் விசுவாசத்தோடும் மனச்சாக்ஷிக்கு ஒப்பவும் நிறைவேற்றுவோமாக.

"எமது மதக்கோட்பாடுகளை எமது பிரஜைகளுக்குப் பலவந்தமாகப்போதிப்பதற்கு எமக்கு எவ்வாற்றானும் அவகாசமும் இல்லை; இச்சையும் இல்லை. அவரவர்கள் மதக் கோட்பாடுகள் அல்லது அநுஷ்டானங்கள் காரணமாக ஒருவர்க்கும் ஒருவிதத்தினாலும் அநுகூலம் செய்யப் படாதென்பதும், ஒருவர்க்கும் இடையூறும் துன்பமும் உண்டு பண்ணப்படாதென்பதும், எவர்களும்தாரதம்மியமின்றி நிஷ்பக்ஷபாதமாகச் சட்டத்தினால் அளிக்கப்பெறும் சம்ரக்ஷணையை அடையச்செய்வதே எமது ராஜஇச்சையென்பதும், இதனால வெளியிட்டுக் கூறுகின்றோம். எமக்குக்கீழ் அதிகாரம் செலுத்திவரும் எல்லோரையும், எமது பிரஜைகளில் யாவராயினும் ஒருவரது மதக்கோட்பாடுகள் வந்தனை வழிபாடுகளில் எவ்வாற்றானும் பிரவேசியாமல் இருக்கக்கடவர் என்றும், அங்ஙனம்

செய்யாதொழியின் எமது கடுங்கோபத்துக்கு அவர்கள் ஆள்ளாவார்களென்றும், அவர்களுக்கு வற்புறுத்தி உத்தரவு செய்கின்றோம்.

"எமது பிரஜைகளில், அவரது மதமும் மரபும் ஏனையதாயினும், எமது துரைத்தன உத்தியோகங்களுக்கு அவரவர் வித்யாசாமர்த்திய நேர்நடக்கை முதலியகாரணங்களால் அருகமுடையராய் அவற்றை அடுத்த கடமைகளைச் செய்துமுடிக்கத் திறமுடையவரா யிருப்பவர்களை அவ்வுத்தியோகங்களுக்கு நிஷ்பக்ஷபாதமாக யாதோர்ஆடங்கமு மின்றிக் கூடுமானவரையில் நியமித்தல் வேண்டு மென்பதும் எமது இச்சையே.

"இந்தியாவின் குற்றமற்ற நன் முயற்சிகள் அபிவிர்த்திக்கத் தூண்டுவதும், ஜனுபிவிர்த்திக்குச் சாதகமான வேலைகளை நடப்பிப்பதும், எமது துரைத்தனத்தை அந்நாட்டில் குடியிருக்கும் எமது பிரஜைகள் சமஸ்தமானவர்களின் நன்மைக்காகவே செலுத்தவேண்டுமென்பதும், எமது மனப்பூர்வமான இச்சை. அவரது சுகாநுபவமே எமக்குப் பெலன்; அவர்களின் திருப்தியே எமக்கு அரண்;அவர்களின் செய்ந்நன்றியுணர்வே எமக்கு நிகரற்றபரிசு. அகிலாண்டநாயகராகிய கடவுள், எமக்கும் எம் கீழ்அதிகாரிகளுக்கும், ஜனங்களின் நன்மைக்

காக யாம் கோரிய இக்கோரிக்கைகளை நிறை வேற்றப்போதுமான வலிமையருள்வாராக."

அரசி பிரஜைகளிடத்தில் வைத்துள்ள விசுவாசத்துக்கு இதனிலும் வேறு அத்தாட்சி வேண்டுமோ?

இரண்டாவது விஷயம், 1877-ம் வரு அரசி இந்திய சக்கிரவர்த்தினி என்னும் பட்டம் தரித்துக்கொண்டது. இப்பட்டம் அப்போது மந்திரியாயிருந்த பீகன்ஸ்பீல்டு பிரபுவின் ஆலோசனையால் பார்லிமெண்டார்தம் அநுமதியோடு அரசி தரித்துக்கொண்டனர். இவ்விஷயம் அக்காலத்தில் இந்தியாவில் ராஜப்பிரதிநிதியாயிருந்த லிட்டன்பிரபுவின் உத்தரவால், டில்லி நகரத்தில் அநேக அரசர்களும் மேன்மக்களும் கூடியிருந்த மகாசபையில், பற்பல பாஷைகளிலும் வல்லுவர்களால் வெகு ஆடம்பரத்தோடும் விளம்பரம் செய்யப்பட்டது. லண்டன் நகரிலும் அதே காலத்தில் அந்நகர்த்தலைவர் மாளிகையாகிய "மான்ஷன் ஹவுஸ்' என்னுமிடத்தில் மிக்க ஆரவாரத்தோடும் கட்டியங்கூறுவோர்களால் இப்புதிய பட்டம் பிரசித்திசெய்யப்பட்டது.

மூன்றாவது விஷயம், சக்கிரவர்த்தி ராஜபட்டம்பெற்று 50 வருஷம் பூர்த்தியானதற்கறிகுறியாகக் கொண்டாடப்பட்ட ஜூபிலிமஹோத்




Proclaiming the Queen Empress of India at Delhi.



Heralds at the Mansion House Proclaiming the Queen Empress of India.

மஹாராணியார் சக்கிரவர்த்திப்பட்டம் சூடியதைக் கட்டியங்கூறுவோர்
லண்டன் நகரமாளிகையிலிருந்து பகிரங்கப்படுத்தல்.

சவம். இஃது 1887-ம் ஸூ டப்ரின்பிரபு ராஜப் பிரதிநிதியாயிருந்த காலத்தில், இந்தியாவிலும் ப்ரிடிஷ் மஹாராஜ்ஜியம் எங்கிலும் வெகு கோலாகலமாகக் கொண்டாடப்பட்டது. இதையுத் தேசித்து ஏராளமான பொருள் சந்தாவைத்துச் சேகரித்து அம்மகோத்ஸவத்துக்குச் செலவானதுபோக மிகுந்தபணத்தினுல் அநேக தர்மச் செலவுகளும் லோகோபகாரமான காரியங்களும் செய்யப்பட்டன.

நான்காவது விஷயம், சென்ற ஜூன்மீ 22உ அரசி ஆளுகைக்குவந்து 60 வருஷம் பூர்த்தியானதற்காகக் கொண்டாடப்பட்ட "டயமண்ட்ஜூபிலி" என்பது.

சக்கிரவர்த்தினியைப்போல இவ்வளவுநெடுங் காலம் பெருமையோடும் அரசுபுரியப் பெற்றவர் அவரது முன்னோர்களாகிய அங்கிலேய அரசர்களுக்குள்ளும் இல்லை. நமது தேசத்தரசர்களுக்குள்ளும் புராணவாயிலாயன்றிச் சரித்திரவாயிலாயறிந்தமட்டிலும் இல்லை. இன்னம் அரசி நெடுங்காலம் சுகமாக அரசாண்டு வரும்படி அகிலகாரணனாகிய ஆதிபகவன் அருள் புரிவாராக!

---

## XV.

### அரசியின் குடும்பம்.

அரசிக்கு நான்கு புத்திரரும், ஐந்து புத்திரிகளும், ஆக ஒன்பது மக்கள் பிறந்தார்களென்று இதற்குமுன்னமே சொல்லியிருக்கின்றோமல்லவா? அம்மக்களைப்பற்றி இங்கு சிறிது விவரிப்போம். முதல் மூன்று பிள்ளைகளுக்கும் ஆல்பர்ட்பிரபு ஜீவிதராகவிருக்கும்போதே கலியாணம் நிச்சயமாய்விட்டபடியால், அரசிக்கு அவ்விஷயத்தில் மிக்க கவலை இல்லாமலே போய்விட்டது. அரசியின் மூத்தகுமாரியாகிய இராஜபெருமாட்டியை 1858-ம்ஞு ஜனவரிமீ 25உ ப்ரஷ்ய ராஜகுமாரராகிய ப்ரேடரிக் என்பவருக்குக்கொடுத்து விவாகம்செய்யப்பட்டது. விவாகமஹோத்சவம் வெகுசிறப்பாக நடந்தது. அரசி அன்றைத்தினம் தமக்கே மீண்டும் விவாகம் ஆகப்போவதுபோல விசாரமடைந்ததாகவும், புத்திரியின் முகமலர்ச்சியையும் சாந்தத்தையும் கண்டு மனக்கவலை யொழிந்ததாகவும், சொல்லியிருக்கிறார்.

திருமணம் முடிந்த சிலநாளைக்கெல்லாம் இராஜபெருமாட்டி தமது நாயகரோடும் புக்கத்துக்குப்போவாராயினர். அப்போது, தாயாரும் பெண்ணும் பரஸ்பரம் பிரிவாற்றாமையினால் வருந்திய வருத்தம் சொல்லிமுடியாது.

அரசி இவ்விஷயமாக அடியிற்கண்டபடி சொல்லியிருக்கின்றனர்:—"நாங்கள் இருவரும் ஒருவரையொருவர் அன்போடு தழுவிக்கொண்டோம். கண்ணீர் தாரை தாரையாக வடிந்தது. பின்பு சிறிது சாந்தமடைந்தோம். கொடிய தினம்! எனது அருமைக் குழந்தை என்னை விட்டுப் பிரிந்துபோனதை நினைத்ததும் என்னெஞ்சம் புண்ணாகித் தேகம் வருந்தியது."

இராஜ பெருமாட்டி தாம் பிரயாணமாகிப் போவதைப் பார்க்கும்படி நெருங்கியிருந்த ஜனக் கூட்டத்தின் வழியாகச் செல்லுங்காலையில், அவர் மூகம் அழுகையினால் சுரந்துபோயிருந்தது. ஆயினும், அந்தக்கூட்டத்தில் ஒருவர் அவரைப் பார்த்து, "உமது நாயகர் உம்மை அன்பாக ஆதரிக்காமற்போனால் திரும்பி இங்கு வந்துவிடும்." என்று கெட்டியாய்ச் சொல்லவே, அவர் அதைக்கேட்டுச் சிரித்துக் கொண்டனர்.

அப்பெருமாட்டியின் கல்வி விஷயத்தில் இவர் ப்ரஷ்ய தேசாதிபதியின் மனைவியாக அடையும் உன்னதமான பதவிக்கேற்றபடி அறிவொழுக்கங்களை அடையுமாறு, இவர் பிதா மிக்க சிரமமெடுத்துக்கொண்டு போதித்து வந்தனர். இவர் குணத்திலும் செய்கையி

லும் தமது தாயாரையே தமக்கு மேற்கோளா கக் கொண்டிருந்தனர். ஒருநாள், இவர் ஒரு நாற்காலியை எடுத்து ஓரிடத்திலிருந்து இன் னோரிடத்தில் தூக்கிவைக்க, அருகிருந்த ஒரு வள் 'அது தமக்கு அருகமன்று' என்று சொல்ல உடனே இவர் அவளைப்பார்த்து, "என் தாயார் இங்கிலாந்து மாஹாராணி யென்று உமக்குத் தெரியுமல்லவா ?" என்ன, அவள் "ஆமாம் தெரியும்" என்றனள். பின்பு பெருமாட்டி, "நல்லது, ஆங்கிலேய மஹா ராணியாகிய அவர் பலமுறையும் இவ்வாறு நாற்காலியைத் தூக்கி எடுப்பதுண்டு. உமக்கு ஒருவேளை நம்ப முடியாமல் இருந்தாலும் இருக்கலாம், அவர் ஒரு நாற்காலியன்று இரண்டு நாற்காலியை இரண்டு கையிலும் எடுத்துப் போட்டதை நானே ப்ரத்யக்ஷமாகப் பார்த்திருக்கிறேன். அப்படி எடுத்திட்டது தமது பிள்ளைகளுக்காகவேயன்றி மற்றொரு வர்க்கல்ல. என் தாயாரின் ராஜ அந்தஸ்துக்கு இளப்பம் ஆகாத செய்கை அவரது புத்திரி யின் அந்தஸ்துக்கும் இளப்பம் ஆகாது என்று எண்ணுகிறேன்." என்றனர்.

இவர் நெடுநாள் தம் கணவரோடு சுகமாக வாழ்ந்திருந்து, அநேக பிள்ளைகளையும் பெற்று மகிழ்ந்திருந்தனர். இவரது கணவர் ஜர்மானிய சக்கிரவர்த்தியாகக் கொஞ்சநாள் அரசாண்டி ருந்து பின்பு காலம் சென்றனர். இவர் இப்

பொழுதும் ஆயுளுடனிருக்கிறார். இவரது ஜ்யேஷ்ட புத்திரர்தாம் இப்போது ஜர்மானிய சக்கிரவர்த்தியாகவிருக்கும் இரண்டாம் வில்லியம் என்பவர்.



Prince of Wales.] [ வேல்ஸ் இளவரசர்.

மூத்த புத்திரராகிய வேல்ஸ் இளவரசர் 1863-ம் ௵ டென்மார்க் ராஜகுமாரியாகிய

அலெக்சான்ட்ரா என்பவரை மணம்புரிந்தனர். அரசி, வேல்ஸ் பெருமாட்டியை எப்போதும் தமது புத்திரிபோலவே பாவித்துவருவார். அவரைப்பற்றிச் சொல்லும்போதெல்லாம் 'அருமையான,' 'இனிய,' 'சாந்தமான' என்னும் அடைமொழி கொடுத்தல்லாமல் சொல்வதேயில்லை.

வேல்ஸ் இளவரசருக்கு 1871-ம் ௵ தமது பிதாவுக்கு வந்ததுபோலவே சுரம் கண்டு பிழைக்கமாட்டார் என்றெண்ணும்படியிருந்து, கடைசியில் கடவுள் அருளால் உயிர் பிழைத்தார். இவர் 1876-ம் ௵ நமது தேசத்துக்கு விஜயம்பண்ணி, அப்போது நமது தேசத்தாரால் விசேஷ ராஜவிசுவாசத்தோடு பெருஞ் சிறப்புச் செய்யப்பெற்ருர். இவர் சாந்திரிங்ஹாம் என்னும் பூஸ்திதியில் சொந்தமாக ஆடுமாடுகளைவளர்த்து அதை விருத்திசெய்வதில் அதிக சிரத்தையுள்ளவராயிருக்கின்ருர். அன்றியும், ஜனோபகாரமாகப் பொருட்காட்சி முதலியவற்றை ஏற்படுத்துவதில் மிக்க முயற்சியுள்ளவர். லண்டன் நகரில் இப்போது நிலையாக ஸ்தாபிக்கப்பட்டிருக்கும், 'இம்பீரியல் இன்ஸ்டிட்யூட்' என்னும் பெரும்பொருட்காட்சிச்சாலை இவரது முயற்சியாலே ஸ்தாபிக்கப்பட்டது. இவருக்குப் பிள்ளைகள் இருவர்; பெண்கள் மூவர். மூத்த புத்திரராகிய ஆல்பர்ட்விக்டர் என்பவர் 1890-ம் ௵ இந்தியாவுக்கு வந்து முக்கியமான இடங்களெல்லாம் பார்த்துவிட்டுப்போனர். இவர் 1892-ம்௵ தமது 29-வது

வயதில், வியாதியடைந்து மரணமடைந்தார். இவருக்கும் 'ப்ரின்ஸெஸ் மே' என்னும் ராஜகுமாரத்திக்கும் கலியாணம் நிச்சயமாகி விவாகத்துக்கு முகூர்த்தம் வைத்தபின் இவர் திடீரென்று வியாதியால் இறக்க நேரிட்டதால் இவர் மரணம் பிரிடிஷ் மஹாராஜ்யத்திலுள்ளோரெல்லாரையும் பெருந்துயரில் ஆழ்த்தியது.

இவர் இறந்ததனால் மஹாராணியவர்களுக்கும், ராஜகுடும்பத்தாருக்கும் உண்டான துயரைச் சொல்லிமுடியாது. மஹாராணியார் தமது தினசரிக்குறிப்பில் இவர் இறந்த அன்று எழுதியதை அவர் கையெழுத்தில்தானே கீழே வரைந்து காட்டுகிறோம்.

*To day I and my family*
*were almost in greater sorrow*
*and grief than they had*
*ever been before as my*
*young Grandson Prince*
*Albert Victor of Wales died*
*this morning at nine*
*o'clock.*

(To-day I and my family were almost in greater sorrow and grief than they had ever been before as my young Grandson Prince Albert Victor of Wales died this morning at nine o' clock.)

[இளவயதுள்ள என் பேரப்பிள்ளை ப்ரின்ஸ் ஆல்பர்ட் விக்டர் ஆப் வேல்ஸ் இன்று காலை 9-மணிக்கு இறந்துபோனபடியால் இன்றைக்கு நானும் என் குடும்பத்தாரும் இதற்கு முன் எப்பொழுதுமில்லாதபடி அதிக துக்கத்தில் மூழ்கிப் பெருந்துயருற்றோம்.]

ஜார்ஜ் ப்ரேடரீக் என்னும் இயற்கை நாமம் கொண்ட 2-வது குமாரராகிய யார்க் பிரபு 'ப்ரின்ஸெஸ் மே' அவர்களை விவாகம் செய்து கொண்டார். இவர்களுக்கு இப்போது இரண்டு பிள்ளைகளும் ஒருபெண்ணும் இருக்கின்றார்கள்.

ஆலிஸ்பெருயாட்டி அரசியின் இரண்டாம்புத்திரி. இவர்மிக்க நற்குணமுடையவர். தமது பிதா அசௌக்கியமாயிருந்தகாலத்தில், அவர் பக்கத்தில் இருந்து அவரை அன்போடு ஆதரித்து வந்து, பின்பு, அவர் இறந்துபோனபின் தம் தாயாருக்கு ஆறுதல்சொல்லித் தளராமல் பாதுகாத்து வந்தனர். இவர் தமது 18-ம் வயதில், ஹெஸீ நாட்டுப்பிரபுவை மணம்புரிந்தனர். இராணியவர்களைப் போலவே இவர்க்கு ஏழைகளைப்போய்ப் பார்ப்பதிலும் அவர்களுக்கு உதவிசெய்வதிலும் மிகவும் இஷ்டம். ப்ரெஞ்சுக்காரருக்கும் ஜர்மானியருக்கும் நடந்தபெரிய யுத்தத்தில் காயம்பட்டு வருந்திய போர்வீரர்களுக்கு வைத்தியம்செய்த சில ஸ்திரீகளோடு தாமும்

தம்மை இன்னாரென்று தெரிவிக்காமலே சென்று, வியாதிஸ்தர்களுக்குவேண்டிய உதவிகளைச் செய்து ஆதரித்துவந்தார். 1878-ம் ௵ தமது பிராணநாயகரும், ஐந்துபிள்ளைகளும், கொடிய வியாதியடைந்து வருந்த அவர்கள் பக்கத்தில் இருந்து அவர்களை ஆதரித்து வந்து ஒருகுழந்தை தவிர மற்றவர்களெல்லாம் பிழைக்கப் பெற்று, கடைசியில் தாமே அவ்வியாதிக்கிரையாகிப் பிராணனை இழந்தார். அரசியின் மக்களில் இவர்தான் முதல் முதல் இறந்து போனவர்.

அரசியின் இரண்டாம்புத்திரராகிய ஆல்ப்ரேட் என்னும் பெயர்கொண்ட எடின்பரோ பிரபு மாலுமி வேலையில் பயின்று மத்தியதரைக்கடலில் உள்ள கப்பற்படைகளுக்குத் தளகர்த்தராயினார். இவர் 1869-ம்௵ இந்தியாவுக்குவந்து போனார். இவர் ருஷியசக்கிரவர்த்தியின் புத்திரியாகிய மேரி என்பவரை மணம்புரிந்தார்.

ஹெலினா* பெருமாட்டியும் லூயிஸ் † பெருமாட்டியும் தத்தம் கணவருடனும் பிள்ளைகளோடும் சௌக்கியமாயிருந்து வருகின்றார்கள்.

மூன்றாம் புத்திரராகிய கன்னாட்பிரபு சிலகாலம் பம்பாய்ச் சேனைக்கு முக்கிய தளகர்த்தராயிருந்தார். இவருக்கு ஒருகுமாரனும் இரண்டு குமாரிகளும் இருக்கின்றார்கள்.

---

* Princess Christian.

† Marchioness of Lorne. இவருக்குப்பிள்ளையில்லை.

நான்காம் புத்திரராகிய **ஆல்பனி பிரபு** தமக்கு விவாகமாகி இரண்டு வருஷத்திற்கெல்லாம் 1884 - ம் ஹு தேகவியோகமாயினர். இவர் தமது பிதாவைப்போலவே சுபாவத்தில் பலஹீனராகவிருந்ததன்றி மற்றப் பிள்ளைகளைப்பார்க்கிலும் குணம் குறிகளில் விசேஷமாக அவரை ஒத்திருந்ததனுல், அரசி இவரிடத்தில் மிகவும் வாஞ்சைவைத்து இவரை அன்போடும் பாதுகாத்து வந்தனர். ஆதலின் அரசிக்கு இவரை இழந்ததனுல் உண்டான துக்கம் சகிக்கக்கூடாததாயிருந்தது. சோகத்தினுல் எங்கே தாமும் உயிரிழந்து விடுவாரோ என்றஞ்சும்படி அவ்வளவு பெருந்துயரை யடைந்தனர்.

கடைசிப் புத்திரியாகிய **பியட்ரீஸ்** பெருமாட்டி தமது தாயாருக்கு உதவியாயும் ஆறுதலாயும் இருக்கும்பொருட்டு நெடுநாள் விவாகம்செய்து கொள்ளாமல் இருந்து, பின்பு தமது இருபத்தெட்டாவது வயதில் 'பாட்டன்பர்க்' இளவரசராகிய ஹென்றி என்பவரை மணம்புரிந்து, அரசியைவிட்டுப் பிரியாமலே இருந்தார். இவர் கணவர் சென்ற 1896ஹு ஜனவரிமீ 29-ம் தேதி ஆப்பிரிக்கா கண்டத்தின் மேற்குக்கடலோரத்தில் இறந்துபோனர்.

அரசிக்கு நேரிட்ட பலதுயரங்களையும் எவ்வாறு பொறுத்தனர் ; அவரது மனோபாவம்

யாது என்பதை அறியும்பொருட்டு அவர் தமது செல்வமருமகனை இழந்தகாலத்தில் தமது பிரஜைகளுக்கெழுதிய நிருபத்தை அடியில் வரைகின்றோம்.

"ஆஸ்போரன், 1896-ம் ஹூ பிப்ரவரிமீ".

"எனக்கும் எனது பிரியமான புத்திரியாகிய பியட்ரிஸ் இளவரசிக்கும் நேர்ந்த இப்புதிய துக்ககரமான நஷ்டத்தில், எம்மோடும் அனுதாபப்படுதற்காக, ராஜபக்தியுள்ள என் பிரஜைகளுக்கு இன்னொருதரமும் நன்றி வந்தனம் சமர்ப்பிக்கலானேன். ஆ! இப்புதிய துயரம் தாங்கமுடியாதது. எனக்கு இருமடங்கானது. ஏனெனில், நான், என்வீடெல்லாம் விளங்கச் சூரியகிரணம்போலத்தோன்றிய அருமையாக நேசிக்கப்பட்ட உதவியுள்ள மருமகனை இழந்தேன். என் அருமை மகள் பேரன்பினால் கட்டுண்ணப்பட்ட அதிப்ரியரான சிறந்த நாயகனை இழக்கநின்றாள். என்னைவிட்டொருநாளும் பிரியாமல் என் துக்கத்தை ஆற்றி எனக்குதவி புரிந்து வந்த புத்திரியின் அடியோடழிந்த சுகத்தைப்பார்த்தல் சகிக்கமுடியாததாயினும், என் பிரஜைகளில் எத்திறத்தாராலும் காட்டப்பட்ட சர்வாநுதாபம் என்னையும் என்குழந்தையையும் உள்ளுருகச்செய்து எமக்குத்துணையாகி ஆறுதலைச்செய்திருக்கின்றது. இதற்காகவும், தாம்

ஸ்வீகரித்த தேசத்துக்குபகாரமாகத் தமது பிராணனைக்கொடுத்த அரிய பராக்ரமசாலியான இளவாசரின் யோக்யதையைத் தக்கபடி அறிந்து கௌரவித்ததற்காகவும், ஜனங்களுக்கு நன்றிவந்தனமளிக்க மனப்பூர்வமாக விரும்புகின்றேன். என் அருமைக்குழந்தை தைரியத்திலும், ஒழிவிலும், கடவுளின் சித்தத்துக்குக் கீழ்ப்படிந்திருத்தலிலும், எல்லோருக்கும் ஒரு மேற்கோளாக இருக்கின்றனள்."



The Great Seal of England.] [அங்கிலேயநாட்டு ராஜமுத்திரை.

## XVI.

### சுகாபிவிர்த்திகள்.

அரசியின் அறுபதுவருஷ அரசாட்சியில், அவர் கோலின்கீழ் குடிகள் அடைந்துள்ள அபிவிர்த்திகளையும் சீர்திருத்தங்களையும் அளவிட்டு விவரித்துச் சொல்லுதல் இச்சிறு புத்தகத்துள் அமையாதாயினும், அவற்றைச் சொல்லாமல் விடுதல் அழகன்றாதலின் ஒருவாறு இங்கு சுருக்கிச் சொல்வோம். முதல் முதல் பொதுவான சில சீர்திருத்தங்களைச்சொல்லிப், பின்பு நாம் விசேஷமாக அடைந்துள்ள நன்மைகளை விவரிப்போம்.

அரசி பட்டத்துக்கு வந்தபோது, இங்கிலாந்தில் இருப்புப்பாதை சிற்சில இடங்களில் சிறிது தூரம் இருந்ததேயன்றி விசேஷமாயில்லை. மின்சாரத்தந்தி ஒன்றேனும் இல்லவேயில்லை. இந்தியாவுக்கு நன்னம்பிக்கை முனையைச்சுற்றியன்று வேறு வழி யேற்படவில்லை. அடிமை வியாபாரம் இன்னமும் முற்றும் அடங்கிற்றில்லை. நீராவிக்கப்பல்கள் இன்னமும் ஏற்படவில்லை. திருட்டு முதலிய இலகுவான குற்றங்களைச் செய்தவர்களையும் கொலை செய்து தண்டிக்கும் கொடிய வழக்கம் இன்னம் நீங்கவில்லை. அக்காலத்தில் ராஜ்யவரும்படியும், ஜனத்தொகையும், இன்றுள்ளதில் பாதிகூடவில்லை

ஜனங்களின் செல்வமும் அப்படியே. வர்த்தகம், கைத்தொழில், படிப்பு, நாகரிகம், முதலிய ஒவ்வொன்றும் அன்றைக்கின்று பன்மடங்கு அபிவிர்த்தி அடைந்திருக்கின்றது. ப்ரிட்டிஷ் மகாராஜ்யம் அன்றைக்கின்று விஸ்தீரணத்தில் கோடி சதுரமயில் பெருகியிருக்கின்றது. அக்காலத்தில் ஜனத்தொகை லக்ஷக்கணக்காய் மட்டும் இருந்தது. இன்றைத்தேதியிலோ அரசியின் குடைநிழலில் குளிர் தூங்க வாழும் குடிகளின் தொகை முப்பத்திரண்டு கோடி !

அரசியின் ஆளுகையில் நூதனமாகத்தோன்றிய அநேக காட்சிகளில் முக்கியமானது இருப்புப்பாதையே. இன்றைத்தேதியில் இங்கிலாந்தில இவ்விருப்புப்பாதை இருபத்தோராயிரம் மைல் நீளம் ப்ரவியிருக்கின்றது. இந்த இருப்புக் குதிரைகளின் உத்பத்தியையும், கதியையும், போக்குவரவையும், நினைத்துப்பார்க்க எத்தனை அளவுக்கடங்காத ஆச்சரியம் உண்டாகும்! இந்நீராவிக் குதிரைகளால் ஜனங்களுக்குண்டாயிருக்கும் நன்மைகள் சொல்லிமுடியுமோ ? தூரமென்பது போய்விட்டது. ஆயிரம் மைலுக்கு அப்புறத்திலிருக்கும் பந்துமித்திரர்களைப் பார்க்கவெண்ணினாலும் அன்றைக்கே பார்க்கலாமே !

இதற்கு அடுத்தபடி அரசியின் ஆளுகையில் கவனிக்கத்தக்கது தபாலாபீசும் தந்தியாபீசும். முதல் முதல், 'பென்னி'த்தபால் ஏற்பட்டது லண்டன் நகர்க்குள்மாத்திரம் 1839-ம் வருத்தில். இந்த மறுவருஷத்தில் ராஜ்யமெங்கும் பரவியது. அன்றைக்கின்று கடிதங்கள் சுமார் முப்பதுமடங்கு அதிகரித்திருக்கின்றன. மின்சாரத்தந்தியும் இவ்வாறே அரசியின் காலத்தே தோன்றி விர்த்தியடைந்திருக்கின்றது.

இவையன்றி இன்னொரு அற்புதம் பாருங்கள்! தந்திக்கம்பிகள் தரையில் ஓட்டப்பட்டது போதாதென்று கடலிலும் ஜலத்துக்கடியிலும் ஓட்டப்பட்டு, ஐரோப்பா அமெரிக்காவென்னும் இருகண்டங்களும் அவற்றால் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருக்கின்றன! இக்கடற்றந்தி, முதலில் 1858-ம் வருத்தில் அமைக்கப்பட்டு, அது பின்பு அறுந்துபோக, மறுபடியும் 1866-ம் வருத்தில் புதிதொன்று அமைக்கப்பட்டதன்றி பழையதும் கண்டெடுத்துச் செப்பனிடப்பட்டது. இவ்வாறு இடமும் காலமும் இல்லாது நீங்கினவென்றெண்ணும்படி இழைத்துள்ள இருப்புப்பாதையும் தந்தித்தபாலும் ஆகிய இவ்விரண்டற்புதங்களையும்

கண்ணூரக்கண்டபின் இனி உலகில் எதனை அசாத்தியமென்றெண்ணுவது ?

அரசியின் ஆளுகையில் தோன்றிய மின்சாரம் என்னும் தேவதையின் செய்கை இவ்வொன்று தானே? பீரங்கியினின்றுபாயும் குண்டின் கதியை அளக்கவல்லதும், கண்ணிமைப்பொழுதையும் பிரித்தளவிடவல்லதும், ஈயின் அடியோசையைக் குதிரைத்தளங்களின் குளம்படிபோலத்தொனிக்கச்செய்வதும் உடலுக்குள் உள்ள எலும்பையும், அங்குபாய்ந்து தங்கிய துப்பாக்கிரவைகளையும், ஊசிகளையும், சதையின்வழியே காட்டவல்லதுமான அற்புதமான எத்தனை யந்திரங்கள் இத்தேவதையின் செய்கையினுலுண்டாயிருக்கின்றன !

இனி, வித்யாபிவிர்த்தி விஷயமாக ஆலோசிக்கிலோ, அரசியின் பட்டாபிஷேகத்துக்கு முன் வித்தையென்பது அருமருந்து போல் அங்கங்கே சிறிது இருந்தது. எளியஜனங்களில் அநேகர் படிப்பில்லாமல் அகங்குருடாய் அஞ்ஞான அந்தகாரத்தில் மூழ்கியிருந்தார்கள். இப்போது இங்கிலாந்தில் 30,000 பாடசாலைகள் இருக்கின்றன. அவற்றில் 60 லக்ஷம் பிள்ளைகளுக்கதிகம் படித்துவருகிறார்கள். சிறுபடிப்புப்பாடசாலைகளில் அநேகமாகப் பிள்ளைகளுக்குச் சம்பளமேயில்லை. இவையன்றி, வர்த்தமா

னப் பத்திரிகைகள் ஆயிரக்கணக்காக விர்த்தியாகி ஜனங்களுக்கு அவை எத்தனை அறிவிற்கும் சீர்திருத்தத்திற்கும் ஏதுவா யிருக்கின்றன.

ஜனங்களில், உயர்ந்தோர், இழிந்தோர், வலியோர், எளியோர், முதலான சமஸ்தமானவர்களும் அடைந்துள்ள நாகரிகமும் நலமும் இராணியின் காலத்து எவ்வளவு அதிகரித்திருக்கின்றன! ஏழைகளின் நிலைமை முன்னைக்கிப்போது எவ்வளவு மாறிப்போயிருக்கின்றது! அவர்களுக்குள் முன்னிருந்த கஷ்டமும், அவிவேகமும், கொரேமும், துர்நடத்தையும், எவ்வளவு குறைந்துபோயிருக்கின்றன! ஏழைத்தனம் கூட வெகுவாக ஒளித்துப் போய்விட்டதே!

இனியும் இங்கிலாந்தில் காவியம், கற்பனை, சிற்பம், விற்பனம், வைத்யம் முதலான எண்ணிறந்த விஷயங்களில் ஜனங்கள் அரசியின் ஆளுகையில் அடைந்துள்ள அற்புதமான அபிவிர்த்திகளை விவரித்துச் சொல்லப்புகின் மிக விரியுமாதலின், அவற்றை விடுத்து நமது இந்தியாதேசத்தில் நாம் அரசியின்காலத்தில் அடைந்துள்ள அபிவிர்த்திகளையும் சீர்திருத்தங்களையும் சிறிது விவரிப்போமாக.

நாம் சென்ற அறுபது வருஷகாலத்தில் அடைந்துள்ள அபிவிர்த்திக்கு அளவில்லை. வியவசாயம், வர்த்தகம், கைத்தொழில், முதலிய நன்முயற்சிகளிலும், கல்வி, செல்வம், நாகரிகம் முதலான பல விஷயங்களிலும் முற்காலத்துக்கிப்போது எவ்வளவோ அபிவிர்த்தியை அடைந்திருக்கின்றோம். முற்காலத்தில், நமது தேசத்தில், யுத்தம், கலகம், கொள்ளை, கொலை முதலான பலவிதமான காரணங்களால் ஜனங்களுக்கு உயிரும் பொருளும் எள்ளளவேனும் சாசுவதமில்லாமல் இருந்ததனால், வியவசாயம் முதலிய நன்முயற்சிகளெல்லாம் குன்றிக்கெட்டுப் போயிருந்தன. அநேக இடங்களில் காடுகள் மயமாய் நெருங்கியிருந்தன. இக்காடுகளில் சிங்கம், புலி, யானை, கரடி முதலிய கொடிய விலங்குகள் நிறைந்திருந்ததுமன்றி, அவைகள் அடிக்கடி நாடுகளில் பிரவேசித்து ஆயிரக்கணக்காக ஆடுமாடுகளை அடித்துக்கொல்வதுமன்றி, மனிதர்களையும் நூற்றுக்கணக்காகக் கொன்று தின்றுவிடும். யானைகளும், காட்டுப் பன்றிகளும், விளைநிலங்களில் புகுந்து, விளைச்சலைத்தின்று தொகைத்து, நாசம்செய்துவிடும். அதனால், ஜனங்கள் மிக்க கஷ்டங்களை அனுபவித்து வந்தார்கள். இப்போதோ, அங்கங்கே சிற்சில இடங்கள்தவிர, அநேகமாகக் காடு க

ரம்புகள் எல்லாம் திருத்தி நாடாக்கப்பட்டு, எங்கும் விளைவயல்களும், தோப்புக்களும் ஆகி செந்நெலும் கன்னலும், வாழையும், தெங்கும், கமுகும், மாவும், பலாவுமாகப் பார்ப்பவர் கண்ணுக்கு இனிமையாகத் தழைத்திருக்கின்றன. துரைத்தனத்தார், அங்கங்கே, ஆறுகள் தோறும், எவ்வளவு கல்லணைகள் கட்டி, உவர்க்கடலில் வீணாக ஓடிக்கொண்டிருந்த ஜலத்தையெல்லாம் தேக்கி, எத்தனை கால்வாய்கள் வழியாகச்செலுத்திப் பாய்ச்சலுக்குச் சாதகமாகும்படிச் செய்திருக்கின்றார்கள்! எவ்வளவு ஏரிகளும், குளங்களும், கிணறுகளும், பயிர்செய்யுங் குடிகளுக்குபயோகமாக வெட்டிச் செப்பனிட்டிருக்கிறார்கள்! "விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்துண்ணின்றுடற்றும்பசி." என்றபடி, மழைக்காலங்களில் போதுமான அளவு பெய்யத்தவறுதலாலன்றித், துரைத்தனத்தாருடைய கவனக்குறைவினால் தேசத்துக்கு க்ஷாமம் உண்டாகின்றதென்பது அறிவீனமேயன்றோ?

முற்காலத்தில், வர்த்தகஸ்தானங்களும் துறைமுகங்களும் நம்தேசத்தில் விசேஷமாயில்லை. போக்குவரவு செய்வதற்கு நல்ல பாட்டைகள் கூடக்கிடையா. அநேகமாகப் பாட்டைகளெல்லாம் ஒற்றையடிப் பாதைகளாயிருந்தனவே

யன்றி வண்டிகள் போவதற்கு அநுகூலமான வையல்ல. ஆதலின், அக்காலத்தில் வண்டியுமில்லை, காடியும் இல்லை. ரெயில்வண்டியேது, தபாலேது, தந்தியேது ? ஆறுகளுக்கும் அநேகமாகப் பாலங்கள் இல்லை. செல்வமுடையவர் பல்லக்கிலோ குதிரையின்மீதோ, மணியொன்றுக்கு அதிகவேகமானல் மூன்றுமைல் நான்குமைல் வீதம் பிரயாணம்செய்வார்கள். ஏழைகளுக்குக் கால் சவாரிதான். வழியில் சத்திரமுண்டா, சாவடியுண்டா ? தாகத்துக்குத்தண்ணீரும் கிடையாது. எங்கேயாவது ஆற்றங்கரை, குளத்தங்கரை, கண்டவிடத்தில் சோற்று மூட்டையை அவிழ்த்துத்தின்றுவிட்டு, மரத்தடியில்படுத்து நித்திரைசெய்வார்கள். பணம், காசு, நகை நட்டுக் கொண்டுபோகவேண்டியிருந்தால், பிச்சைக்காரன்போல் வேஷம் தரித்துச் சென்றுலொழியத் தக்குவதரிது. வர்த்தக சாமான்களோ, கட்டைவண்டிகள், அல்லது ஒட்டகங்கள் எருத்துமாட்டுகள்மேல் போட்டு, ஐந்நூறு மயிலோ ஆயிரம் மயிலோ எவ்வளவு தூரமானலும் அனுப்பப்படும். ஆறலைக்கும் கள்வர் வழியில் அடித்துக் கொண்டுபோனல், போனதுதான். ஐயோ ! எவ்வளவு கஷ்டம் ! அக்காலத்தில் காசிக்குப்போனவன் காலம்சென்றவன் தான். மீண்டும் வருவானென்னும் நம்பிக்கை

இல்லவேயில்லை. இப்போது நமது விக்டோரியா மகாராணியின் காலத்தில் இத்துன்பங்களில் ஒன்றுலொன்றுண்டா? சமஸ்த கஷ்டங்களும் போய்விட்டன. எங்கே பார்த்தாலும் இருபக்கமும் வரிசையாக மரங்கள் வைத்த இன்பமான அநேகசாலைகளும், ரயில்மார்க்கங்களும், ஆறுகள் எங்கும் உறுதியான பாலங்களும் அமைக்கப்பட்டிருக்கின்றன. ரயில்வண்டிகள், குதிரை வண்டிகள், போதாததற்கு மின்சாரத்தால் செலுத்தப்பட்ட 'ட்ராம்' வண்டிகள், எவ்வளவு தினுசு தினுசாக தூரத்துக்கும் இடத்துக்கும் தக்கபடி போக்குவரவுகளுக்கு ஆக்கப்பட்டிருக்கின்றன !

முன்னுளில், தபாலாபீசுகள் கிடையா. ஒரு ஊரைவிட்டு நெடுந்தூரம் மற்றொரு ஊருக்குப்போன ஒருவன்சமாசாரம் தெரியவேண்டுமாயின், அவன்திரும்பிவந்தாலொழியத் தெரிய மார்க்கமில்லை. இப்போதோ, காசியில் உள்ள சமாசாரமும் காலணுக்கார்டினுல் தெரிந்து கொள்ளலாமே! தூரதேசங்களில் உள்ள பந்துமித்திரர்களின் சமாசாரம் அன்றன்றுடம் விவரமாக அறிந்துகொள்ளலாம். நாட்கணக்கில்லாமல் மணிக்கணக்கில் சமாசாரம்தெரிந்து கொள்ள வேண்டுமாயின் அது ஒருகஷ்டமா ? ஊருக்கூர் எங்கேபோனுலும் தந்திக்கம்பி

யோட்டப்பட்டிருக்கின்றது. அரை ரூபா செலவிட்டால், ஆயிரமைல் தூரத்துச் சமாசாரமும் அப்போதே அறிந்து கொள்ளலாம்! நகைகள், நாணயங்கள், பணங்கள், பட்டுக்கள், எந்தப் பொருள் அனுப்பவேண்டுமோனாலும், சிரமமில்லாமல் தபால்மார்க்கமாக அனுப்பலாமே. வர்த்தகச் சரக்குகள் 'ஸ்டீமர்' வழியாகவும், 'ரயில்' வழியாகவும், எந்த மூலைக்கும் அனுப்பி எந்த மூலையிலிருந்தும் பெற்றுக்கொள்ளலாம்.

இவ்வாறு, போக்குவரவு வர்த்தகவியாபாரங்களுக் குபயோகமாகச் சாலைகளும், கால்வாய்களும், பாலங்களும், ரயில்பாதைகளும், லக்ஷோபலக்ஷம் ரூபா செலவழித்து துரைத்தனத்தாரால் அமைக்கப்பட்டிருக்கின்றன. இப்போது லக்ஷம் மைல் ராஜபாதையும், 20ஆயிரம் மைல் இருப்புப்பாதையும் 41 ஆயிரம் மைல் தூரம் தபால்தந்திகளும் போடப்பட்டிருக்கின்றன. இன்னமும் வருஷாவருஷம் புதிதாக இருப்புப்பாதைகள் போடப்பட்டு வருகின்றன. புதிய பாதைகளுக்கு வருஷம் ஒன்றுக்கு நான்கு கோடி ரூபாய் செலவிடப்படுகின்றது. இருப்புப்பாதை ஆரம்பமானது முதல் இதுவரையில் அதற்காகச் செலவழிந்துள்ள மொத்தத்தொகை 232 கோடி ரூபா.

கைத்தொழில்களும் முன்னைக்கிப்போது பன்மடங்கு அபிவிர்த்தியாயிருக்கின்றன. முன்னாளில் செய்துவந்த சிற்சில கைத்தொழில்கள் தவிர, மற்றவையெல்லாம் இன்னமும் நடந்து வருவதையன்றி, அநேக நூதனமான விசித்திர வேலைகளும் இப்போது செய்யப்படுகின்றன. பம்பாய் முதலிய அநேக பட்டணங்களில் நீராவியந்திரத்தினால் நெசவுத்தொழில் செய்யப்பட்டு பிரதேசங்களுக்குத் துணிகள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. இப்போது இந்தியாவில் 100-யந்திரங்களுக்குமேல் பற்பல இடங்களிலிருக்கின்றன. அவைகளால் சுமார் லக்ஷம் ஜனங்களுக்கு ஜீவனம் நடக்கின்றது. பருத்தி, பட்டு, கம்பளி, முதலிய பலவிதமான நாணயமுள்ள வஸ்திரங்கள் ; விதம் விதமாக வயிரம், கெம்பு, பொன், வெள்ளி முதலியவற்றாற்செய்த அநேக நகைகள்; செம்பு, பித்தளை, வெண்கலம், ஈயம், இரும்பு முதலான உலோகங்களாற்செய்த பலவகையான பாத்திரங்கள்; உபகரணங்கள் ; ஆகிய இவைகள் எங்கும் செய்யப்பட்டுவருகின்றன. சர்க்கரை, காயிதம், நீலம் முதலிய இன்னம் அநேக பொருள்களும், யந்திரங்களாலும் வேறு வகையாகவும் ஏராளமாகச் செய்யப்படுகின்றன.

இனிக் கல்வி விஷயத்தை ஆலோசிக்கின், முற்காலத்தில், நமதுதேசத்தில் கல்வி பிராமணர் முதலான சிலரிடத்தில் மாத்திரம் அவர்களுக்கே உரியதாய்த் தங்கியிருந்தது. இப்போதோ, அக்கல்வி சகலர்க்கும் சுதந்திரமாகி எங்கும் பரவி, யாவர்க்கும் அறிவைப்புகட்டி நிற்கின்றது. இந்தியாவில் இப்போது சென்னை, பம்பாய், கல்கத்தா, அலஹபாத், லாஹோர் என்னும் ஐந்து ராஜதானிகளிலும் சர்வகலா சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டு, ஒவ்வொன்றையும் அடுத்து அநேக முதல்தரம் இரண்டாம் தரமான பெரியபடிப்புப் பாடசாலைகள் இருக்கின்றன. அவற்றில் தர்க்கம், வியாகரணம், மீமாம்சம், சரித்திரம், சட்டம், சிற்பம், கணிதம், ரசாயனம், வைத்யம், வியவசாயம், முதலான எண்ணிறந்த கலைகள் கற்பிக்கப்பட்டு, வருஷந்தோறும் ஆயிரக்கணக்காய் வித்யார்த்திகள் பரிக்ஷைகளில் தேறிவருகின்றார்கள். கீழ்த்தரமானபாடசாலைகளுக்கு அளவில்லை. இப்போது சுமார் 1,40,000 கல்விச்சாலைகளும் அவற்றில் 40-லக்ஷம் மாணுக்கர்களும் படித்துவருகின்றார்கள். துரைத்தனத்தார் வித்யாபிவிர்த்திக்காக வருஷம் ஒன்றுக்கு இரண்டாக்கோடி ரூபாய்க்குமேல் செலவழிக்கின்றார்கள்.

இவ்வித்தியாபிவிர்த்தியினால் ஜனங்கள்

அடைந்துள்ள பிரயோசனம் இவ்வளவென்றில்லை. அதனால் ஜீவனார்த்தமான அநேக உயர்ந்த உத்தியோகங்களைப்பெற்றுக் கனமும் கண்யமும் அடையப் பெற்றதன்றியும், ஜனங்கள் தங்களுக்குள்ளிருந்த மௌட்டியமும் துராசாரங்களும் நீங்கி மிக்க சீர்திருத்தமும் நாகரிகமும் அடையப்பெற்றிருக்கின்றனர். விதவைகளை அனலிலிட்டுக்கொல்லுதல், சிசுக்களை வதைத்தல், செடிலாடுதல், நரபலியிடுதல், கை கால் முதலிய உறுப்புக்களைக் குறைத்துக்கொள்ளல் முதலிய சாஹசமான அநேக கொடிய வழக்கங்கள் யாவும் இவ்வித்தியாபிவிர்த்தியின்முன் வெயில்முன் இருள்போல நீங்கிவிட்டன.

இவ்வித்தியாபிவிர்த்தியினால், இதற்குமுன் என்றுமில்லாத அநேக வர்த்தமானப்பத்திரிகைகளும், புஸ்தகங்களும் நாடெங்கும் எவ்வளவு புதிது புதிதாக வெளிப்பட்டுப் பரவியிருக்கின்றன! முதல் முதல்இத்தேசத்தில் சுதேசப் பத்திரிகை ஏற்பட்டது 1818 - ம் வருஷத்தில். அப்போது சிற்சில பத்திரிகைகளைக்கூட வாங்கிப்படிப்பாரில்லை. இன்றைத்தேதியிலோ நானூற்றுக்கு மேலான வர்த்தமானப்பத்திரிகைகளும் சஞ்சிகைகளும் பிரசுரமாகின்றன. புஸ்தகங்களும் ஆயிரக்கணக்காக வருஷந்தோறும் பிரசுரம் ஆகின்றன.

ஜனங்களுக்கு வியாதிமுதலிய உபத்திரவங்கள் வந்தால் அவற்றிற்குத்தகுந்த சிகிச்சை செய்யும்படி, எத்தனையோ ஆஸ்பத்திரிகள் துரைத்தனத்தார் ஏற்படுத்தியிருக்கிறார்கள். சென்னை முதலிய பட்டணங்களில் உள்ள கிணறுகள், குளங்கள், அசுத்தம் நிறைந்து பல விதமான நோய்களை உண்டுபண்ணுதலால் அவற்றைத் தள்ளி நெடுந்தூரத்துக்கப்பாலிருந்து இருப்புக் குழாய் வழியாகச் சுத்தமான நல்ல ஜலம் கொண்டுவந்து வைக்கப்பட்டிருக்கின்றது. வைசூரிநோய் வாராதபடி அம்மை வைக்கப்படுகின்றது.

மேற்கூறியபடி ஜனங்களின் தேகாரோக்கியத்துக்காக துரைத்தனத்தார் பொதுவாக அநேக ஏற்பாடுகள் செய்திருப்பதையன்றி, ஒருவிஷயத்தில் இராணியார் தாமே மிக்க சிரத்தையெடுத்துக்கொண்டு நமக்காக முயன்றுவருகின்றார். 1881 - ம் ஹ மிஸ் பேயிலிபி என்னும் ஒரு துரைசானி புன்னை மஹாராணியால் அனுப்பப்பட்டு இந்தியாவில் தக்க வைத்தியரில்லாமையால் ஸ்திரீஜனங்கள் படும் கஷ்டங்களை அரசியவர்களுக்குத் தெரிவிக்க, அரசியார் மிகவும் பரிதபித்து, சொற்பக்காலத்துக்கெல்லாம் இந்தியாவுக்கு ராஜப்ரதிநிதியாக டப்ரின் பிரபு அனுப்பப்பட்டபொழுது அவரது பத்னியோடு இவ்விஷயமாக விரிவாக எடுத்துப்பேசி மேற்கூறிய குறையை நிவர்த்திபண்ணுவதற்குத்தக்க பிரயத்தினங்களைச் செய்ய

வேண்டுமென்று அவருக்கு வற்புறுத்தினார். அவ்வாறே ஸ்திரீஜனங்களுக்குச் சிகிச்சைசெய்யும்படி வைத்தியத்தில் தேர்ந்த பெண்களை நியமிப்பதற்கும் பெண்களுக்கென்று ஆஸ்பத்திரி வேறாக ஏற்படுத்துவதற்கும் வேண்டுமான தொகைகள் சேர்த்து அத்தொகையால் அக்காரியம் இப்போது நடப்பித்துவரப்படுகின்றது. அதனால் பரபுருஷர்களைப்பார்க்க அஞ்சும் அநேகம் பெண்கள் நன்மை யடைந்து வருகின்றார்கள்.

இன்னம் அரசியின் ஆளுகையில் இந்துதேசத்துச்சனங்கள் நாகரிகம், ராஜரிகம், நடை உடை முதலான அநேகவிஷயங்களில் அளவிறந்த அபிவிர்த்திகளை யடைந்திருக்கிறார்கள். அவையெல்லாவற்றையும் விவரிக்கின் மிகவிரியுமாதலால் இத்துடன் முடிக்கின்றோம்.

அரசியின் ஜீவசரித்திரத்தையும் அவரது குணாதிசயங்களையும் ஆளுகையையும் பற்றி எமது சிற்றுணர்விற்கு எட்டியஅளவில் ஒருவாறு எடுத்துக் கூறினோம். இதில் உள்ள குற்றங்கள் பலவாயினும் அவற்றை அறிவிற்சிறந்த பெரியோர்கள் பாராட்டாமல் இச்சிறு புஸ்தகத்தை ஆதரிப்பார்களென்று நம்புகின்றோம்.

முடிவில் அரசியைப்பற்றிப் புலவர் பெருமானாகிய 'டென்னிசன்' என்பவர் கூறியுள்ள சில பாக்களைக்கூறி முடிக்கின்றோம். அரசியின் பெருமையையும் அரசிக்கு யாம் வேண்டும் உறுதியையும் இதனினும் மேலாக இயம்புதற்கரியேமாதலின் இதனை இங்கு கூற விரும்பினோம்.

கலிநிலைத்துறை.

1. நேச மோடியாம் மதித்திடும் நிறைகுணத் தரசே !
ஆசு தீர்வலி அறிவொடு பிறப்பெனும் அனைத்தால்
பேசு போர்கெழு மேலைநாள் அரசரும் பெருத,
மாசி லாப்பெரும் பதத்தினை மன்னினை உலகே.

* * * *

2. பன்னெ டும்பகல் எம்மைநீ பரிவொடு புரக்க,
துன்னி நின்வயிற் பிறந்துநின் அருங்குணம் துலங்கும்
மன்னர் யாண்டுமெற் புரக்குமா நின்வழி வருக,
இன்ன தன்றிநின் இணையறும் இரும்புகழ் குறித்தே,—

3. "அன்னன் தன்னெடும் குடிகளுக் கிறுதியில் அரிய
நன்ன லம்பல புரிந்தனள் ; நவில்தரும் தாய்மை
மன்னி நின்றதால் வளர்மனை ; அனையவள் வாழ்க்கை
இன்னல் கூர்ந்தில ; திறைபவட் குதவினன் அமைதி.

4. "அனையள் மாநிலம் அயர்வறத் துயின்றதால் ; அவள்பால்
வினைய மோடுநாம் மதித்திட விழுமிய ஆன
இனிய தாய், மனை, இறைவியென் இயல்பினுக் கடுத்த
புனையும் ஆயிரம் அருங்குணம் பொலிந்தன அன்றே.

5. "கால மோடிடம் தெரிந்துதாம் கருதிய உறுதி
சீலம் எறிய அரசினுக் குகந்துசெய் பவராய்,
மேல வாம் சில ஆணையால் வியன் சுதந் தரத்தின்
கோலும் எல்லையை விரித்திடும் குறியுளார் ஆகி ;

6. "அன்னள் ஆட்சியை அனையவா குடிகளின் விருப்பம்
என்னும் தானமீ திடம்பெற இருத்தலின், கடவாத்
தொன்னெடுங்கடல் சுலவலின், துளக்கமின் திருத்த
வல்நராகிய மந்திரர் சூழ்ந்திருந் தனரால்."—

7. என்ன இன்னணம் இயம்பினர் எம்மரு மகார்க்குப்
பின்னும் போந்திடும் மகார்பலர் பெருந்துதி பகர,
மன்னும் நீள்ஒளி மணிமுடி பிறங்கிய அரசே
தன்னை நேரிலாத் தனிப்பரன் அருளுக தழைத்தே !

## மகாராணியவர்கள் காப்பு.

இராகம்-யமுனகல்யாணி,—தாளம்-திரிபுடை.

### பல்லவி.

கடவுள் காத்தருள் புரிகவே பெருங்
கருணையார் நமதரசியை

### அநுபல்லவி.

படியின்மீதவள் நெடிதுவாழ்ந்திடப்
பரவுசீருல கோங்கவே
கொடியதாம்கலி மடிய நீடுமிக்
குவலயங்களி தேங்கவே (கடவுள்)

### சரணங்கள்.

1. நேமிசூழுல கனைத்தும் தண்குடை
நிழலிலமர்தினி தேலவே
ஏமமாநெடு நாளும்புரந்திட
இனியதன்னுயிர் போலவே (கடவுள்)

2. போரில் வெற்றியும் பொலிவும் இன்பமும்
பொருந்தெந்நன்மையும் கேளுமே
சீரும் செல்வமும் திருவும் தேசமும்
திகழ நல்கியெந் நாளுமே (கடவுள்)

3. பகைகொண்டெழுந்தவர் பரவு வெம்படை
பாறிநாற்றிசை சாயவே
வகையின் அவர் செயும் வஞ்சம் யாவையும்
மாய்ந்து முடிவுறத் தேயவே (கடவுள்)

4. கனத்தபே ரெளியவர்க்குத் தீமைகள்
கருதிடாவகை நீடவே
மனத்திலே மகிழ்ந்தவள் தன் மகிமையை
வாய் நிரம்ப நாம் பாடவே (கடவுள்)



Her Majesty Queen Victoria, Empress of India.
இந்தியாசக்கிரவர்த்தினியாகிய விக்டோரியா மஹாராணியவர்கள்.

விக்டோரியா மஹாராணியவர்கள் சரித்திர

அனுபந்தம்.

---

# இந்தியா கவர்ன்மெண்டு,—

## 1. அதன் அமைப்பு.

[இவ்விந்தியாவையாளுபவர் மாட்சிமைதங்கிய மஹாராணியவர்களாலனுப்பப்பட்டு அவருக்குப் பிரதிநிதியாகவிருப்பதால் இராஜப் பிரதிநிதி யென்றுசொல்லப்படும் அதிகாரியொருவர் என்று பள்ளிப்பழக்கமுள்ளவர்களெல்லாரும் அறிவார்கள். ஆனாலும்அவருடைய அதிகாரம் என்ன? அவர் இந்ததேசத்தை எப்படி ஆளுகிறார்? அவர் தலைவராகவிருக்கும் இந்தியா கவர்ன்மேண்டு என்பது என்னமாதிரிஅமைந்திருக்கிறது? அவர்கள் இத்தேச அரசாட்சியை என்னவிதமாக நடத்திவருகிறார்கள்?—என்னும் கேள்விகளிலடங்கிய சங்கதி விவரம் நன்றாயறிந்தவர்கள் மிகச்சிலரேயாம். இவர்களுக்கும் அனேக விஷயங்களில் தப்பபிப்பிராயம் இருக்குமென்பது நமது எண்ணம். ஆகையால் இச்சமயத்தில் இந்தியாகவர்ன்மெண்டின் அமைப்பு விவரமெப்படியென்றும், ருஷியாவை ஒழித்தால் ஐரோப்பா கண்டத்துக்குச் சரியான இவ்வளவு பெரிய இந்த இந்துதேசத்தின் இராச்சிய காரியங்கள் எவ்வாறு நடத்தப்பட்டு வருகின்றனவென்றும் எழுதி விளங்கவைப்பது இப்புத்தகத்தின் நோக்கத்துக்கு ஒத்ததாயிருக்குமென்றெண்ணி, அவ்விஷயத்தைப்பற்றி யெழுதிய † விவரங்களை இதனோடு சேர்க்கலானோம்.]

---

† இவ்வனுபந்தத்தின் முதலிரண்டு அதிகாரங்கள் 1895-ம் வருஷக்கடைசியில் விவேகசிந்தாமணியில் வெளியாயின.

இந்தியாவையாளும் அதிகாரியை இராஜப்பிரதிநிதியென்று சாதாரணமாய்ச் சொல்வது வழக்கமானாலும், இராஜப் பிரதிநிதி இந்தியா கவர்ன்மெண்டுக்குத் தலைவரென்பது வாஸ்தவமானாலும், இந்தியாவையாளும் அதிகாரம் அவர் ஒருவர் கையிலேயே வைக்கப் படவில்லை. துரைத்தன விஷயங்களில் இராஜப் பிரதிநிதி அல்லது கவர்னர்ஜெனரல் என்பதற்கும் 'ஆலோசனை சபையிலுள்ள கவர்னர்ஜெனரல்' என்பதற்கும் மெத்த வித்தியாசமுண்டு. இராஜப்பிரதிநிதி யென்பது இராஜ ஸ்தானத்தில் ராஜரீகத்துக்குப் பிரதிநிதியாகவிருக்கும் முறைமையில்அவரைத் தெரிவிக்கச்சொல்லும் பட்டப்பெயர். இந்தியாவையாளும் மூறைமையில் அவர் ' இந்தியா கவர்ன்மேண்டு ' என்று சொல்லப்படுவதில் ஒரு பாகமே. அவர் ஒரு முக்கிய பாகமானாலும் மொத்தத்தில் ஒரு பாகமே யொழிய இந்தியா கவர்ன்மேண்டு என்பது முற்றும் அவரல்ல. இந்தியா கவர்ன்மேண்டு என்றால் பின்னை என்ன, அது யாரைக் குறிக்கிறது ? என்னும் கேள்விக்குப் பின்னால் உத்தரம் சொல்லுகிறோம்.

' இந்தியா கவர்ன்மேண்டு ' என்பது இந்தியாவையாளும் இராஜப் பிரதிநிதியையும் அவருடைய மந்திரிகளையும் சேர்த்துச் சொல்

லும் ஒரு கூட்டப்பெயர். இந்தியா துரைத்தனத்தை நடத்துவதில் இராஜப்பிரதிநிதியவர்கள் பரதேசகாரியங்களைத் தமது சொந்த மேற்பார்வையில் வைத்துக்கொள்கிறார். அதாவது இந்திய சுதேச துரைத்தனங்களிலும் அதற்கு வெளியில் இங்கிலீஷ் ஆளுகைக்குட்படாத நாடுகளிலும் சம்பந்தப்பட்ட காரியங்கள் அவருடைய சொந்த மேற்பார்வையிலிருக்கின்றன. அரசிறை, வியாபாரம் ஆகிய இவை சம்பந்தமான காரியங்கள் அரசிறைமந்திரி என்னும் ஒருவர் மேற்பார்வையில் வைக்கப்பட்டிருக்கின்றன. சட்டநிர்மாணவிஷயங்கள் சட்டநிரூபணமந்திரியென்று வழங்கும் ஒருவர் மேற்பார்வையிலிருக்கின்றன. இராணுவங்கள், கப்பற்சைனியங்கள் சம்பந்தமானவிஷயங்களை மேற்பார்வைசெய்ய இராணுவமந்திரியென்று ஒருவர் இருக்கிறார். கட்டடம் மராமத்து விஷயங்களையெல்லாம் கவனிக்க மராமத்திலாகாமந்திரியென்று ஒருவர் இருக்கிறார். இந்தியாவின் உள்நாட்டுக் காரியங்களைப் பார்த்துவர உள்நாட்டுமந்திரி ஒருவர் இருக்கிறார். இப்படியாக இந்தியா துரைத்தனம் நடத்துகிறவர்கள் இராஜப் பிரதிநிதியும் மேலே குறித்த அவருடைய ஐந்து மந்திரிகளுமாகிறார்கள். இந்த 6-பேர்களையும் ஒன்றாகச் சேர்த்துச் சொல்வ

தற்குத் தான் இந்தியா கவர்ன்மேண்டு என்று பேர். "ஆலோசனை சபையிலுள்ள கவர்னர் ஜெனரல்" என்றாலும் இந்த அர்த்தம் தான்.

மேலே சொன்ன இவர்களோடு இந்தியா முழுவதுக்கு மூக்கிய சேனாதிபதியாக இருப்பவருக்கும் கௌன்ஸிலில் ஒரு மெம்பாரயிருக்க அதிகாரமுண்டு. இவர் சாதாரண மந்திரிகள் 5-பேர்களில் ஒருவரல்ல. அவர்களோடு இவர் ஒரு விசேஷ மெம்பர். கௌன்ஸிலில் இராஜப்பிரதிநிதிக்கு அடுத்தபடி இவருடைய அந்தஸ்து. ஆலோசனைச்சபை கூடும்பொழுது மட்டும் இவர்கூடவிருந்து ஆலோசனை சொல்லி †'வோட்டு'க் கொடுக்க அதிகாரமேயொழிய மற்றப்படி இராணுவ சம்பந்தமற்ற வேற்றிலாகா விஷயங்களில் இவர் பிரவேசிக்க இடமில்லை.

---

† இது இங்கிலீஷ் வார்த்தை. தமிழில் இதற்குச் 'சங்கற்பம்' என்கிறவார்த்தை உபயோகிக்கலாமானாலும் இங்கிலீஷ் வார்த்தையே விசேஷமாகப் பழக்கத்திலிருப்பதால் விஷயம் எளிதில்விளங்குமாறு அதையே இங்கு உபயோகித்திருக்கிறோம். 'கௌன்ஸில்' 'மெம்பர்' 'கவர்ன்மெண்டு' முதலிய இன்னும் சிலவார்த்தைகளும் இந்நோக்கத்தைக்கொண்டே உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. தமிழ்வலார் இதை ஒருபெருங்குற்றமாகப்பாராட்டாது விஷயத்தையே முக்கியமாகக் கவனிப்பார்களென்று கோருகிறோம்.

இந்தியா கவர்ன்மெண்டு இப்பொழுது ஏற்பட்டிருக்கும் மாதிரியை மேலே சுருக்கமாய் எடுத்துச் சொன்னோம்.

இவர்களுடைய அதிகாரம்இவ்வளவென்றும் அவ்வதிகாரத்தை இவர்கள் இப்பொழுது செலுத்தும் வகை இன்னதென்றும் சொல்லுமுன் இந்தியா கவர்ன்மேண்டு ஆதியில் என்ன ஸ்திதியிலிருந்து விர்த்தியடைந்து இந்த ஸ்திதிக்கு வந்ததென்று அதன் சரித்திரத்தை அறிந்து கொள்ளவேண்டியது முக்கியம்.

இந்தியா கவர்ன்மெண்டின் பூர்வீகத்தைக் கண்டு பிடிக்க அதன் ஆதிசரித்திரத்தை ஆராய்ந்துகொண்டுபோனால், இந்தியா 'கம்பனியார்' ஆளுகையிலிருந்தபொழுது வங்காளத்தில் அவர்களுக்கு ஆதீனமாயிருந்த நாடுகளை ஆளுவதற்காக ஏற்பட்ட கவர்ன்மெண்டிலிருந்து வரவர அதிகரித்து இப்பொழுதுள்ள இந்தியா கவர்ன்மேண்டு உண்டானதாகத் தெரிகிறது. 1773-ம் வருஷத்தில் 'ஈஸ்திந்தியாகம்பனி'யாருடைய அதிகாரப்பத்திரத்தை அங்கிலேய பார்லிமெந்துசபையார் புதுப்பித்த பொழுது வங்காள இராஜதானியை ஆள்வதற்காக ஒரு கவர்னர்ஜெனரலும் கௌன்ஸிலும் ஏற்படுத்தினார்கள். இது தான் முதல் முதல் கவர்னர்ஜெனரல் என்கிற பேர் உண்டானகாலம். 1773-ம்

வருஷத்தில் செய்த பார்லிமெந்துச் சட்டத்தினால், கவர்னர்ஜெனராலும், சட்டத்தில் பேர் குறிக்கப்பட்ட நாலு கௌன்ஸில் மெம்பர்களுமாகச் சேர்ந்து வங்காள கவர்ன்மெண்டை நடத்த ஏற்படுத்தப்பட்டார்கள். இவர்களுக்கு அச்சட்டத்தில் 'Government of Fort William''வில்லியம்கோட்டை கவர்ன்மெண்டு' என்று பேரிடப் பட்டிருந்தது. அப்பொழுது இராஜாங்கத்துக்கதிபதிகள் வியாபாரிகளானபடியால் அவர்களுக்கு முக்கியமானவியாபாரஸ்தானமாகக் கட்டிய கோட்டையின்பேரையே அந்தக் கோட்டையின் அதிகாரத்துக்குட்பட்ட ஸ்தானங்களை யெல்லாம் குறிக்கும் பேராக உபயோகித்து வந்தார்கள். இன்றைக்கும் சென்னை கவர்ன்மெண்டுக்குச் சட்டப்படியுள்ளபேர்'Government of Fort Saint George, and its dependencies' 'சந்த் ஜார்ஜ் கோட்டையையும் அதைச்சார்ந்தபிரதேசங்களையும் ஆளும் கவர்ன்மெண்டு'என்பதாம். இப்பொழுது சென்னையிலுள்ள கோட்டை எவ்வளவு அற்பமாகத்தோன்றினாலும் அக்காலத்தில் அதுவே அவர்களுக்குப்பிரதான ஸ்தானமாயிருந்தது. 1737-ம் வருஷத்துச் சட்டத்தைச் சீர்திருத்துவதற்காக 1784-ம் வருஷத்தில் செய்யப்பட்ட மற்றொரு சட்டத்தினால் கவர்னர்-ஜென

ர்லின்கௌன்ஸில் மெம்பர்கள் மூன்றுபேர்களா கஇருக்கவேண்டுமென்றும், அவர்களை 'ஸிவில் ஸெர்விஸ்' உத்தியோகஸ்தர்களிலிருந்து தெரிந் தெடுத்து நியமிக்கவேண்டுமென்றும், முக்கிய சேனாதிபதி அந்தக் கௌன்ஸிலில் ஒரு விசேஷ மெம்பராயிருந்து கவர்னர்-ஜெனரலுக்கு அடுத் தபடியில் அதிகாரமும் அந்தஸ்துமுள்ளவராயி ருக்கவேண்டுமென்றும் ஏற்பாடு செய்யப்பட் டது.

1793-ம் வருஷத்தில் 'கம்பனி'யாருடைய அதிகாரப் பத்திரத்தைப் புதுப்பிக்கச் செய்த பார்லிமெந்துச் சட்டத்தினால் மேலே சொன் ன ஏற்பாடு காயம் செய்யப்பட்டதோடு முக் கிய சேனாதிபதியை விசேஷ மெம்பராக நிய மிக்கவேண்டுமென்பது கட்டாயமின்றி 'கோர்ட் அவ் டைரெக்டர்கள்' என்னும் மேல் விசாரணைக் கர்த்தர்கள் இஷ்டத்தைப் பொறுத் ததாக விடப்பட்டது; இது மேலதிகாரிகள் இஷ்டத்தைப் பொறுத்ததாக விடப் பட்ட போதிலும் நாளது வரையில் முக்கிய சேனாதி பதியைக் கௌன்ஸிலில் ஒரு விசேஷ மெம்ப ராக நியமிக்கும் அதிகாரத்தைச் செலுத்தி மே லதிகாரிகள் அவரை எப்போதும் சபையில் ஒரு அவயவமாகவிருக்க நியமித்து வருவது வழக்கமாகவிருக்கிறது. 1793-ம்

வருஷத்தில் வங்காள கவர்ன்மெண்டுக்கு மற்றச் சென்னை, பம்பாய் இராஜதானிகளின் கவர்ன்மெண்டுகளின்பேரில் ஒருவித மேலதிகாரம் கொடுக்கப்பட்டது. அந்தச் சட்டப்படி கவர்னர்ஜெனரல் மற்றப் பம்பாய், அல்லது சென்னை இராஜதானிக்கு விஜயமாகச் சென்றால் அவர் இராஜதர்னி எல்லையை மிதித்ததும் அந்த இராஜதானிக் கவர்ன்மெண்டைத் தள்ளிவைத்து அவ்விராஜதானியின் துரைத்தன அதிகாரத்தைக் கவர்னர்ஜெனரல்தாமே வகிக்க அதிகாரம் கொடுக்கப்பட்டிருந்தது. 1813-ம் வருஷத்தில் 'கம்பனி'யாரின் அதிகாரப் பத்திரத்தைப் புதுப்பிக்கச்செய்த பார்லிமெந்துச் சட்டத்தால் *துரைத்தன ஏற்பாட்டில் யாதொரு மாறுதலுமில்லை. ஆனால் அந்த வருஷம்செய்த சட்டத்தினால் 'ஈஸ்திந்தியாகம்பனியார்' இராஜ்ஜியமாளும் அந்தஸ்துப் பெற்

---

* ஈஸ்திந்தியா கம்பனியாருக்குக் கொடுக்கப்பட்ட அதிகாரப்பத்திரம் 20-வருஷத்துக்குச் செல்லத்தக்கதாகவும், அந்த 20-வருஷமான பின் பார்லிமெந்து சபையார் அவர்கள் காரியங்களை விசாரித்துப் புதிய அதிகாரப்பத்திரம் கொடுப்பதும் வழக்கமாயிருந்தது. 1853-ம் வருஷம் வரையில் இப்படி 20-வருஷத்துக்கு ஒருதரமாக அதிகாரப் பத்திரம் கொடுக்கப்பட்டுவந்தது.

றும், வியாபாரம்செய்துவருவது கூடாதென்று அதுவரையில் அவர்கள் அனுபவித்து வந்த வியாபார சுதந்தரத்தைப் பிடுங்கி விட்டார்கள். இதனால் இந்தியாவிலுள்ள கவர்ன்மெண்டுக ளுக்கு அதுவரையிலிருந்த வியாபாரத்தொழி லொழிந்து துரைத்தன வேலையை நன்றாகக் கவனிக்கச் சமயம் நேர்ந்தது. 1833-ம் வரு ஷத்தில் கம்பனியார் அதிகாரப் பத்திரத்தைப் புதுப்பிக்கச்செய்த, பார்லிமெந்துச் சட்டத்தி னால் 'வங்காளத்து' கவர்னர்ஜெனராலும் கௌன் ஸிலுமா' யிருந்தவர்கள்'இந்தியாகவர்னர்ஜெனர லும் கௌன்ஸிலுமாகச்' செய்யப்பட்டு 'இந்தி யாவிலுள்ள கம்பனியார் நாடுகள் எல்லாவற் றின் ஸிவில், இராணுவ துரைத்தனத்தையும் வருமானத்தையும் நேரில் மேற்பார்வைசெய்து நடத்திவர அதிகாரமுள்ளவர்களாக ஏற்படுத் தப்பட்டார்கள். இப்படி இந்தியாவிலுள்ள சென்னை, பம்பாய் இராஜதானிகளின் துரைத் தன மேலதிகாரத்தை முற்றும் வகித்தவர்களா யிருந்தாலும் அவர்கள் வங்காள துரைத்தனத் தைமட்டும் தாங்களே நேரில் நடத்திவந்தார் கள். 1813-ம் வருஷத்தில் செய்த சட்டத்தில் கம்பனியார் இந்தியாவில் வியாபாரம் செய்வ தைத் தடுத்துவிட்டார்களென்று சொன்னோம். ஆனால் 'சீனு'தேசத்தோடு வியாபாரஞ்செய்யும்

சுதந்தரம்மட்டும் கம்பனியாருக்கு விட்டிருந்தார்கள். 1833-ம் வருஷத்துப் பார்லிமெந்துச் சட்டத்தில் கம்பனியார் வியாபாரத்தொழிலே செய்யக்கூடாதென்று தடுத்துவிட்டார்கள். இந்தவருஷத்தில் செய்த சட்டத்தினால் வங்காளத்தை இரண்டு பிரிவாகப்பிரித்து அதில் ஒன்றாகிய வடமேற்கு மாகாணத்துக்குத் தனியாக உதவிக்கவர்னர் ஒருவரை நியமனம்செய்து அவரைக்கொண்டு அந்தப் பாகத்தின் துரைத்தனத்தை நடத்திவரச் சட்டநிபந்தனை செய்யப்பட்டது. அப்படியே வங்காளத்துக்கும் ஒரு உதவிக் கவர்னர் நியமிக்க அதிகாரம்கொடுத்தாலும் 1853-ம் வருஷம்வரையில்வங்காளத் துரைத்தனத்தை கவர்னர்ஜெனரலும் கௌன்ஸிலும் சேர்ந்து நேராகவேநடத்திவந்தார்கள். 1773-ம் வருஷத்துச் சட்டத்தினால் வங்காளகவர்ன்மெண்டுக்குத் துரைத்தன அதிகாரத்தோடு சட்டம் செய்யும் அதிகாரமும் கொடுக்கப்பட்டிருந்தது. அப்படியே சென்னை, பம்பாய் கவர்ன்மெண்டுகளுக்கும் பின்னிட்டு இந்த அதிகாரம் கொடுக்கப்பட்டது. அவர்கள் செய்யும் சட்டங்களுக்கு 'ரேகியுலேஷன்' அல்லது 'ஒழுங்குகள்' என்று பேர் வழங்கிற்று. 1833-ம் வருஷத்துச் சட்டத்தினால் சென்னை, பம்பாய் கவர்ன்மெண்டுகளுக்கிருந்த சட்டஞ்

செய்யும் அதிகாரத்தைப்பிடுங்கி இந்தியாமுழு மைக்கும் சட்டஞ்செய்யும் அதிகாரம் கவர்னர் ஜெனராலும் கௌன்ஸிலும் சேர்ந்த 'சுப்ரீம் கவர்ன்மெண்டு' என்னும் மேலானகவர்ன்மெண்டார் வசம் ஒப்பிக்கப்பட்டது. இப்படி மேலான கவர்ன்மெண்டாருக்கு இந்தியா முழுமைக்கும் சட்டம்செய்யும் அதிகாரம் கொடுக்கப்படவே அவர்கள் கையைப்பலப்படுத்த இதற்கு முன்னே குறிக்கப்பட்ட மூன்று கௌன்ஸில் மெம்பர்களோடு நாலாவது கௌன்ஸில் மெம்பராக ஒருவரை நியமிக்கவேண்டுமென்று ஏற்பாடுசெய்தார்கள். இந்த மெம்பர்நியமனம் மேலான கவர்ன்மெண்டார் சட்டஞ் செய்யும் கடமையைச்சரிவர நிறைவேற்றுமாறு உதவிபுரிய வேண்டுமென்றே உண்டு பண்ணப்பட்டதால், இதற்கு நியமிக்கப்படுகிறவர் ஒருஇங்கிலீஷ் பாரிஸ்டராகவே யிருக்கவேண்டுமென்பது சட்டம்செய்தவர்களுடைய உத்தேசம். இந்த நாலாவது மெம்பர் 1833-ம் வருஷத்துச் சட்டப்படி மற்றச் சாதாரண கௌன்ஸில் மெம்பர்களெல்லாருக்கும் பின்னிட்ட அந்தஸ்தும் அதிகாரமுமுள்ளவராயிருந்தார். இவருக்கு சட்டஞ் செய்யும்போது கூடும் கௌன்ஸிலில்மட்டும் ஆஜராயிருந்து பேசி 'வோட்டு'க் கொடுக்க அதிகாரமேயன்றி மற்றப்படி சாத்

ரண துரைத்தன விஷயங்களை நடத்தக் கூடும் கௌன்ஸிலின் கூட்டத்தில் பேசவாவது, மற்ற நடபடிக்கைகளில் தலையிட்டுக்கொள்ள வாவது அதிகாரமில்லை.* இதுதான் சட்டநிரூபணமந்திரி ஸ்தானத்தின் மூலம்.

இந்தச் சட்டத்திலே இதுவரையில் ஸிவில் ஸெர்விஸிலிருந்து நியமிக்கப்பட்ட சபையார் மூன்று பெயர்களில் ஒருவரை இராணுவ உத்தியோகத்திலிருந்து நியமிக்கலாமென்றும் ஏற்பாடு செய்யப்பட்டது. இந்த ஏற்பாட்டுப்படி கௌன்ஸில் மெம்பர்களில் ஒருவர் இராணுவத்திலிருந்து பொறுக்கி நியமிக்கப்பட்டுவருகிறார். இதுதான் இராணுவ மந்திரி ஸ்தானத்துக்கு மூலம். 1833-ம் வருஷத்துச் சட்டமுண்டானதற்கு முன் 'சுப்ரீம் கௌன்ஸில்' என்னும் சிரேஷ்ட சபையார் கல்கத்தாவிலுள்ள கம்பனியின் கோட்டைக்குள்தான் கூட்டம் கூடவேண்டும். அதற்கு வெளியில் சபை கூடினால் அங்கு நடக்கும் நடபடிக்கைகள் சட்டப்படி செல்லத்தக்கனவாகா. இந்தச் சட்டத்ினால் ஷை சபை இந்தியாவில் எந்தவிடத்திலானாலும் கூடலாமென்று நிபந்தனையேற்படுத்தப்பட்டது.

---

* இந்த ஸ்தானத்துக்கு முதல் முதல் நியமிக்கப்பட்டவர் மிஸ்டர் (பிந்தி லார்ட்) மகாலே.

1833-ம் வருஷத்துச் சட்டத்தைச் சீர்திருத்தச்செய்த 1835-ம் வருஷத்துச் சட்டப்படி வடமேற்கு மாகாணத்துக்குப் புதிதாய் ஒரு உதவிக்கவர்னர் நியமிக்கப்பட்டார்.

1853-ம் வருஷத்தில் கம்பனியாரின் அதிகாரப் பத்திரத்தைப் புதுப்பிக்கச் செய்த பார்லிமெந்துச் சட்டம், இதுவரையில் வழக்கமாயிருந்தபடி 20- வருஷத்துக்குச் செல்லத்தக்கதாக அதிகாரம் கொடுக்காமல், 'பார்லிமெந்து சபையார்' வேறுவிதமான ஏற்பாடு செய்கிறவரையில் அவ்வதிகாரப்பத்திரம் செல்லத்தக்கதாகச் செய்யப்பட்டது. இந்தச்சட்டம், வங்காள இராஜதானிக்குத் தனியாக ஒரு உதவிக்கவர்னர் நியமிக்கப்பட்டவுடனே இந்தியா கவர்ன்மென்டார் வங்காளத்துரைத்தனத்தை நேரில் நடத்துவதை விட்டு இந்தியா முழுவதையும் மேற்பார்வை செய்துவருவதே வேலையாக இருந்து வரவேண்டுமென்று ஏற்பாடு செய்தது. இதே சட்டம், சென்னை, பம்பாய் இராஜதானிகளின் கவர்ன்மெண்டுகளுக்கு அவர்களதிகாரத்துக் குட்பட்ட எல்லைக்குள் செல்லும்படி அவர்கள் துரைத்தனத்துக்கு வேண்டிய சட்டம் செய்ய அதிகாரம் கொடுத்து, இந்திய சட்டநிரூபணசபை, இராஜதானிச்

சட்ட நிரூபணசபைகள் இவைகளையும் ஏற்படுத்தியது.

1858-ம் வருஷத்தில் நடந்த பெரிய கலகத்துக்குப் பின் இந்தியா அரசாட்சி 'கம்பனியார்' வசத்திலிருந்து மஹாராணியார் வசத்துக்கு மாற்றப்பட்டு, சீமையில் இந்தியா மந்திரி ஒருவரும் அவருக்கு இந்தியா கௌன்ஸில் ஒன்றும் ஏற்பட்டபொழுது இந்தியாவிலுள்ள 'சுப்ரீம் கௌன்ஸில்' கவர்னர்ஜெனராலுடைய கௌன்ஸிலாக மாறிற்று.

1861-ம் வருஷத்தில் " இந்தியன் கௌன்ஸில்ஸ் ஆக்ட் " பார்லிமெந்து சபையில் சட்டமாக நியமிக்கப்பட்டபொழுது கவர்னர்ஜெனரலுடைய கௌன்ஸிலுக்கு 5-வது மெம்பர் ஒருவர் நியமனம் செய்ய ஏற்பாடு செய்யப்பட்டது. 1859-ம் வருஷம் வரையில் 4-வது மெம்பர் ஒரு பாரிஸ்டராகவே யிருந்துவந்தார். அந்த வருஷத்தில் இந்தியா கவர்ன்மெண்டாருக்கு அரசிறை விஷயமாயுண்டான சங்கடங்கள் அதிகமாயிருந்தபடியால் அப்பொழுது காலியான 4-வது மெம்பர் ஸ்தானத்துக்கு அரசிறை விஷயங்களில் தேர்ந்த ஒருவர் சீமையிலிருந்து நியமிக்கப்பட்டார். (இவர் அங்கிலேய அரசிறை இலாகா காரியதரிசியாகிய மிஸ்டர் ஜேம்ஸ் உவில்ஸன்.) இதுதான் அரசிறை மந்

திரிஸ்தானத்துக்கு மூலம். அடுத்த வருஷத்தில் மிஸ்டர் உவில்ஸன் இறந்துபோகவே, அங்கிலேய நாட்டில் அவருடைய ஸ்தானத்துக்கு வந்தவர் இந்தியா கவர்னர்-ஜெனரல் அவர்களுடைய கௌன்ஸிலில் மெம்பராக நியமிக்கப்பட்டார். இந்த ஏற்பாட்டினால் கௌன்ஸிலில் சட்ட விஷயங்கள் தெரிந்த மெம்பர் தற்காலத்திற்கு ஒருவரும் இல்லாமற்போக நேரிட்டது. ஆகவே 1861-ம் வருஷத்தில் புதிதாய்ச் சட்டம் செய்தபொழுது இன்னொரு மெம்பர் நியமிக்க ஏற்பாடுசெய்து கவர்னர்ஜெனரல் அவர்களுடைய கௌன்ஸில் 5-மெம்பர்களுடையதாயிருக்கவேண்டுமென்றும், அதில் மூன்று மெம்பர்கள் மட்டும் இந்தியாவிலுள்ள உத்தியோகஸ்தர்களிலிருந்து தெரிந்தெடுக்கப்பட்டவர்களாயிருக்கவேண்டுமென்றும், மற்றொருவர் 5-வருஷ அப்பியாசமுள்ள ஒரு பாரிஸ்டராக இருக்கவேண்டுமென்றும் ஏற்பாடு செய்யப்பட்டது. அதே சட்டத்தில் எல்லா கௌன்ஸில் மெம்பர்களும் சம அந்தஸ்துள்ளவர்களாகவும் முன்னால் நியமிக்கப்பட்டவர் முன்னும் அவருக்குப் பின்னால் நியமிக்கப்பட்டவர்கள் நியமனம் செய்யப்பட்ட காலவரிசைக் கிரமமாக அவரவருக்குப் பின்னுமாக இருக்கவேண்டுமென்றும், எல்லா மெம்பர்களும் சரி

சமமாக ஆலோசனைச் சபையிற் கூடிப்பேசச் சுதந்தர முள்ளவர்களென்றும் ஏற்படுத்தப்பட்டது.

அதுவரையில் கவர்னர்ஜெனரல் ஸ்தானம், சீமையிலிருந்து அவ்வேலைக்கு நியமிக்கப்பட்டவர் வருமுன் சடுதியாகக் காலியானல் கௌன்ஸில் மெம்பர்களிற் பிரதானமானவர் புதிய கவர்னர்ஜெனரல் வருகிறவரையில் அந்த ஸ்தானத்தை வகிக்கவேண்டுமென்று சட்ட நிபந்தனையிருந்தது. 1861-ம் வருஷத்துச் சட்ட நிபந்தனைப்படி எல்லா மெம்பர்களும் சமமாக்கப்பட்டு அவரவர்கள் நியமனவரிசைப் படி அவர்கள் மேலாக எண்ணப்படுவார்களென்று ஏற்பட்டதால் கவர்னர்ஜெனரல் ஸ்தானம் காலியாகும்பொழுது முதலாகவிருப்பவர் அரசிறை விஷயத்துக்காவது சட்ட நிர்மாண விஷயத்துக்காவது நியமிக்கப்பட்ட மெம்பராக இருக்கலாம். அவர்கள் இத்தேசத்துக்குப் புதிதாய்வந்த காரணத்தால் சாதாரண துரைத்தன விவரங்களை நன்றாக அறியாமலிருக்கலாமாகையால் இந்த 1861-ம் வருஷத்துச் சட்டத்தில் கவர்னர்ஜெனரல் ஸ்தானம் சடுதியாகக் காலியாக நேரிட்டால், பம்பாய், சென்னை கவர்னர்களில் யார் முன்னதாகத் தன் வேலைக்கு நியமிக்கப்பட்டவராக இருக்கிறரோ

அவர் புதிய கவர்னர்ஜெனரல் வருகிறவரையில் அந்த ஸ்தானத்தை வகிக்கவேண்டுமென்று ஏற்பாடு செய்யப்பட்டது.

1869-ம் வருஷம் வரையில் மேலே குறித்த இரண்டு மெம்பர்களுமட்டும் மஹாராணியவர்கள் கைப்பட ஸன்னதுபெற்று நியமிக்கப்பட்டு வந்தார்கள். இந்தியன் ஸெர்விஸைச் சேர்ந்த மற்ற மூன்று மெம்பர்களும் ஆலோசனை சபையிலுள்ள இந்தியா மந்திரியவர்களால், அவருடைய சபையில் ஆஜராயுள்ள மெம்பர்களிற் பெரும்பாலாருடைய சம்மதத்தின்பேரில் நியமிக்கப்பட்டுவந்தார்கள். 1869-வருஷத்தில் செய்யப்பட்ட ஒரு பார்லிமெந்துச் சட்டத்தினுல் எல்லாமெம்பர்களும் ஒரேமாதிரியாக ராஜமுத்திரை வைத்த ஸன்னது மூலமாக நியமிக்கப்படவேண்டுமென்று ஏற்படுத்தப்பட்டது. அதாவது இவ்வேலைகளுக்கு நியமனம் செய்யச் சிபார்சு செய்யும் பாத்தியம் இந்தியாமந்திரியையும் அவருடைய கௌன்ஸிலையும் பொறுத்ததாயிருந்தது இனி இந்தியாமந்திரியைமட்டும்பொறுத்ததாகச்செய்யப்பட்டது. கவர்னர்ஜெனரல், கவர்னர்கள், கௌன்ஸில் மெம்பர்கள் முதலிய மேலுத்தியோகங்கள் 5-வருஷத்துக்கு மேல் ஒருவரால் வகிக்கப்படுகிறதில்லை. ஆனுல் இது வழக்கத்

தை அனுசரித்து நியமிப்போர், நியமிக்கப்படு வோர் இருவரும் மனதொத்துச் செய்து கொள்ளும் ஏற்பாடேயொழிய வேறல்ல. நியமன ஸன்னதில் இதுசம்பந்தமாகக் காலநிர்ணயம் ஒன்றும் குறிக்கப்படுகிறதில்லை.

1874-ம் வருஷத்தில் கவர்னர்ஜெனரல் கௌன்ஸிலுக்கு "மராமத்திலாகா விஷயங்களைக் கவனிக்கவென்று" 6-வது மெம்பர் ஒருவர் நியமிக்கப்பட ஏற்பாடுபண்ணிப் பார்லிமெந்து சபையாரால் ஒருசட்டம் செய்யப்பட்டது. அதே சட்டத்தில் சட்டநிரூபணமெம்பர் ஒருவரைத்தவிர மற்ற மெம்பர்களைக் குறைக்கவேண்டியிருந்தாற் குறைக்கலாமென்று ஒரு நிபந்தனை கண்டிருக்கிறது. இதற்கு முன் சட்டநிரூபண விஷயம் அரசிறை விஷயம் இவைகளுக்காக வென்று பிரத்தியேகமாக ஒரு மெம்பர் நியமிக்கப்பட்டு வருவது வழக்கமாயிருந்தாலும் சட்டத்தில் இன்னவிஷயத்துக்காக ஒருமெம்பர் நியமிக்கப்படவேண்டுமென்று எங்கும்குறிப்பிட்டுச்சொல்லப் படவில்லை. அப்படிச் சட்டத்திற் குறிப்பிட்டுச் சொல்லப்பட்டதற்கு முதலுதாரணம் 1874-ம் வருஷத்திற் செய்யப்பட்ட சட்டத்திற்கண்ட இந்நிபந்தனைதான். கவர்னர்ஜெனரல் கௌன்ஸிலுக்கு 6-வது மெம்பர் நியமிக்கச் சட்டம்

இடம் கொடுத்தாலும் நாளதுவரையில் அச் சபைக்கு 6-வதுமெம்பர் நியமிக்கப்படவில்லை. 1880-ம் வருஷத்தில் மராமத்திலாகாமெம்பர் ஸ்தானம் காலியானபொழுது அது நிரப்பப் படவில்லை; அதுமுதல் இதுவரையில் கௌன் ஸில் முன்போல 5 சாதாரண மெம்பர்கள் மட் டுமே கொண்டதாயிருக்கிறது. மராமத்திலா காமந்திரிவேலையை 5-மெம்பர்களில் யாராவது ஒருவர் கவர்ன்மெண்டு மெம்பர்களுக்குள் செய்துகொள்ளப்படும் ஏற்பாட்டுக் கிணங்கிப் பார்த்து வருவது வழக்கமாயிருக்கிறது. இப் பொழுது பம்பாயிலிருந்துநியமிக்கப்பட்ட ஒரு சிவிலியன் மெம்பர் அவ்வேலையை வகித்துவரு கிறார்.

இவ்வதிகாரத்தில் கௌன்ஸில் மெம்பர்களின் நியமன ஏற்பாட்டின் விர்த்தாந்தத்தை எடுத் துச் சொன்னோம். இனி இந்தியா கவர்ன் மெண்டார் துரைத்தனம் நடத்தும் ஏற்பாட் டைப்பற்றியுள்ள விர்த்தாந்தங்களை ஆதியோ டந்தமாக எடுத்துரைப்போம்.



## இந்தியா கவர்ன்மெண்டு,—

## 2. அமுல் செலுத்தும் முறை.



இந்தியா கவர்ன்மெண்டார் துரைத்தன விஷயங்களை நடத்தும் மாதிரி 'டிபார்ட்மெண்டு' என்கிற இலாகா வாரியாக வென்று இந்தியா கவர்ன்மெண்டின் மெம்பர்கள் இன்னுரெனக் குறிப்பிடும்பொழுது சொன்ன விவரங்களாலேயே விளங்கும். பரதேசவிஷயம், அரசிறை, இராணுவம், உள்நாட்டு விஷயம், மராமத்து விஷயம் என்று ஏற்பட்டுள்ள ஒவ்வொரு இலாகாவுக்கும் பிரத்தியேகமாக ஒரு காரியதரிசியிருக்கிறுர். ஒவ்வொரு இலாகாவிலும் கவர்ன்மெண்டார் பிறப்பிக்கும் உத்தரவுகள் ஒவ்வொன்றும் அந்தந்த இலாகா காரியதரிசியின் கையெழுத்துடன் வெளியாகவேண்டுமென்று சட்ட நிபந்தனையிருக்கிறது. * கவர்ன்மெண்டு

* 1793 - ம் வருஷத்துச் சட்டத்தில் கையெழுத்துப்போடுகிறவர் கவர்ன்மெண்டின் முக்கிய காரியதரிசியாகவிருக்கவேண்டுமென்றும் 'எல்லா உத்தரவுகளும் ஆலோசனைச் சபையிலிருந்து கவர்னர் - ஜெனரலால் பிறப்பிக்கப்படவேண்டுமேயன்றி மற்றப்படி செய்வது கூடாதென்றும்' கண்டிருக்கிறது. 1813-ம் வருஷத்து ஆக்ட்டில் அந்தந்த இலாகா உத்தரவுகள் அந்தந்த இலாகாக் காரியதரிசி கையெழுத்துடன் வெளியிடப்படலாமென்று கண்டிருக்கிறது.

விஷயங்கள் இப்படி இலாகாவாரியாகப் பிரிக்கப்பட்டிருந்தாலும், முதலில் எல்லாவிஷயங்களும் கவர்ன்மெண்டாரால் மொத்தமாய்க்கூடி மேற்பார்வை செய்து பைசல்செய்யப்பட்டுவந்தன. ஒவ்வொரு இலாகா விஷயங்களையும் ஒவ்வொருமெம்பர் மேற்பார்வை செய்துவரும் ஏற்பாடு கொஞ்சக்காலத்துக்குமுன் ஏற்பட்டதேயன்றி ஆதியில் இருந்ததில்லை. சட்டத்தில் 'ஆலோசனைச் சபையோடுகூடிய கவர்னர் - ஜெனரல்' என்கிற பேரே உபயோகிக்கப்பட்டு வந்ததால், அதற்கிசைய கவர்னர்-ஜெனரலும் கௌன்ஸிலும் சேர்ந்தே எல்லாக்காரியங்களையும் செய்யவேண்டியது சட்ட ஒழுங்காயிருந்தது. சட்ட ஒழுங்கு அப்படியாக, இந்தியாதுரைத்தன விஷயங்களும் அவ்வொழுங்குப்படியே நடத்தப்பட்டுவந்தன. கவர்னர் - ஜெனரல் ஸ்தானம் முதல் முதல் ஏற்பட்டபொழுது கவர்ன்மெண்டென்பது கவர்னர்-ஜெனரலும் கௌன்ஸிலும் சேர்ந்த ஒரு சங்கமாக இருந்தது. அச்சபைக்குக் கவர்னர் -ஜெனரல் அக்கிராசனாதிபதியாயிருந்தாலும் எல்லாம் பெரும்பாலாருடைய அபிப்பிராயப்படியே தீர்மானிக்கப்படவேண்டி இருந்ததால், கவர்ன்மெண்டார் இன்றைக்குச்செய்த தீர்மானம் நாளைக்கு நிற்காமல், சபையில் தடு

மாறி, அதனால் கவர்ன்மெண்டு நடவடிக்கைகள் நிலையற்று ஒரு சீரின்றி முன்னுக்குப் பின் மாறி அதிக குழப்பமாயிருந்தன. கவர்னர்-ஜெனரலுக்கு மற்றமெம்பர்களைப்போலத் தானும் ஒரு 'வோட்'டுக்கொடுக்க அதிகாரமேயன்றிப் பெரும்பாலாருடைய அபிப்பிராயத்தை மீறி நடக்க அதிகாரமின்மையால் கௌன்ஸில்மெம்பர்கள் ஆட்டிவைத்த கூத்துக்கெல்லாம் ஆளாகி அவதிப்படவேண்டியிருந்தது. முதற் கவர்னர் - ஜெனரலாகிய "வாரன் ஹேஸ்டிங்ஸ்" இப்படி கௌன்ஸில் மெம்பர்கள் கையில் பட்டபாடுகளெல்லாம் சரித்திரமாய் எழுதப்பட்ட விஷயமானபடியால் எல்லாருக்கும் தெரிந்திருக்கும். இக்குறை 1786 - ம் வருஷத்துச் சட்டத்தினால் ஒருவாறு நிவர்த்திக்கப் பட்டது. அந்தச் சட்டத்தில் கவர்னர் - ஜெனரலுக்கும் கௌன்ஸில் மெம்பர்களுக்கும் ஒரு விஷயத்தில் அபிப்பிராய பேதமுண்டானால் இருதிறத்தாரும் தங்களுடைய அபிப்பிராயங்களை எழுத்துமூலமாகக்குறிப்பிட்டு, ஒருவர் அபிப்பிராயத்தை ஒருவர் பார்த்தானபின், கவர்னர் - ஜெனரல் கௌன்ஸிலில் பெரும்பாலாருடைய தீர்மானத்தை மீறித் தன் சொந்தப் புத்திக்கு யுக்தமாய்ப்படும் தீர்மானப்படி நடக்கலாமென்று அவருக்கு அதிகாரம் கொடுக்கப்

பட்டது. கவர்னர் - ஜெனராலுக்கு இந்த அதி காரம் கொடுக்கப்படவே, இதற்கு முன் அவர் சொல்வதற்கெல்லாம் எதிர்சொல்லி இடையூ றுசெய்துகொண்டிருந்த சபை இப்பொழுது கவர்னர்-ஜெனரல் சொல்லியபடி ஆடத்தலைப் பட்டது. வெல்லஸ்லி பிரபு கவர்னர்-ஜெனர லாயிருந்தபொழுது கௌன்ஸில் மெம்பர்கள் பேருக்குமட்டும் ஆலோசனை கேட்கப்பட்டார் களேயன்றி வாஸ்தவத்தில் அவர்கள் ஆலோச னையை அவர்கேட்டு நடந்ததில்லையென்று தெ ரிகிறது. அவர்முன் ஒரு முக்கியமானவிஷயம் வந்தால், அதை அவர்தாமே தீர்மானித்துநடத் தியபிறகு, கௌன்ஸில் மெம்பர்களுடைய அ பிப்பிராயம் கேட்பது வழக்கமாம். அனேகசம யங்களில் கவர்ன்மெண்டு உத்தரவுகளை அவர் தம்பேராலேயே பிறப்பித்து வந்ததாகத் தெரி கிறது. இதெல்லாம் சட்ட விரோதமான நட படிக்கைகள். ஆனால் அப்பொழுது மெம்பர் ஸ்தானத்துக்கு நியமனம்செய்வதிற் தக்கவர்க ளைத் தெரிந்தெடுக்காமல் யார் மிகவும் உயர்ந்த உத்தியோகத்தி லிருக்கிறாரோ அவரை உயர நியமிப்பது வழக்கமாயிருந்ததனால், சுத்த மந்த மதிகளாயுள்ளவர்கள் கூடத் தமதுமுறைவந்த பொழுது கௌன்ஸில் மெம்பர்களாய் வந்தார் கள். வெல்லஸ்லி பிரபு இந்தியாவை விட்டுப்

போனபின், சட்டத்தில் உத்தேசிக்கப்பட்ட கௌன்ஸில் மெம்பர்கள் கவர்னர் - ஜெனரலுக்கு ஆலோசனைமட்டும்சொல்லிவந்தார்கள். மற்றப்படி அவர்கள் இராச்சிய விஷயத்தில் யாதொரு பொறுப்பும் எடுத்துக்கொள்கிறதில்லை. கவர்ன்மெண்டாருடைய உத்தாவு வேண்டிய விஷயங்களையெல்லாம் அந்தந்த இலாகாக் காரியதரிசி கவர்ன்மெண்டு மெம்பர்களுக்கு அவரவருடைய மேலந்தஸ்துக்கிரமமாக வரிசையாய்க் காட்டிவர அனுப்புவதுவழக்கம். இந்த ஏற்பாட்டுப்படி எல்லாவிஷயங்களும் முதல் முதல் கவர்னர்-ஜெனரல் முன்வைக்கப்பட்டுவந்தது. அவர் தமது அபிப்பிராயத்தைக் குறிப்பிட்டபின் அதுமெம்பர்களில் முதலாயுள்ளவருக்கு வரிசைக் கிரமமாகப்போகும். எல்லாருடைய அபிப்பிராயமும் ஒத்திருக்கும் விஷயங்களைக் காரியதரிசி அவ்வபிப்பிராயத்தை ஒட்டித் தாமே பைசல்செய்து விடுவார். அபிப்பிராயபேதமுள்ளவிஷயங்களை கௌன்ஸில்கூடும்பொழுது மெம்பர்களுடைய ஆலோசனைக்குக் கொண்டு வருவார். விஷயங்களை மேலே சொன்ன வரிசைக் கிரமமாக மெம்பர்கள் பார்வைக்கனுப்பியது இரண்டுவிதத்தில் பிரதிகூலத்துக் கிடமாயிருந்தது: முதலாவது ஒரு விஷயத்தைப் பற்றி நன்றாயறிந்த மெம்பர் யாரோ அவர்

அதைப்பற்றித் தம் அபிப்பிராயத்தை முன்னே சொல்ல முடியாமற்போனது ஒன்று. இரண்டாவது, எல்லாவிஷயங்களைப்பற்றியும் கவர்னர் - ஜெனரலே முதல்முதல் அபிப்பிராயம் சொல்லவேண்டியதாக நேரிட்டது ஒன்று. ஒரு இலாக்கா விஷயத்தைப்பற்றி நன்றாகத் தெரிந்த மெம்பர் கடைசி மெம்பராக விருக்கலாம். அவருடைய அபிப்பிராயத்தை மற்ற மெம்பர்கள் முன்னறியக்கூடுமானால் அது சீக்கிரத்திற் சுலபமாகப் பைசல் செய்து விடக்கூடியவிஷயமாகலாம். அப்படிக்கின்றி அதைப் பற்றி நன்றாயறியாதவர்களெல்லாரும் அவர்கள் அபிப்பிராயத்தைத் தெரிவித்தபிறகு அவ் விஷயத்தைப்பற்றிய விவரங்களெல்லாம் நன்றாயுணர்ந்தவர் தம்முடைய அபிப்பிராயத்தைக் குறிப்பிடவேண்டி வரும்பொழுது அபிப்பிராய பேதத்துக்கு அதிக இடமுண்டாகி கௌன்ஸில் கூடிச்செய்யவேண்டிய வேலை யதிகரிக்கிறது. இந்த ஏற்பாடு, கவர்ன்மெண்டாரால் கவனித்துப் பைசல் ஆகவேண்டிய வேலை அதிகமாகாது மிகவும் கொஞ்சமாயிருந்தால் ஒத்துவருமேயன்றி மற்றப்படி யொத்துவராது. இந்தியா கவர்ன்மெண்டார் வேலை மேன்மேலும் அதிகமாய்ப்பெருகி வரவர இவ்வேற்பாட்டின் அசௌகரியமும் சங்கடமும் அதிகமாக உணரப்

பட்டது. லார்ட் டல்ஹௌஸி கவர்னர்-ஜென ரலாயிருந்தபொழுது அவர் பஞ்சாப் முதலிய அனேக நாடுகளை ஜயித்துச் சேர்த்துக்கொண் டதால் இராஜ்ஜியம் அதிக விஸ்தீரணமடைந்து இந்தியா கவர்ன்மெண்டாரால் கவனிக்கப்பட வேண்டிய விஷயங்கள் மிகவும் ஏராளமாக இரு ந்ததுமன்றி இராச்சிய விஷயங்கள் அதிக சிக்க லுற்று அதைப்பற்றிச் சரியான தீர்மானத்துக் கு வருவது மிகவும் கஷ்டமான வேலையாகவும் முடிந்தது. இத்தோடுகூட அங்கங்கே இருப் புப்பாதைகள் அதிகரித்ததாலும், ஸிவில் துரைத்தனத்தைச் சீர்திருத்த யத்தனித்ததினு லும், வித்தியா இலாகாமுதலான ஜனக்ஷேமத் துக்கடுத்த இலாகாக்கள் ஏற்படுத்தினதினு லும் வேலைகள் மிக ஏராளமாக அதிகரித்துப் போகவே அவ்வளவையும், ஒருவர் தாமாகவே யாவது கௌன்ஸிலோடிருந்து எல்லாரும் ஒரு மித்தாவது செய்துமுடிப்பதுகூடாத காரியமா கப் போய்விட்டது. லார்ட் டல்ஹௌஸி கவர் னர் - ஜெனரல் வேலையை இராஜிநாமா கொ டுக்குமுன் இதைப்பற்றி அவருடைய அதிகார முறையில் மேலே சொன்னபடி கண்டிப்பான அபிப்பிராய மெழுதிவைத்துப்போனார். அவ ருக்குப்பின் கவர்னர்-ஜெனரலாகவந்த லார்ட் கானிங் அவர்கள் சில இலாகாக்களில் துரைத்

தன விஷயங்களைச் சரியாக நடத்துவது சாத்தியமின்றி நின்றுபோகாமல் தடுக்கும்பொருட்டு எல்லாவிஷயங்களையும் கவர்ன்மெண்டார் மொத்த ஆலோசனைக்குக் கொண்டுவந்து பைசல் செய்யும் ஏற்பாட்டை நிறுத்திவிட்டு ஒவ்வொரு 'மெம்பரும்' ஒரு இலாகாவின் மேற்பார்வையைத் தன் வசமாகவைத்துக்கொண்டு பார்த்துவருகிறதென்றும், மிகவும் முக்கியமான விஷயங்களைமட்டும் கவர்னர்-ஜெனரலின் ஆலோசனைக்கோ அல்லது சபையின் மொத்த ஆலோசனைக்கோ கொண்டுவந்தால் போதுமென்றும் ஏற்பாடுசெய்தார். இதுதான் இப்பொழுதுள்ள ஏற்பாட்டின் பிரதம ஆரம்பம். இந்த ஏற்பாடு கானிங் பிரபு காலம் முதற்கொண்டு ஒருவாறு அனுஷ்டானத்திலிருந்து வந்தாலும் இது கௌன்ஸில் மெம்பர்கள் தங்களுக்குள் செய்துகொண்ட அந்தரங்க ஏற்பாடேயன்றிப் பயிரங்கமாய்ச் செய்யப்பட்ட ஏற்பாடல்ல. இந்த ஏற்பாடு பயிரங்கமாக அனுஷ்டானத்துக்கு வந்தது, 1859 - ம் வருஷத்தில் மிஸ்டர் ஜேம்ஸ் உவில்ஸன் அரசிறை சம்பந்தமான விஷயங்களையெல்லாம் தன் பொறுப்பாய்ப் பார்த்துக்கொள்ளும்பொருட்டு கௌன்ஸில் மெம்பராக நியமிக்கப்பட்ட பொழுதென்று சொல்லலாம். அப்பொழுது அவர் அரசிறை

சம்பந்தமான விஷயங்களின் பொறுப்பைத் தான் ஏற்றுக்கொள்வதாகப் பயிரங்கமாகச் சொன்னதை கவர்னர்-ஜெனரலும் மற்ற கௌன்ஸில் மெம்பர்களும் ஒப்புக்கொண்டார்கள். அது முதல் அவருக்குப்பின் வந்தவர்கள் அப்பொறுப்பைப் பயிரங்கமாய் ஏற்றுக்கொண்டுவர, கவர்ன்மெண்டாரும் அதையொத்துக் கொண்டு வந்தார்களானாலும், சட்டப்படி அது செல்லத்தக்கதாயில்லை. 1853 -ம் வருஷத்துச்சட்டத்திலும் அதற்கு முன்செய்த 'ஆக்டு' களிலும் இந்தியாகவர்ன்மெண்டின் நடபடிக்கைகளெல்லாம் கவர்னர் ஜெனரலும் கௌன்ஸில் மெம்பர்களும் சேர்ந்து நடத்தவேண்டியதென்று கண்டிருந்தமையால் இந்த ஏற்பாடு அப்பொழுதிருந்த சட்டநிபந்தனைக்கு ஒத்ததாகவில்லை. 1861-ம் வருஷத்து ஆக்ட்டில் இதற்காகவென்று ஒரு வாக்கியம்சேர்த்து இவ்வேற்பாட்டைச் சட்டசம்மதமானதாகச் செய்தார்கள். 1861 - ம் வருஷத்துச் சட்டத்தில் கவர்னர் - ஜெனரல் அவர்கள் கௌன்ஸிலால் ஆகவேண்டிய வேலைகள் சௌகரியமாய்ப் பைசல் செய்யப்படுவதற்கு ஏற்றதாகத் தோன்றும் ஏற்பாடுகள் செய்ய அவருக்கு அதிகாரம் கொடுக்கவேண்டுமென்றும், அவர் செய்யும் ஏற்பாட்டுப்படி மெம்பர்களால் செய்யப்படும் காரியங்

கள் ஆலோசனை சபையிலுள்ள கவர்னர்- ஜெனரால் அவர்களால் செய்யப்பட்டனவாக மதிக்கப்படுமென்றும் நிபந்தனைகண்டு ஏற்பாடுசெய்தார்கள்.

மேலே சொன்ன சட்ட நிபந்தனையிற்கண்ட ஏற்பாடு வர வர விர்த்தியடைந்து இப்பொழுதுள்ள - ஸ்திதிக்குவந்திருக்கிறது. கவர்னர் - ஜெனரலும் அவருடைய கௌன்ஸில் மெம்பர்களும் முன்போல் எந்தவிஷயத்தையும் ஏகோபித்துச்செய்யவேண்டிய ஒரு சபையாகமட்டுமின்றி அவர்கள் ஒவ்வொருவரும் ஒரு இலாகாத் தலைவராகவிருந்து அந்த இலாகா வேலைகளையெல்லாம் பார்த்துவருகையில், முக்கியமான விஷயங்களைமட்டும் கலந்து யோசிக்கும் மந்திராலோசனை சபையாராக இருக்கிறார்கள். இது அங்கிலேயநாட்டிலும் மற்ற ஐரோப்பிய தேசங்களிலும் துரைத்தனம் நடத்தப்பட்டுவரும் முறையை அனுசரித்த ஏற்பாடாகவிருக்கிறது. அங்கே முதல்மந்திரியாயிருப்பவருக்குப் பதிலாக இங்கே கவர்னர்-ஜெனரலிருக்கிறார். அங்கே முதல் மந்திரிக்கும் மற்ற மந்திரிகளுக்கும் அந்தஸ்து, நிலைமையில் அவ்வளவாக வித்தியாசமில்லாமலிருக்க இந்தியாவில் கவர்னர்- ஜெனரலுடைய அந்தஸ்தும், நிலைமையும், அவருடைய மந்திரிகளுடைய அந்

தஸ்தையும் நிலைமையையும்விட மிக உயர்ந்த தாகவிருக்கிறது ஒன்றே ஒரு முக்கிய வித்தியாசமாயிருக்கிறது. இந்தியா கவர்னமெண்டு மெம்பர்களின் தொழில்விவரம் குறிப்பிட்ட பொழுது துரைத்தன இலாகாப் பிரிவுகளையும் எடுத்துச்சொன்னோம். அதையே பின்னும் திருப்பிச்சொல்லவேண்டுமாயின் கவர்னர் - ஜெனரல் பரதேச சம்பந்தமான விஷயங்களையெல்லாம் தம்முடையசொந்த மேற்பார்வையில் வைத்துக் கொள்கிறார். உள்நாட்டு விஷயங்களெல்லாம் ஸிவில் ஸெர்விஸைச் சேர்ந்த ஒரு கௌன்ஸில் மெம்பர் வசத்திலிருக்கிறது. இவருக்கு உள்நாட்டு மந்திரி* யென்று பேர். அரசிறை, வியாபாரசம்பந்தமான விஷயங்கள் அதற்காக நியமிக்கப்பட்ட அரசிறை மந்திரி அல்லது 'மெம்பர்' வசமாகஒப்பிக்கப்பட்டிருக்கின்றன. இவர் இந்தியா ஸிவில்ஸெர்விஸைச் சேர்ந்தவராக இருந்தாலும் இருக்கலாம்; இல்லாவிட்டாலும் இல்லை. சட்டநிரூபண விஷயங்கள் அதற்காக நியமிக்கப்பட்ட சட்ட நிரூபண மந்திரிவசத்தில் ஒப்பிக்கப்பட்டிருக்கின்றன. இவர் எப்போதும் சீமையிலிருந்து நியமிக்கப்படும் ஒரு பாரிஸ்டராயிருப்பதுவழக்கம். இராணுவம் கப்பற்சைனியம் இவைசம்பந்தமான

* Home Member of Council.

விஷயங்களெல்லாம் இராணுவமந்திரியொருவர் வசமாக விடப்பட்டிருக்கின்றன. இந்தஸ்தானம் 1833-ம் வருஷத்துச் சட்டம் ஏற்பட்டது முதற்கொண்டு இந்தியா இராணுவ உத்தியோகத்தைச்சேர்ந்த ஒருவரால் வகிக்கப்பட்டு வருகிறது வழக்கமாயிருக்கிறது. மராமத்திலாகாவிஷயங்கள் இன்னொரு ஸிவிலியன் மெம்பர் வசத்திலிருந்துவரும். ஆக இந்தியா கவர்ன்மெண்டுக்குப் போகும் துரைத்தன விஷயங்களெல்லாம் இந்த ஆறு இலாகாப் பிரிவுகளுக்குள் அடங்கிப்போகின்றன.

இந்தியா கவர்ன்மெண்டு நடபடிக்கைசம்பந்தமாக உண்டான இன்னொரு மாறுதலைப்பற்றியும் சொல்லவேண்டியிருக்கிறது. ஆதியில் கவர்னர்-ஜெனராலும் கௌன்ஸிலும்சேர்ந்து எல்லா துரைத்தனவிஷயங்களையும் நடத்தவேண்டுமென்று சட்டமிருந்த காலத்தில் கவர்னர்-ஜெனரல் கல்கத்தாவையும் அவருடைய சபையையும்விட்டு வெகு தூரத்திலிருக்கவேண்டியிருந்தபொழுது துரைத்தனவிஷயங்களை நடத்துவது கூடாமையாக இருந்தது. 1793-ம் வருஷம் செய்த பார்லிமெந்துச் சட்டத்தில் இந்தச் சங்கடத்தை நிவர்த்திக்கக், கவர்னர்-ஜெனரல் வேறு இராஜதானிக்கு விஜயமாய்ப் போயிருக்குங்கால் அவர் விஜயம்செய்யும் இரா

ஜதானியின் கவர்ன்மெண்டார் அதிகாரத்தை நிறுத்திவைத்துவிட்டு அந்த இராஜதானி துரைத்தன அதிகாரத்தை கவர்னர் - ஜெனரல் வகிக்கிறதென்றும், அவரில்லாதகாலத்தில் அவருடைய கௌன்ஸில் மெம்பரில் ஒருவரை வங்காளத்திலுள்ளகௌன்ஸிலுக்கு 'ப்ரெஸிடெண்டு' அல்லது அக்கிராசனுதிபதியாக நியமிக்க வேண்டுமென்றும் அப்படி நியமிக்கப்பட்ட 'ப்ரெஸிடெண்டு', கவர்னர் - ஜெனரலதிகாரத்தை வகிக்காமல் ஆலோசனைச் சபையிலுள்ள ஒரு கவர்னருக்குள்ள அதிகாரத்தை வகிப்பாரென்றும் கண்டிருந்தது. இதனுல் கவர்னர் - ஜெனரல் கல்கத்தாவிலில்லாதபொழுது அவருடைய கௌன்ஸிலும் அதன் அக்கிராசனுதிபதி அல்லது 'பிரெஸிடெண்டும்' வங்காளத்துரைத்தனத்தைமட்டும் நடத்திவரலாமென்றும், மற்றப்படி கர்வனர் - ஜெனரலுக்குள்ள அதிகாரத்தைச் செலுத்த அதிகாரமில்லையென்றும் ஏற்பட்டது. இப்படியாக கவர்னர்-ஜெனரல் கல்கத்தாவிலிருந்தால் மற்ற இராஜதானிகளையும் ஒருவாறு மேற்பார்வைசெய்துவர அதிகாரமுள்ள கௌன்ஸில் அவர் கல்கத்தாவிலில்லாதபொழுது வங்காளத்துரைத்தனத்தைமட்டும் நடத்தும் தாழ்ந்த அந்தஸ்துள்ளகௌன்ஸிலாக மாறிப்போக நேரிட்டது. இப்படிப் பல

விதத்திலும் குழப்பத்துக் கிடமாயிருக்கும் ஏற்பாடு 1833-ம் வருஷத்திய சட்டத்தினல் ஒருவாறு நிவர்த்திக்கப்பட்டது. அந்தச்சட்டத்தினல் கவர்னர்-ஜெனரல் இந்தியாவில் எந்தப் பாகத்துக்கு விஜயமாகப்போனலும் சட்ட நிர்மாணம்செய்யும் அதிகாரத்தைத்தவிர மற்றப்படி கௌன்ஸிலோடுகூடவிருந்தால் செலுத்தத்தக்க அதிகாரம் அவ்வளவையும் அவர் தாமே யொருவராகச் செலுத்த அதிகாரம்கொடுத்து வேண்டியபோது தமது சபையோடு சேர்ந்து சட்டம்செய்யலாமென்று ஒரு நிபந்தனை ஏற்படுத்தப்பட்டது. அப்படிப்பட்ட சமயங்களில் கவர்னர்-ஜெனரல் தமது சபைக்கு ஒரு அக்கிராசனதிபதியை நியமித்துத் தம்முடைய அதிகாரத்தைச் செலுத்திவரும்படி ஏற்பாடு செய்யவேண்டும். 1863-ம் வருஷம் வரையில் கவர்னர்-ஜெனரல்கள் அனேகமாய் கல்கத்தாவைவிட்டு வெளியே போயிருக்கவேண்டிய தவசியமாகவிருந்ததால் இவ்வேற்பாடு அதுவரையில் அதிகவிசேஷமாய் உபயோகப்பட்டு வந்தது. கவர்னர்-ஜெனரல் வெளியிலேபோகும் சமயங்களிற் கௌன்ஸிலில் முதல் மெம்பராயிருப்பவரை அக்கிராசனதிபதியாக நியமிப்பது வழக்கமாயிருந்தது. 1861-ம் வருஷத்துச் சட்டத்தில் முதல் மெம்பரே 'ப்ரெஸி

டெண்டாக' வரவேண்டுமென்று சட்டநிபந்தனை ஏற்பட்டது. இப்படி கவர்னர்-ஜெனரல் கல்கத்தாவைவிட்டு வெளியில்போகநேரிட்டகாலங்களில், முதலில் பரதேச இலாகா விஷயங்கள் சம்பந்தமான காரியதரிசியும், இராணுவ இலாகா காரியதரிசியும், பிற்பாடு மராமத்திலாகாக் காரியதரிசியும் கவர்னர்-ஜெனரலோடு கூடப்போவது வழக்கம். அப்போது அவர்களுக்குப் பதிலாகக் கல்கத்தாவிலுள்ள அந்த இலாகா விஷயங்களைப் பார்த்துவர 'ஆக்டிங்' நியமனம்செய்வது வழக்கம். கவர்னர்-ஜெனரல் தன் சொந்தப்பொறுப்பில் காரியங்களை நடத்துவது அவருடைய தைரியத்தையும் சுபாவத்தையும் பொறுத்ததாயிருந்தது. சாதாரண துரைத்தன விஷயங்களை நடத்த இந்தியாவை இரண்டு பாகமாகப் பிரித்துக்கொண்டு, வங்காளம், பம்பாய், சென்னை இந்த இராஜதானிகளின் விஷயங்களை கல்கத்தாவிலுள்ள ப்ரெஸிடெண்டும் கௌன்ஸிலும் பார்த்துவர வட இந்தியாவிலிருந்து வரும் விஷயங்களைக் கவர்னர்-ஜெனரல் பார்த்துவந்தார். சாதாரணவிஷயங்கள் இப்படி நடத்தப்பட்டன. லார்ட் டல்ஹௌஸி, லார்ட் கானிங் இவர்கள் கவர்னர்-ஜெனரலாக விருந்தகாலத்தில் நேர்ந்த அனேகம் முக்கியமான பெரிய இராஜாங்கவிஷ

யங்களைப்பற்றித் தீர்மானிப்பதில் கல்கத்தாவி லிருந்த கவர்னர்-ஜெனரலுடைய கௌன்ஸிலை அவர்கள் ஒன்றும் கேட்கவேயில்லை. கௌன் ஸில் பாடு இப்படியாக, கவர்னர்-ஜெனரல் பாடும் வரவரக் கஷ்டமாகவே முடிந்தது. இலாகாக்கள் வரவரப் பெரிதாகித் துரைத்தன விஷயங்கள் சிக்கலுற்று வரவே, கவர்னர் - ஜெனரல் தனியாகவிருக்கும்பொழுது தாமே அவ்விஷயங்களைப் பைசல் செய்வது கூடா மையாக முடிந்தது. ஆகவே கவர்னர்-ஜென ரல் தலைநகருக்குத் தாம் திரும்பும்வரையில் முக்கிய விஷயங்களெல்லாம் பைசல் செய்யாது போட்டு வைக்கவேண்டியதாக நேரிட்டது. இதனால் துரைத்தன விஷயங்கள் தடைப்பட் டுக் குவிந்துபோய் அதிக அசௌகரியங்களை விளைவித்தன. ஸர் ஜான் லாரேன்ஸ் கவர்னர்-ஜெ னரலாக வந்தபொழுது இந்த ஏற்பாட்டால் நேர்ந்த இடையூறு தாமதங்கள் பொறுக்கமுடி யாமல், அவர் தம்முடைய கௌன்ஸிலையும் கூ ட அழைத்துக்கொண்டு போகவேண்டியிருந் தது. அல்லது தான் தலைநகரைவிட்டுப்போகா மலிருக்கவேண்டியிருந்தது. ரயில்களும்,ரோட் டுகளும், தந்தி தபால் மார்க்கங்களும் அதிக மாகவிருந்ததால் அவர் முன்சொன்ன ஏற்பாட் டை யனுசரித்தார். அதுமுதல் எந்த கவர்

னர்-ஜெனராலும் சொற்பகாலம் மாரிகாலமுதவிற் சுற்றுப்பிரயாணம் செய்வதற்காகவின்றி, மற்றப்படி தம்முடைய கௌன்ஸிலைவிட்டுப் பிரிந்திருந்ததில்லை; பிரிந்திருப்பதும் சாத்தியமாகவில்லை.

மேலே நாம் சொல்லிவந்த பலமாறுதல்களின் வரலாற்றையும் படித்தவர்கள் இந்தியா கவர்ன்மெண்டு எவ்வளவு மாறுபட்டிருக்கிறதென்பதை யுணரத்தவறார்கள். முதலில் கவர்னர்-ஜெனராலுடைய கௌன்ஸில் அவருக்கு ஆலோசனைமட்டும் சொல்வதாயிருந்தது. எல்லாத்துறைத்தன விஷயங்களும் கவர்னர்-ஜெனரல் முன்பாக வந்து அவர் சொல்லும் உத்தரவுப்படி அந்தந்த இலாகாக் காரியதரிசிகள் அவைகளைப் பைசல்செய்து வந்தார்கள். இப்பொழுதோ ஒவ்வொரு மெம்பரும் ஒரு இலாகாவுக்குத் தலைவராயிருந்து அந்த இலாகா சம்பந்தமான விஷயங்களையெல்லாம் அவர் பெரும்பாலும் தன்சொந்தப் பொறுப்பில் பார்த்து நடத்திக்கொண்டு போவதாயிருக்கிறது. கவர்னர்-ஜெனரல் அவர்கள் தாமே ஒரு இலாகாவுக்குத் தலைவராயிருந்து அது சம்பந்தமான விஷயங்களையெல்லாம் தாமாகவே நடத்திவருகிறார். மற்ற இலாகா விஷயங்களை அந்த இலாகாவின் பொறுப்பைவகித்த மெம்பர் தாமாகவே நடத்

திக்கொண்டுபோக அதிகாரம் பெற்றிருந்தாலும், முக்கியமான விஷயங்களைக் கவர்னர்-ஜெனரலுடைய பார்வைக்கு அனுப்ப வேண்டுமென்று விதியிருக்கிறது. இந்த விதிப்படி கவர்னர்-ஜெனரலுக்கனுப்பவேண்டிய விஷயங்கள் இன்னவென்று கண்டிப்பான ஏற்பாடு ஒன்றுமில்லை. அது கவர்னர்-ஜெனரலும் அந்தந்த இலாகா மெம்பரும் ஒருவருக்கொருவர் அந்தரங்கத்தில் ஏதோ இணக்கமாய் ஒத்துப் போவதைப் பொறுத்திருக்கிறது. இப்படி அந்தந்த இலாகாவைக் குறித்த விஷயங்களையெல்லாம் அந்த இலாகாமெம்பர் தானே தன்யுக்தப்படி பைசல்செய்ய அதிகாரம் பெற்றிருந்தாலும், கவர்னர்-ஜெனரலுக்கு அந்த இலாகாவில் நடக்கும் விஷயங்களைப்பற்றித் தமக்கு வேண்டுமென்கிற வரையிற் தெரிந்துகொள்ள வசதியின்றி யிருக்கவில்லை. ஒவ்வொரு இலாகாவின் காரியதரிசியும் வாரத்துக்கு ஒருதரம் கவர்னர்-ஜெனரலிடம் நேரேபோய் அந்தந்த இலாகாவில் நடந்த விஷயங்களைப்பற்றி அவருக்கு விவரஞ்சொல்லி வரவேண்டுமென்றிருக்கிறது. அவர்மூலமாக கவர்னர்-ஜெனரல் மற்ற இலாகாக்கள் ஒவ்வொன்றிலும் நடக்கும் விஷயங்களைத் தெரிந்துகொள்வதோடு, தனக்கு முக்கியமாகத் தோன்றும் எந்த விஷயத்திலா

வது பிரவேசிக்க இஷ்டமிருந்தால், அதைப் பற்றிய தஸ்தாவேஜுகளைத் தனக்கு அனுப்பச்சொல்லி உத்தரவுசெய்யலாம்.

சாதாரணமாக ஒரு இலாகா சம்பந்தமான விஷயங்களெல்லாம் அந்த இலாகாமெம்பரா லேயே பைசல் செய்யப்படும். அவருக்கு முக்கியமாகத் தோன்றும் விஷயங்கள் அவரால் கவர்னர்-ஜெனராலுக்கு அனுப்பப்படும். அப்படி அனுப்பப்பட்ட விஷயத்தைப் பைசல்செய்வதில் கவர்னர்-ஜெனராலுக்கும் அந்த இலாகா மெம்பருக்கும் அபிப்பிராய பேதமுண்டானால், அல்லது கவர்னர்-ஜெனரல் அவர்கள் அது மற்ற மெம்பர்களுடைய ஆலோசனைக்கும் கொண்டுவரவேண்டிய அவ்வளவு முக்கியமானதாக இருக்கிறதென்று நினைத்தால், அவ் விஷயத்தைப்பற்றிய தஸ்தாவேஜுகளெல்லாம் முதலில் எல்லாமெம்பர்களுக்கும் பார்வைக்கனுப்பப்பட்டுப் பிறகு சபையில் ஆலோசனைக்குக் கொண்டுவரப்படும். ஒரு இலாகாவின் மெம்பரும் கவர்னர்-ஜெனராலும் மனதொத்து ஒரு விஷயத்தைப் பைசல்செய்ய இஷ்டப்பட்டால் அதைக் கௌன்ஸில் முன் கொண்டுவராமல் அப்படியே பைசல்செய்துவிடலாம். கவர்னர்-ஜெனரல் கௌன்ஸில்முன் கொண்டுவரவேண்டிய நிமித்தமில்லையென்று ஒரு விஷயத்

தில் அபிப்பிராயப்படும் அந்த இலாகாமெம்பர் அதைக் கௌன்ஸில்முன் கொண்டுவந்து பைசல்செய்வது உசிதமென்று நினைத்தால் அப்படியே அதைக் கௌன்ஸில் முன் ஆலோசனைக்குக் கொண்டுவரும்படி கேட்கச் சட்டப்படி அவருக்குப் பாத்தியமிருக்கிறது. மேலே சொன்ன விதங்களில் எந்த விதமாக ஒரு விஷயம் பைசல் செய்யப்பட்டாலும் அதைப் பற்றிப் பிறக்கும் உத்தரவுகள் 'ஆலோசனை சபையிலுள்ள கவர்னர்-ஜெனரல்' பேராலேயே பிறப்பிக்கப்பட்டு அந்தந்தஇலாகாக்காரியதரிசிகளால் கையெழுத்துச்செய்து வெளியிடப்படும். இது 1861-ம்வருஷத்துச் சட்டத்தில் கண்ட நிபந்தனைக்கு முற்றும் ஒத்ததாயிருக்கிறது. இப்படியாக ஒவ்வொரு இலாகாவிஷயங்களும் பெரும்பான்மையாக அந்தந்த இலாகாப்பொறுப்பை வகித்த மெம்பர் ஒருவராலேயே பைசல் செய்யப்பட்டுவந்தாலும், அவருடைய பேர் வெளிவராது மறைத்துவைக்கப்படுவதால் இந்தியா கவர்ன்மெண்டார் அமுல் செலுத்தும் முறையிலுண்டாயிருக்கும் இப்பெரிய மாறுதலும், இலாகா வாரியாகக் காரியம் நடத்தும் ஏற்பாடு இவ்வளவுதூரத்துக்கு வந்திருக்கிறதும் சாதாரணமாய் ஜனங்களுக்கு நன்றாகத் தெரியாமலிருக்கிறது. இந்தியா

வில்தான் இப்படி-யென்றால் இங்கிலாந்தில் இதைப்பற்றியுள்ள தப்பெண்ணம் இதிலும் பெரிதாக இருக்கிறதாகச் சொல்லப்படுகிறது. அங்கே எல்லாரும் இந்தியா சம்பந்தமான ஒவ்வொருவிஷயமும் கவர்னர்-ஜெனரல் தாமாகவேயாவது தம்முடைய கௌன்ஸிலின் ஒத்தாசையைக்கொண்டாவது நடத்துவதாக நினைத்திருக்கிறார்கள். வாஸ்தவத்தில் பார்லிமெந்தில் பிரஸ்தாபமாகும் அனேக சில்லரைவிஷயங்கள் இங்கே இராஜப்பிரதிநிதிக்கு ஒன்றும் தெரியாமலே "ஆலோசனை சபையிலுள்ள கவர்னர்-ஜெனரல்" பேரால் பைசலாயிருக்குமென்பது திண்ணமென்று 5-வருஷகாலம் இராஜப்பிரதிநிதி கௌன்ஸிலில் ஒரு மெம்பராயிருந்து அனுபவம் பெற்ற* ஒருவரால் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்தியா கவர்ன்மெண்டார் அமுல்செலுத்தும் முறை மேலே சொன்னபடி மாறுபட்டிருப்பதால் கவர்னர்-ஜெனரலுடைய சொந்த அதிகாரம் முன்னிருந்த அவ்வளவாகவின்றிக் குறைந்துபோகக் கௌன்ஸில் மெம்பர்களுடைய அதிகாரம் முன்னைவிட இப்பொழுது மிகவும் விசேஷமாக அதிகரித்திருக்கிறது விளங்கும். கவர்னர்-ஜெனரல் எல்லா விஷயங்களை

* General Sir George Chesney.

யும் தாமேமுதலில் பார்வையிட்டு இன்ன இன்னவிஷயங்களை இவ்விதம் பைசல்செய்யவேண்டுமென்று சொல்லிவந்ததுபோய், இப்பொழுது கௌன்ஸில் மெம்பர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் பொறுப்பாக எடுத்துக்கொண்ட இலாகா சம்பந்தப்பட்ட விஷயங்களையெல்லாம் தாங்களே பெரும்பாலும் பைசல்செய்துகொண்டுபோகிறார்கள். சிலவிஷயங்கள் கௌன்ஸில் முன் போகவேண்டியிருந்தாலும் அவ்விஷயங்களைக் கௌன்ஸிலுடைய ஆலோசனைக்குக்கொண்டுவரும்வேலை அந்தந்த இலாகாமெம்பரைப் பொறுத்ததாக விருப்பதால் அதில் அவர்களுடைய அபிப்பிராயம் அதிகமாய்ச்செல்ல இடமுண்டு. இப்படி இராஜப்பிரதிநிதியவர்களுடைய சொந்த அதிகாரத்தைக் குறைத்துக் கௌன்ஸில்மெம்பர்களுடையபிரத்தியேக அதிகாரத்தை அதிகப்படுத்தவேண்டியது துரைத்தன காரியங்கள் அளவுகடந்து பெருகிவிட்டதினால் இன்றியமையாததாகமுடிந்தது. இதனால் இராஜப்பிரதிநிதிக்குச் செல்வாக்கில்லையென்று சொல்லக்கூடாது. அவருடைய அந்தஸ்தினாலும், நிலைமையினாலும், இங்கிலாந்திலுள்ள மஹாராணிமந்திரிகளுடன் நெருங்கிப் பழகினவராயிருப்பதோடு இந்தியாவிலிருந்தும் அவர்களோடு தந்தி தபால் மூலமாகத் தினந்தோறும்

கலந்துபேசி நெருங்கிப்பழகுவதாலும், இராஜப் பிரதிநிதியாகவிருக்கும் முறையில் அவருக்குள்ள விசேஷ கௌரதை சுதந்தரங்கள் இவைகளாலும், அவர் எப்போதும் அதிகச் செல்வாக்குடையவராகவே யிருக்கிறார். அச்செல்வாக்கை உபயோகிக்கமட்டும் அவரிடத்தில் போதுமான திடசித்தமும் மனவுறுதியும் இருக்க வேண்டும். இராஜப் பிரதிநிதியென்கிற பேர் சாதாரணமாக உபயோகிக்கப்பட்டு வந்தாலும் அது பார்லிமெந்துச் சட்டத்தில் எங்கும் காணப்படவில்லை. 1858-ம் வருஷம் மஹாராணியவர்கள் இந்தியா கவர்ன்மெண்டை நேரில் ஏற்றுக்கொண்டபொழுது அவர் கிருபைகூர்ந்து பிரசுரித்த விளம்பரப் பத்திரிகையில் 'இராஜப் பிரதிநிதி' யென்கிற பட்டப்பெயர் முதல்முதல் உபயோகிக்கப்பட்டதாகத் தெரிய வருகிறது. அதுமுதல் அப் பட்டப்பெயர் சாதாரணமாக வழங்கிவந்தாலும் சட்டப்படி வழங்கும் கடிதங்களில் கவர்னர் - ஜெனரல் என்னும் பெயரே இன்றைக்கும் வழங்கிவரப்படுகிறது.

---

அடுத்தபக்கத்தில் விளங்கும் படம் கல்கத்தாவில் இராஜப் பிரதிநிதியவர்களுடைய வாசஸ்தானமாகிய 'கவர்ன்மெண்ட் அவுஸ்' என்பதைக் காட்டுகிறது.



[Government House, Calcutta.]

[கல்கத்தாவிலுள்ள கவர்ன்மெண்ட் ஆபிஸ்.



The India Office, London] [லண்டனிலுள்ள இந்தியா ஆபீஸ்.

## "இந்தியா ஆபீஸ்,"—
## 1. அதன் உற்பத்தி விவரம்.



பக்கத்தில் விளங்கும் படம், லண்டனிலுள்ள "இந்தியா ஆபீஸ்" என்னும் கட்டடத்தைக் காட்டுகிறது. அது மாக்ஷிமை தங்கிய மஹாராணியவர்களுடைய மந்திரிகள் வாசஞ் செய்து ராஜாங்க காரியங்களை நடத்துவதற்காகப் பார்லிமெந்து சபைக்கட்டடத்துக்குச் சமீபத்தில் நூதனமாகக் கட்டின பெரிய கட்டட வரிசைகளில் ஒரு கோணத்திலிருக்கிறது. மஹாராணியாரின் முதல்மந்திரியின் அரண்மனையும் அவருடைய ஆபீஸ் கட்டடமும் 'டேளனிங்தெரு'ப்பக்கத்திலிருக்கின்றது. அத் தெருவிலுள்ள வாசல்வழியாக உள்ளேநுழைந்தால் ஒரு பக்கத்தில் உள்நாட்டு மந்திரி, குடியேற்றநாட்டு மந்திரி இவர்களுடைய ஆபீஸ் கட்டடங்களிருக்கின்றன. மற்றொருபக்கத்தில் பரதேச விஷயங்களை மேற்பார்வை செய்யும் மந்திரியின் 'ஆபீஸ்' இருக்கின்றது. உள்ளே காணும் சச்சவுக்கமான முற்றத்தின் எதிர்ப் பக்கத்தில் "இந்தியா ஆபீஸ்" கட்டடமிருக்கின்றது. 'இந்தியா ஆபீஸ்'கட்டடத்தின் ஒரு பக்கம் 'ஸெண்ட் ஜேம்ஸ் பார்க்'என்னும் சிங்காரத்தோட்டத்தை எதிட்டுப் பார்த்துக்கொண்

டு அதன் ஒரு பக்கத்திலிருக்கிறது. இந்தப் பாரிக்கட்டடத்திலிருந்து இந்தியா துரைத்தன விஷயங்களையெல்லாம் மேற்பார்வை செய்து நடத்திவரும் அதிகாரிக்கு மஹாராணியவர்களின் இந்தியாமந்திரி யென்று பேர். அவர் மந்திராலோசனை சபையைச்* சேர்ந்த மந்திரிகளில் ஒருவர். அவருக்கு இங்கிலீஷில் "Secretary of State for India"—இந்தியாவுக்கான ராஜாங்க காரியதரிசி, அல்லது "இந்தியா செக்ரிடெரி" யென்று பெயர். மிகவும் முக்கியமான விஷயங்களில் மந்திராலோசனைச் சபையார் தீர்மானத்துக்குட்பட்டு இந்தியா துரைத்தன விஷயங்களை நடத்திவரும் முக்கிய அதிகாரியிவரே. இவருக்கு ஆலோசனைசொல்ல "இந்தியா கௌன்ஸில்" அல்லது இந்தியா மந்திரசபை என்று இந்தியாவில் உத்தியோகம் செய்து அனுபவம் பெற்ற பழைய உத்தியோகஸ்தர்கள்சபையொன்று இருக்கின்றது. அச்சபைக்கு 15-மெம்பர்களிருக்கவேண்டுமென்றிருந்து சிலவருஷங்களுக்கு முன் அத்தொகையைச் சமயம் நேர்ந்தபொழுது 10-வரையில் குறைத்துப் போடலாமென்று செய்த சட்டத்தினால், இப்பொழுது 12 - பேர்களிருக்கிறார்கள். இந்தியா மந்திரிக்கு வருஷம் 5,000 பவுன்

* Cabinet.

சம்பளம். அவருடைய கௌன்ஸில் மெம்பர் களுக்கு வருஷம் 1,200 பவுன் சம்பளம். இவர் களையன்றி (Under-Secretary) உபகாரியதரிசிகளிருவரும் 'டிபார்ட்டுமெண்டு செக்ரிடெரிகள்' பலரும், ஏராளமான ஆபீஸ் சிப்பந்திகளுமிருக்கிறார்கள். இவர்களுடைய சம்பளங்கள் மற்றச்செலவுகள் எல்லாம் இந்தியா அரசிறை வருமானத்திலிருந்தே கொடுக்கப்பட்டு வருகிறது. இந்த 'இந்தியா ஆபீஸ்' கட்டடத்துக்குப்பிடித்த செலவுகூட இந்தியா அரசிறை வருமானத்திலிருந்தே கொடுக்கப்பட்டது.

இந்தியா 1858-ம் வருஷம் மஹாராணியாரின் ஆளுகைக்குள்வந்தபிறகுதான் இந்த ஏற்பாடுகளெல்லாம் செய்யப்பட்டன. அதற்கு முன் இந்தியா கம்பனி இராஜ்ஜியமாயிருந்தபொழுது ஈஸ்திந்தியா கம்பனியாரின் விசாரணைக் கர்த்தர்களே முதலில் யாதொரு தங்கு தடையின்றியும், பிறகு கவர்ன்மெண்டார் ஏற்படுத்திய மேற்பார்வைக்குட்பட்டும் இந்தியா துரைத்தன விஷயங்களை லண்டனிலிருந்து மேல் விசாரணை செய்து வந்தார்கள். முதலில் அவர்கள் வியாபாரவிஷயங்கள்மட்டும் மேற்பார்வை செய்துவந்தபொழுது லண்டனிலுள்ள அவர்களுடைய தலைமைஸ்தானத்துக்கு "ஈஸ்திந்தியா

அவுஸ்"† அல்லது வர்த்தகவிசாரணைச்சாலை என்று பேராயிருந்தது. பிறகு இந்தியாவில் நாடுநகரங்கள் கிடைத்து துரைத்தன அதிகாரமும் பெற்றபின் லண்டனிலிருந்து அவர்கள் மேற்பார்வை செய்துவந்த தலைமைஸ்தானத்துக்கு "இந்தியா ஆபீஸ்" என்னும் பேர் வந்தது. அந்தப்பெயரே நாளது வரையில் தரித்து நிற்கிறது. "இந்தியா ஆபீஸ்" என்ற பேர் முதலில் இடத்தைக்குறிப்பதாயிருந்து பிறகு அங்கிருந்து மேல் விசாரணை செய்து அதிகாரம் செலுத்தும் அதிகாரிகளைக்குறிப்பதாகி இப்பொழுது அது பின்சொன்ன அர்த்தத்திலே சாதாரணமாக வழங்கிவருகிறது. ஆகையால் இங்கு "இந்தியா ஆபீஸ்" என்றால் இந்தியா "இராச்சிய விஷயங்களை லண்டனிலிருந்து மேல் விசாரணை செய்துவரும் அதிகாரம் செலுத்துவோர்" என்று அர்த்தம் செய்துகொள்ளவேண்டியது. இந்தியாவைச் சீமையிலிருந்து ஆளும் அதிகாரிகள் இந்த "இந்தியா ஆபீஸ்"காரர்களே. இந்த அதிகாரம் ஆதியில் கம்பனியாரின் விசாரணைக் கர்த்தர்களால் செலுத்தப்பட்டுப் பிறகு பல மாறுபாடுகளுக்குட்பட்டுக் கடைசியில் இப்பொழுதிருக்கும் ஸ்திதிக்குவந்தவிவரம், இந்தியா என்னமாக ஆளப்படுகிறது என்று அறிய வி

† East India House.

ரும்புவோர் அவசியம் தெரிந்துகொள்ளவேண்டியதாயிருப்பதால் அதன் வரலாற்றைச் சுருக்கமாய் எடுத்துச்சொல்லி விளங்கவைப்போம்.

ஈஸ்திந்தியா கம்பனியார் 1601-ம் வருஷத்தில் எலிஜபேத் அரசியிடம் முதல் முதல் அதிகாரப்பத்திரம் பெற்று வர்த்தகம் செய்ய ஏற்பட்டார்கள். இவர்கள் வரவர வியாபாரத்தில் விர்த்தியடைந்து வந்ததன்றி இந்தியாவில் எங்கும் உள்நாட்டுமன்னர்கள் சண்டைசச்சரவுப்பட்டுக்கொண்டு துர்ப்பலப்பட்டிருந்ததால் நாட்டில் செல்வாக்கும் அதிகாரமும் பெற்றுப் பலத்த கையாளுர்கள். இவர்கள் செல்வாக்கும் அதிகாரமும் விர்த்தியாக ஆகச் சுதந்தரமும் அதிகமாகப்பெற்றுக் கடைசியில் நாடு நகரங்களைக் கட்டியாளவும் சைனியங்கள் சேர்த்துப் போர் முதலானது நடத்தவும் அதிகாரம் பெற்ருர்கள். இப்படி வரவர மிகுந்த அதிகாரம் பெற்று வியாபாரஞ்செய்யும்வர்த்தகர்களாய் மட்டுமென்றி நாடுகளையாளும் அதிகாரிகளாகவும் வந்தபின் கம்பனியாருத்தியோகஸ்தர்கள் இந்தியாவில் செய்த அக்கிரமங்கள் பார்லிமெந்து சபைக்கு எட்ட, அவர்கள் கம்பனியார் விஷயங்களிற் பிரவேசித்து உண்மையை விசாரித்துக் கடைசியில் இந்தியாவிலுள்ள கம்பனியாருக்காதீனமான நாடுகளின் துரைத்தன காரி

யங்கள் சீராய் நடத்திவரப்படுவதற்காக கவர்னர்-ஜெனரல் என்று ஒருவரை நியமித்து இந்தியாவில் கம்பனியாரின் துரைத்தன விஷயங்களெல்லாம் அவரும் 'சுப்ரீம் கௌன்ஸில்' மெம்பர்களுமாகச்சேர்ந்து நடத்திவரவேண்டுமென்று ஏற்பாடுசெய்து 1773 - ம் வருஷத்தில் ஒரு சட்டம் செய்தார்கள். இந்தச்சட்டத்தினால் இந்தியாவில் துரைத்தன காரியங்களை நடத்த விசேஷ ஏற்பாடு செய்யப்பட்டபோதிலும் கம்பனியார் லண்டனிலிருந்து மேல்விசாரணை செய்து வந்த அதிகாரம் இதனால் எவ்விதத்திலும் பாதிக்கப்படவில்லை. அந்த அதிகாரம் எப்போதும்போலக் கம்பனியாரின் விசாரணைக் கர்த்தர்களாகிய "கோர்ட் ஆவ் டைரெக்டர்கள்" என்னும் மேல்விசாரணைச் சங்கத்தாரால் எவ்வித இடையூறுக்கு மிடமின்றிச் செலுத்தப்பட்டுவந்தது. இவர்கள் இப்படித் தங்கு தடையின்றி அதிகாரம்செலுத்திவந்தது 1784-ம் வருஷம் வரையில் நடந்தது. அப்பொழுது பார்லிமெண்டார் இவர்கள் விஷயத்தில் பிரவேசித்து 'கோர்ட் ஆவ் டைரெக்டர்கள்" செய்வதை மேற்பார்வைசெய்து அவர்களை ஒருவிதக் கட்டுப்பாட்டுக் குட்படுத்தவேண்டுமென்று தீர்மானித்து அவர்களுக்குமேல் "போர்ட் ஆவ் கன்ட்ரோல்" அல்லது 'ஆளுகைச்சபை' என்று ஒரு

மேற்பார்வைச் சங்கமேற்படுத்த விரும்பி அந்தப்படி பார்லிமெந்து சட்டமொன்று செய்தார்கள். இந்த மேற்பார்வைச் சங்கத்துக்கு 6-மெம்பர்களிருக்கவேண்டுமென்றும், அந்த 6-மெம்பர்களில் மூன்றுமெம்பர்கள் அப்பொழுதிருந்த இரண்டு 'ஸ்டேட் செக்ரிடெரிகள்' அல்லது ராஜாங்க மந்திரிகளும் "லார்ட் சான்ஸெலரு" மாகவிருக்கவேண்டுமென்றும், மற்ற மூன்று பேர்கள் "ப்ரிவிகௌன்ஸில் மெம்பர்கள்" என்னும் அந்தரங்காலோசனைச் சபையிலிருந்து அதற்காகப் பிரத்தியேகமாக நியமிக்கப்பட்டவர்களாய் இருக்கவேண்டுமென்றும், மேற்பார்வைச் சங்கத்தின் அதிகாரத்தைச் செலுத்த இந்த 6-பேர்களில் மூன்றுபேர்கள் சேர்ந்தாற் போதுமென்றும், இப்படி மெம்பர்களாக நியமிக்கப்படும் கமிஷனர்களுக்குரிய சம்பளம் இந்தியா வருமானத்திலிருந்து கொடுக்கப்படவேண்டுமென்றும், லார்ட் சான்ஸெலரும் இரண்டு இராஜாங்க மந்திரிகளும் இல்லாதபோது மற்ற கமிஷனர்களில் பிரதம ஸ்தானத்திலுள்ள கமிஷனர் அக்கிராசனாதிபதி ஸ்தானத்தை வகிக்கத் தக்கவரென்றும், இந்தச் சங்கத்து கமிஷனர்களெல்லாம் பார்லிமெந்து சபையில் மெம்பர்களாக உட்காரலாமென்றும் ஏற்பாடு செய்தார்கள். இந்த மேற்பார்வைச் சங்கத்து நடப

டிக்கைகளெல்லாம் வாஸ்தவத்தில் உத்தியோக ஸ்தரல்லாத மற்றமூன்று கமிஷனர்களாலேயே முற்றும் பார்க்கப்பட்டுவந்தது. இவர்களுடைய நடபடிக்கைகளை மந்திராலோசனைச் சபையாருடைய அதிகாரத்துக்குட்பட்டதாகக் கொண்டுவரவேண்டுமென்று லார்ட்சான்செலரையும், அப்பொழுதிருந்த இரண்டு இராஜாங்கமந்திரிகளையும் அந்த மேற்பார்வைச்சங்கத்து மெம்பர்களாகப் போட்டார்கள். இந்த ஏற்பாடு சில மாறுபாடுகளுடன் 1858-ம் வருஷம் வரையில் நடந்துவந்தது. அப்பொழுது 1857 - ம் வருஷத்தில் நடந்த பெரியகலகத்தின் பயனாக ஈஸ்திந்தியா கம்பனியே ஒழிந்துபோய் இந்தியா இராச்சியம் மாக்ஷிமைதங்கிய மஹாராணியார் அவர்களுடைய நேராளுகைக்குள்ளாக வந்தது. அந்த வருஷத்தில் இதற்காகச் செய்யப்பட்ட சட்டம் பார்லிமெந்து சபையில் ஸ்திரமாகி 1858-ம் வருஷம் ஆகஸ்டுமீ 2௳. மஹாராணியார் அவர்களுடைய அங்கீகாரம் பெற்றது. 1858-ம் வருஷம் ஸெப்டம்பர்மீ 1௳ மாக்ஷிமைதங்கிய விக்டோரியா மஹாராணியவர்கள் இந்தியாவுக்கரசியாக வந்தனர். அன்றைக்கே ஈஸ்திந்தியா கம்பனி யென்கிற பேரும்மறைந்து மண்ணிற்கிரையாய்ப் போயிற்று. இந்த 1858-ம் வருஷத்துச் சட்டத்தினுல்தான்

'இந்தியா காரியதரிசி' யென்கிற உத்யோகமும் 'இந்தியா கௌன்ஸில்' என்கிற சபையும் முதல் முதல் ஏற்படுத்தப்பட்டது.

இந்த நூதன ஏற்பாட்டைப்பற்றிச் சொல்லுமுன் "போர்ட் ஆவ் கன்ட்ரோல்" என்னும் மேற்பார்வைச் சங்கமிருந்த காலத்தில் இந்தியா துரைத்தன விஷயங்கள் லண்டனில் மேற்பார்வைசெய்து நடத்தப்பட்டுவந்த வைபவத்தைப்பற்றிக் கொஞ்சம் சொல்வது உசிதமாயிருக்கும்.

'போர்ட் ஆவ் கன்ட்ரோல்' என்னும் மேற்பார்வைச் சங்கம் 1784-ம் வருஷத்தில் செய்யப்பட்ட பார்லிமெந்துச் சட்டத்தினால் உண்டுபண்ணப்பட்டதென்று சொன்னோம். அந்தச் சட்டத்திற் கண்ட நிபந்தனைகள் 1793-ம் வருஷத்தில் செய்யப்பட்ட ஒரு பார்லிமெந்துச் சட்டத்தினால் ஒருவாறு மாற்றப்பட்டன. 1793-ம் வருஷத்துச் சட்டப்படி 'போர்ட் ஆவ் கன்ட்ரோல்' ஏற்படுத்துவதற்கான அதிகாரப் பத்திரத்தில் குறிக்கப்பட்ட முதல் கமிஷனரே போர்டு ப்ரெஸிடெண்டாவாரென்றும், 'ப்ரிவிகௌன்ஸில் மெம்பர்கள்' அல்லாதவர்களிலிருந்து இரண்டு கமிஷனர்கள் தெரிந்தெடுத்து நியமிக்கப்படலாமென்றும், போர்டுசெக்ரிடெரி பார்லிமெந்துசபை மெம்பராகவிருக்கலாமென்

றும் ஏற்பாடுசெய்யப்பட்டது. இந்த மாறு பாடுசெய்யப்பட்டபின் 'போர்டுமெம்பர்கள்' ஒன்று சேர்ந்து நடபடிக்கை நடத்துவது பேருக்குமட்டு மிருந்ததேயன்றிக் காரியத்தில் அப்படியொன்றுமில்லே. 'போர்டு ப்ரெஸிடெண்டும்' அவருடைய காரியதரிசியுமே எல்லாக்காரியங்களையும் வாஸ்தவத்தில் நடத்தி வந்தார்கள். 1833-ம் வருஷத்தில் செய்த இந்தியாவைக் குறித்த பார்லிமெந்து சட்டத்தில் இந்தபோர்டுக்கு நியமிக்கப்படுகிறவர்கள் ப்ரிவிகௌன்ஸில் மெம்பர்களாக விருக்கவேண்டுமென்கிற நிபந்தனையையே முற்றும் ஒழித்துவிட்டு, கமிஷனர்கள் இத்தனைபேர்களிருக்கவேண்டுமென்கிற வரையறையும் நீக்கிவிடப்பட்டது. மாக்ஷிமை தங்கிய அரசர் தகுதியானவரென்று கருதி நியமிக்கிறவர்கள் இந்தியாவிஷயங்களை மேற்பார்வைசெய்து வருவதற்கான கமிஷனர்களாவார்களென்று மட்டும் அந்தச்சட்டத்திற் காணப்பட்டிருந்தது. இந்தச் சட்டம் ஏற்பட்ட பிறகு கமிஷனர்கள் தொகை ஆறாகவிருந்தது நாலாகவும், நாலாகவிருந்தது பிறகு இரண்டாகவும் குறைக்கப்பட்டது. 1841-ம் வருஷத்தில் இருவர் நியமிக்கப்பட்டுவந்ததும் போய், 'போர்ட் ஆவ் கன்ட்ரோலின் ப்ரெஸிடெண்ட்' ஒருவர் மட்டுமே நியமிக்கப்பட்டார். அந்தவருஷத்துக்

குப் பின் 'போர்ட்மெம்பர்,' 'ப்ரெஸிடெண்ட்' எல்லாம் ஒருவரே. பேர்மட்டும் பலர் கூடின சங்கம் என்னும் பொருள்பட 'போர்ட் ஆவ் கன்ட்ரோல்' அல்லது ஆளுகைச்சபை என்றும், அதற்கு நியமிக்கப்பட்ட ஒரே கமிஷனருக்கு 'போர்ட் ஆவ் கன்ட்ரோலின் ப்ரெஸிடெண்டு' என்றும் வழங்கிவந்தது. வாஸ்தவத்தில் அந்த போர்டாருடைய அதிகாரங்களைச் செலுத்த நியமிக்கப்பட்டு அவ்வதிகாரங்களைச் செலுத்தி வந்தவர் ஒருவரே. இப்படி வாஸ்தவத்தில் ஒரே உத்தியோகஸ்தர் இருந்துவந்தாலும் கடைசி வரையில் பேர்மட்டும் 'போர்ட்' அல்லது 'சபை' என்கிற கூட்டப்பெயரே வழங்கிவந்தது.

இதுவரையில் 'போர்ட் ஆவ் கன்ட்ரோல்' ஏற்பட்டது முதல் அது 1858-ம் வருஷத்தில் நிவர்த்திக்கப்பட்டது வரையில் அதன் அமைப்பில் உண்டான மாறுபாடுகளை யெடுத்துச் சொன்னோம். இனி அவர்கள் அமுல் செலுத்திவந்த விதத்தைப்பற்றிக் கொஞ்சம் விவரமாய் எழுதுவோம். 1784-ம் வருஷத்தில் 'ஆளுகைச் சபை' * ஏற்பட்டபோது அதே சட்டத்தில் அவர் கம்பனியார் அதிகாரஞ் செலுத்துவதைச் சரியாக மேற்பார்வை செய்துவருவது சாத்தியமாகும்படி, ஈஸ்திந்தியா கம்பனியாரின் தஸ்தாவேஜிகள் கடிதப்போக்குவரத்

* Board of Control.

துகள் இவைகளெல்லாம் அவர்களுக்குமுற்றும் கிடைக்கும்படி ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. 'கோர்ட் ஆவ் டைரெக்டர்கள்' இந்தியாவுக் கனுப்பும் உத்தரவுகள் கடிதங்கள் எல்லாவற்றிற்கும் அவை அனுப்பிய 8 தினங்களுக்குள் 'போர்ட் ஆவ் கன்ட்ரோலுக்கு' அவற்றின் நகல்களை அனுப்பிவைக்க வேண்டுமென்றும் அப்படியே இந்தியாவிலிருந்துவரும் கடிதங்களுக்கும் அவை வந்தவுடன் நகல்கள் எடுத்து அனுப்பவேண்டுமென்றும் திட்டம் செய்யப்பட்டிருந்தது. 'கோர்ட் ஆவ் டைரெக்டர்கள்' இந்தியாவுக்கு அனுப்பும் எந்த உத்தரவையும் முன்னாடி 'போர்ட் ஆவ் கன்ட்ரோலுக்கு' அனுப்பி அவர்களுடைய அங்கீகாரம் கிடைத்த பின்னே அந்த உத்தரவை இந்தியாவுக்கு அனுப்பவேண்டும். 'போர்ட் ஆவ் கன்ட்ரோல்' சங்கத்தார் தங்களுடைய அங்கீகாரத்துக்கு அனுப்பப்படும் கடிதங்கள் உத்தரவுகளைத் தங்களுக்கு யுக்தமாகத்தோன்றிய படி திருத்தலாம், மாற்றலாம், அல்லது முழுவதையும் அடித்துவிட்டு முற்றும் நூதனமாக அவ்வுத்தரவை எழுதச் சொல்லலாம். அவர்களால் திருத்தப்பட்ட அல்லது நூதனமாக எழுதச் சொல்லப்பட்ட உத்தரவை கோர்ட் ஆவ் டைரெக்டர்கள்' அந்த போர

டார் அபிப்பிராயப்படி திருத்தி இந்தியாவுக்கு அனுப்பவேண்டியது நிர்ப்பந்தம். அவர்கள் 14-நாள் கெடுவுக்குள் அப்படிச் செய்யத்தவறினால் போர்டார் தாங்களே தங்களபிப்பிராயப்படி நூதனமான உத்தரவு அல்லது கடிதமெழுதி 'கோர்ட் ஆவ் டைரெக்டர்களுக்கு' அனுப்பலாம். அந்த உத்தரவு அல்லது கடிதத்தைக் 'கோர்ட் ஆவ் டைரெக்டர்கள்' தாங்கள் சொந்தத்தில் தயார் செய்தது போலவே மதித்து தங்களிடமிருந்து வருவதாக அனுப்பவேண்டியது நிர்ப்பந்தம். போர்டாருக்கு இரகசியமான விஷயங்களை நடத்த 'கோர்ட் ஆவ் டைரெக்டர்களில்' இரண்டு மூன்று பேர்கள் சேர்ந்த 'இரகசிய கமிட்டி' ஒன்று ஏற்பட்டிருந்தது. இவர்கள் இந்தியாவிலிருந்து வரும் 'இரகசிய' விஷயங்கள் எல்லாவற்றையும் உடைத்து தாக்கல் செய்துகொண்டு மற்ற டைரெக்டர்களுக்குத் தெரிவிக்காமல் அவைகளை 'போர்ட் ஆவ் கன்ட்ரோலுக்கு' அனுப்பி வைத்து வந்தார்கள். போர்டார் இந்தியாவுக்கு இரகசியமான உத்தரவுகள் ஏதாவது அனுப்பவேண்டியிருந்தால் அவற்றை இந்த இரகசிய கமிட்டியார் மூலமாக அனுப்பிவைப்பார்கள். இப்படி அனுப்பப்பட்ட விஷயங்கள் இந்த இரகசிய கமிட்டி மெம்பர்களாகிய அக்கி

ராசனுதிபதி, உதவி அக்கிராசனுதிபதி யிவர்களைத்தவிர மற்ற டைரெக்டர்கள் யாருக்கும் தெரிய வழியில்லை. இப்படி இந்தியா விஷயங்களை மேற்பார்வை செய்துவர 'போர்ட் ஆவ் கன்ட்ரோல்' என்னும் சங்கத்துக்குப் பூரண அதிகாரமிருந்தும் 'கோர்ட் ஆவ் டைரெக்டர்கள்' மூலமாயன்றி அவர்கள் நேரில் இந்தியா கவர்ன்மெண்டோடு கடிதப் போக்கு வரத்து வைத்துக்கொள்ளக் கூடாதென்கிற ஏற்பாடடால், ஜனங்களுக்கு இவர்கள் உள்ளிருந்து அதிகாரஞ் செலுத்துவது தெரியாமல், எல்லா அதிகாரமும் 'கோர்ட் ஆவ் டைரெக்டர்களாலே' செலுத்தப்பட்டு வருகிறதென்றும், எல்லா உத்தரவுகளுக்கும் அவர்களே காரணஸ்தர்களென்றும் ஒருவித அபிப்பிராயம் எங்கும் சகஜமாய்ப் பரவிவந்தது. சுமார் 75-வருஷகாலத்துக்கு எல்லாமேற்பார்வை அதிகாரமும் விசேஷமாய் 'போர்டாராலே' செலுத்தப்பட்டு வந்தபோதிலும் அவர்கள் பேர் எந்த உத்தரவு அல்லது கடிதத்திலும் காணப்படாமையால் வாஸ்தவத்தில் அவர்கள் செய்த உத்தரவுகளுக்குக்கூட 'கோர்ட் ஆவ் டைரெக்டர்களே' காரணஸ்தர்களாக எண்ணி அதனுலுண்டான பழிபாவங்களுக்கும் அவர்களே பாத்திரராகக் கொள்ளப்பட்டார்கள். 'இரகசிய கமிட்

டி' யேற்பாட்டினால் 'கோர்ட் ஆவ் டைரெக்டர்கள்' அறியாமலே அனேக பிரமாதமான விஷயங்கள் நடந்து வந்தன. அவற்றிற்கும் பாபம் அவர்களே உத்தரவாதிகளாகக் கொள்ளப்பட்டார்கள். உண்மையில், நடந்த விஷயம் மற்ற ஜனங்களுக்குத் தெரிந்தபோதே அவர்களுக்கும் தெரியவந்திருக்கின்றன. உதாரணமாக 1838-ம் வருஷம் ஆப்கானிஸ்தான் மீது படையெடுத்துச்சென்றது 'போர்ட் ப்ரெஸிடெண்டு' முறையில் 'ஸர் ஜான் ஹாப்ஹவுஸ்' அவர்கள் செய்த உத்தரவை 'இரகசிய கமிட்டியார்' தங்களதுபோல் இந்தியாவுக்கனுப்பினதன்றி வேறல்ல. இந்த உத்தரவினால் விளைந்த அநர்த்தத்துக்கெல்லாம் 'கோர்ட் ஆவ் டைரெக்டர்களே' உத்தரவாதிகளாக எண்ணப்பட்டார்கள். கடைசியில் பார்லிமெந்து சபைக் கமிட்டியார் செய்த விசாரணையில் 'ஸர் ஜான் ஹாப்ஹவுஸ்' அவர்களே சாக்ஷியம் சொன்னபோது, இது தன்னுடைய உத்தரவால் நடந்ததென்று சொன்னார். அவர் சொன்னது அப்பொழுது ஜனங்களுக்குள் அதிக ஆச்சரியத்தையுண்டுபண்ணிற்று.

'போர்டு ப்ரெஸிடெண்டு' வேலைக்கு எப்போதும் மந்திராலோசனை சபையைச்சேர்ந்த மந்திரியொருவரே நியமிக்கப்பட்டுவந்தபடியால்

அவர் 'போர்ட் ஆவ் கன்ட்ரோல்' என்கிற வெளி வேஷப்பேரைக்கொண்டு இந்தியா விஷயங்களை யெல்லாம் நடத்துவதற்கான ஸர்வாதிகாரத்தை யும் தாமே செலுத்திவந்தாரென்பது மேலே எடுத்துக் காட்டிய விவரங்களால் தெரியவரு மே. அவர் என்னதான் மேலதிகாரமுள்ளவ ராயிருப்பினும், அவர் தாமாக ஒன்றைச் செய்ய யத்தனிக்கவாவது, இந்தியாவிலுள்ள உத்தி யோகஸ்தர்களுக்கு அதிக சம்பளம் இனும் அல்லது வெகுமதி கொடுக்கவாவது அவருக்கு அதிகாரமில்லை. எதுவும் 'கோர்ட் ஆவ் டை ரெக்டர்கள்' பிரேரேபணையின்பேரில் அது விஷ யத்தைப்பார்லிமெந்து சபைக்கு அறிக்கை செய்துவிட்டு அப்புறம்தான் செய்யவேண் டும். ஈஸ்திந்தியா கம்பனியார் முதலில் ஈஸ் திந்தியாவிலும் கீழ்த்திசையிலும் வியாபாரம் செய்யும் பாத்தியதையை ஏகபோகமாக அனு பவித்துவந்தார்கள். 1813-ம் வருஷத்தில் சீனு முதலிய கீழ்த்தேசங்களில் வியாபாரம் செய்வதற்கிருந்த சுதந்தரம் தவிர, மற்றப்படி இந்தியாவில் வியாபாரம் செய்வதற்கிருந்த சு தந்தரமெல்லாம் போய்விட்டது. 1833-ம் வருஷத்தில் வியாபாரம் செய்வதே கூடாதென்று தடுத்துவிடப்பட்டார்கள். வியாபாரமெல் லாம் போனபிறகு இந்தியாவிலுள்ள எல்லா உத்

தியோகங்களுக்கும் நியமனம் செய்யும் சுதந்தரம் மட்டும் 'கோர்ட் ஆவ் டைரெக்டர்களுக்கு' விடப்பட்டிருந்தது. கவர்னர்-ஜெனரல் கவர்னர் முதல் எல்லா 'ஸிவில்' 'மிலிடெரி' உத்தியோகங்களுக்கும் நியமனம் செய்யும் அதிகாரம் 'போர்ட் ஆவ் கன்ட்ரோல்' அங்கீகாரத்துக்குமட்டும் உள்பட்டதாய் 'கோர்ட் ஆவ் டைரெக்டர்களாலே' செலுத்தப்பட்டு வந்தது. வியாபாரம் செய்து ஏராளமான லாபம் கட்டி வந்தவர்களுக்குக் கடைசியில் இந்த உத்தியோக நியமன அதிகாரத்தைத் தவிர வேறு லாபகரமான வழியில்லாமற் போனதால் இதையே லாபத்துக்கீடாக வெண்ணி, உள்ள நியமனங்களை 'டைரெக்டர்கள்' பங்குபோட்டுப் பிரித்துக் கொண்டு அவரவர்கள் பிள்ளை, மருமகன், மைத்துனன் முதலான உற்றூர் சுற்றத்தார்களுக்கு ஜீவன வழி யேற்படுத்திக்கொடுப்பதே தொழிலாக இருந்தார்கள். இந்த 'டைரெக்டர்' ஸ்தானத்துக்கு நியமனம் பெறுவது சர்க்காராலன்றி, ஈஸ்திந்தியா வியாபார கம்பனியில் மூலதனம் வைத்த பங்குச் சீட்டு வாங்கினவர்கள் கொடுக்கும் 'வோட்டு'களினால் இந்த டைரெக்டர்ஸ்தானம் கிடைப்பதாக விருந்ததால், அவர்களைப் பதப்படுத்திக்கைக்குட் போட்டுக்கொண்டு டைரெக்டராக வருவதற்காக ஒவ்வொருவர்

செய்த யத்தனங்களும் விடாமுயற்சிகளும் இவ்வளவவ்வளவல்ல. பலதடவை தோல்வி யடைந்தும் சலியாமுயற்சியோடு அந்தஸ்தா னம் கிடைக்க யத்தனப்பட்டவர்களுக்குக் கடைசியில் அது கிடைத்துவிட்டால் உடனே இந்தியாவுக்குச் செய்யவேண்டிய நியமனங்க ளில் அவருக்குள்ள பங்குவீதம் கிடைத்துப் போம். அப்புறம் தங்கள் உற்ருர் உறவுமுறை யார், அண்டினுர் அடுத்தார் இவர்களுக்கு உத் தியோகம் தேடிக்கொடுப்பதைத் தவிர அவர் களுக்கு வேறு வேலையில்லை. மிகவும் நெருங் கிய பந்துவாயிருந்தால் ஸிவில் ஸெர்விஸில் வேலைகொடுத்து இந்தியாவிற்கு ஸிவிலியனுத் தியோகஸ்தர்களைப் பழக்குவதற்காக ஏற்பட்ட ‘ஹெய்லிபரி காலேஜுக்கு’ அனுப்பிவைப்ப தும், தூரத்துப் பந்துவாயிருந்து அவ்வளவு பாத்தியதை யில்லாதவர்களாயிருந்தால் அவர வர்களை இராணுவ உத்தியோகத்துக் கனுப்ப உத்தேசித்து அதற்காக ‘அடிஸ்கோம்பி’ லுள்ள இராணுவப்பயிற்சிப் பாடசாலைக் கனுப்புவதும் வழக்கமாயிருந்தது. சமீப பந்துவாயிருந்து ஸி விலியனுத்தியோகத்துக்கனுப்பப்பட்ட வாலிபர் அதற்காகவுள்ள சொற்ப பரீக்ஷையிலும் தேறத் திராணியற்றவராயிருந்தால் அவர்களுக்குக் கு திரைப்பட்டாளத்தில் தகுந்த வேலை செய்து

கொடுத்துவிடுகிறது வழக்கம். ஸிவில் ஸெர்விஸ் உத்தியோகங்களுக்குப் பின் குதிரைப் பட்டாளத்திலுள்ள உத்தியோகத்துக்கு நல்ல சம்பளம். அதற்கும் அடுத்த படியிலிருப்பது பதாதிப் பட்டாளத்துக்கு நேரில் நியமனம் செய்தனுப்புவது. மிக வேண்டியவர்களாகவின்றி அண்டினோர் அடுத்தார் இவர்களைப் போன்றவர்களை அடிஸ்கோம்ப் இராணுவப் பயிற்சிச்சாலைக்கு அனுப்புவது வழக்கம். அதில் தேறினவர்கள்தான் பீரங்கிப் பட்டாளத்துக்கும், இராணுவ இஞ்சினீர் வேலைக்கும் நியமிக்கப்படுவது. இந்த உத்தியோகங்களுக்குச் சம்பளம் மட்டாகவிருப்பதன்றி இவற்றில் 'ப்ரொமோஷன்' அல்லது உத்தியோகவிர்த்தி கிடைப்பதும் வெகு தாமதமாகக் கிடைக்கும். 'சிவில்' 'மிலிடெரி' உத்தியோகங்களுக்கு நியமனம் செய்வதற்கு யோக்யதாயோக்யதை யொன்றுமில்லை. 'டைரெக்டருக்கு' வேண்டியவர்களாயிருந்து அவர்களால் பலமாகச் சிபார்சுசெய்யப்பட்டால் அதுதான் எல்லா யோக்கியதையும் பொருந்தினாற்போலாம். இராணுவத்துக்கு நியமிக்கப்படுகிறவர் வைத்தியர்களால் திடகாத்திரமுடையவர்களாவென்றுகூடப் பரீக்ஷித்துப் பார்க்கப்படுவதில்லையாம். 'கோர்ட் ஆவ் டைரெக்டர்கள்' உத்தியோக நியமனம் செய்து

வந்த வைபவத்தில் அவர்களுக்குள் இராணுவ காரியதரிசியாயிருந்தவர் லண்டனைவிட்டு வெளியேறாதவரும் சண்டைமுகத்தைக் கண்ணால் கண்டறியாதவருமான ஒரு பிரதம குமஸ்தாவாம். இப்படியே மற்றவைகளுமிருக்கும். வீணாய்ச்சொல்லி வளர்த்துவானேன். இந்த'போர்ட் ஆவ் டைரெக்டர்களுக்கு' இந்தியா துரைத்தனத்தை மேற்பார்வை செய்துவர எவ்வித லாயக்குமில்லை. அவர்கள் வியாபாரம் போனதோடு அவர்களையும் வீட்டுக்கனுப்பியிருப்பதே சரியாயிருக்கும். ஆனால் அவர்கள் வியாபாரத் துறையில் துணிந்து செய்த பெருமுயற்சிகளாலே ஆங்கிலேயருக்கு இந்தியாவில் நாடுநகரங்களும் இராஜ்ஜியங்களும் கிடைத்தபடியால், அதன்பலனை அவர்களனுபவிக்கட்டுமென்று மேலதிகாரஞ் செய்வதை மேலுக்கு மட்டும் அவர்களதாகச்செய்து உண்மையில் எல்லாவற்றையும் 'போர்ட் ஆவ் கன்ட்ரோல்' என்கிற வெளிவேஷப் பேரைவைத்து மந்திராலோசனைச் சபையைச்சேர்ந்த ஒரு மந்திரிவசமாக ஒப்புவித்துவிட்டு, இந்தியாவிலுள்ள உத்தியோகங்களுக்கு நியமனம் செய்யும் லாபகரமான அதிகாரத்தைமட்டும் அவர்கள் வசம் விட்டுவந்தார்கள். இப்படிச் சுமார் 75- வருஷம் நடந்துவந்தது. பின்னும் நடந்துவந்திருக்

கலாம். 'தன் வினை தன்னைச் சுடும்' என்றபடி அவர்கள் செய்துவந்த அக்கிரமங்கள் அவர்களுக்கே தீங்குவிளைக்க 1857-ம் வருஷத்தில் பெருங்கலகமுண்டாகி அவர்கள் அடியோடு அழிந்துபோகும்படிச்செய்துவிட்டது. 1858-ம் வருஷத்தில் இவர்களை ஒழித்துவிட்டுச் செய்த ஏற்பாடுதான் அதிசொற்ப மாறுபாட்டோடு இன்றுவரையில் நடந்துவருகிறது. இப்பொழுது சீமையிலிருந்து இந்தியாவை ஆண்டுவருவதற்காகவுள்ள ஏற்பாட்டை இதன் முதலில் சுருக்கமாகக் குறிப்பிட்டுச்சொன்னோம். இந்த ஏற்பாடு 1858-ம் வருஷத்தில் அமுலுக்கு வந்தது முதல் இதுவரையிலுள்ள அதன் வரலாற்றை இனி எடுத்துரைப்போம்.



## 2. இந்தியா கௌன்ஸிலின் அமைப்பும், அவர்கள் வேலைசெய்யும் முறையும்.



1857-ம் வருஷத்தில் நடந்த பெரிய கலகத்துக்குப்பின் இந்தியா துரைத்தனம் ஈஸ்திந்தியா கம்பனியார் வசத்திலிருந்து மஹாராணியார் வசமாக மாறியதென்று முன்னமே சொன்னோம். அந்த வருஷத்தில் அதற்காக ஏற்படுத்தப்பட்ட பார்லிமெந்துச் சட்டத்தினுல் 'போர்ட் ஆவ்

கன்ட்ரோல்' என்னும் மேல்விசாரணைச் சங்கம் எடுக்கப்பட்டு, இந்தியாதுரைத்தன மேற்பார்வை, அதற்காகவென்று ஏற்படுத்தப்பட்ட ஒரு 'ஸ்டேட்செக்ரிடெரி' அதாவது இராஜாங்க காரியதரிசி வசமாக ஒப்புவிக்கப்பட்டு அவருக்கு ஒத்தாசையாக ஒரு கௌன்ஸிலும் ஏற்படுத்தப்பட்டது. இந்தக் கௌன்ஸில் ஏற்பாட்டு விஷயமாகப் பார்லிமெந்து சபையில் நீடித்த தர்க்கம் நடந்தது. கடைசியில் அக்கௌன்ஸில் 15 - மெம்பர்கள் கொண்டதாகவிருக்கவேண்டுமென்றும், அதில் 8-பேர்கள் 'கோர்ட் ஆவ் டைரெக்டர்களால்' அதைச்சேர்ந்த மெம்பர்களிலிருந்து தெரிந்தெடுத்து நியமிக்கப்பட வேண்டுமென்றும், பாக்கி 7-பேர்கள் மாக்ஷிமைதங்கிய மஹாராணியார் அவர்களால் நியமிக்கப்படவேண்டுமென்றும் தீர்மானித்தார்கள். இப்படி ஏற்பட்ட கௌன்ஸிலில் காலியாகும் ஸ்தானங்கள் முதல் சொன்ன 8 மெம்பர்கள் ஸ்தானத்தைச்சேர்ந்ததாயிருந்தால் அவை அந்தக்கௌன்ஸில் மெம்பர்களாலே 'எலெக்ஷன்' மூலமாகத் தெரிந்தெடுத்து நிரப்பப்படுமென்றும், மாக்ஷிமைதங்கிய மஹாராணியாரால் நியமிக்கப்பட்ட 7-மெம்பர்கள் ஸ்தானத்தில்காலிவந்தால்அது மஹாராணியவர்களால் தெரிந்தெடுத்து நியமிக்கப்படுகிறவரைக்கொண்டு நிரப்பப்படுமென்றும் ஏற்பாடு

செய்யப்பட்டது. அக்கௌன்ஸில் மெம்பர்களில் பெரும்பாலார் இந்தியாவைவிட்டு வந்து 10-வருஷத்துக்கு மேலாகாதவர்களாக இருக்க வேண்டும். கௌன்ஸில் மெம்பர்கள் அவ்வுத்தியோகத்தை வகித்துவரக் காலநிர்ணயம் இல்லை; அவர்கள் சரியாக நடந்துகொள்கிறவரையில் அவ்வுத்தியோகத்திலிருந்து வரலாம். பார்லிமெந்து 'காமன்ஸ்' சபையார், 'லாரட்ஸ்' சபையார் ஆகிய இருசபையாரும்சேர்ந்து விண்ணப்பம் செய்துகொண்டால் மட்டுமே அவர்களை வேலையினின்று நீக்கலாம். இவ்விரண்டு காரணங்களைத் தவிர மற்றப்படி அவர்களை நீக்க வழியில்லை: ஒருதரம் மெம்பர் ஸ்தானத்துக்கு நியமிக்கப்பட்டால் ஆயுள்பரியந்தத்துக்கு அந்த வேலையிலிருக்கலாம். துரைத்தன காரியங்கள் இந்தியாமந்திரியும் கௌன்ஸில் மெம்பர்களும் ஒன்றுகூடி நடத்தவேண்டும். இந்தியாவுக்கு அனுப்பும் உத்தரவுகள் கடிதங்களெல்லாம் இந்தியா மேற்பார்வைக்காக நியமிக்கப்பட்ட இராஜாங்க காரியதரிசியவர்களால் கையெழுத்துச்செய்து அனுப்பப்படவேண்டும். 'இந்தியா செக்ரிடெரி' அல்லது இந்தியாமந்திரி இப்படி அவருடைய ஆலோசனைச் சபையோடு கலந்து யோசித்துச் சபையில் பெரும்பான்மையருடைய அபிப்பிராயத்தை அனுசரித்து நடந்து

கொள்ளவேண்டுமென்று ஏற்பட்டிருந்தாலும் அவருக்கு யுக்தமாய்த் தோன்றும் பொழுது அவர் அவர்களபிப்பிராயத்தை மீறி நடந்து கொள்ளலாம். அப்படி நடந்துகொள்ளும்பொழுது அவர் அதற்காகவுள்ள காரணத்தைமட்டும் முறைப்படி எழுத்து மூலமாய்த் தாக்கல் செய்து வைக்கவேண்டும்; அப்பொழுதுள்ள கௌன்ஸில் மெம்பர்களும் இஷ்டமானால் தங்கள் அபிப்பிராயத்தை எழுத்து மூலமாய்த்தாக்கல்செய்து வைக்கலாம். 'கோர்ட் ஆப் டைரக்டர்கள்' காலத்திலிருந்த 'இரகசிய கமிட்டி' ஏற்பாடும் வைத்துக் கொள்ளப்பட்டது. ஆனால் இப்புதிய ஏற்பாட்டில் 'இரகசிய கமிட்டியார் அதிகாரங்களெல்லாம் 'இந்தியா செக்ரிடெரி' ஒருவர்வசமாக ஒப்புவிக்கப்பட்டது. இந்தியாவுக்கு இரகசியமாக ஏதாவது உத்தரவுகள் அனுப்பவேண்டியிருந்தால் அவைகளை இந்தியா மந்திரியானவர் தம்முடைய கௌன்ஸில் மெம்பர்கள் யாருக்கும் தெரியாமல் தாமே அனுப்பவும், அப்படியே இந்தியாவிலிருந்து வரும் இரகசியக் கடிதங்களைத் தாமே உடைத்துப்பார்த்துக் கௌன்ஸில் மெம்பர்களுக்குத் தெரியாமல் வைத்துக்கொள்ளவும் அவருக்குப் பூரண அதிகாரம் கொடுக்கப்பட்டது. இவைகளோடுகூட அந்தச் சட்டத்தில் முக்கியமாய்

இன்னொரு நிபந்தனையும் கண்டிருந்தது. அஃது என்னவெனில் இந்தியா மந்திரியினுடைய கௌன்ஸில் மெம்பர்களில் பெரும்பான்மையருடைய அனுமதியின்றி இந்தியா அரசிறை வருமானத்திலிருந்து யாதொரு தொகையும் செலவிடப்படக் கூடாதென்பதேயாம். இது மிக முக்கியமான நிபந்தனை. இதனுற் கொடுக்கப்பட்ட அதிகாரத்தைமட்டும் இந்தியா கௌன்ஸில் மெம்பர்கள் இந்தியாவுக்கு அனுகூலமாகச் செலுத்தி வரவேண்டும்.

1858 - ம் வருஷத்துப் பார்லிமெந்துச் சட்டத்திற் கண்ட மேலேகாட்டிய நிபந்தனைகள் இன்னும் ஊர்ஜிதத்திலிருந்து வருகின்றன. ஆனல் கௌன்ஸிலின் அமைப்பு விஷயத்தில் மட்டும் பிந்திச் சிலமாறுபாடுகள் செய்யப்பட்டன. 1869-ம் வருஷத்தில் 1858-ம் வருஷத்துச் சட்டத்தைச் சீர்திருத்துவதற்காக ஒரு சட்டம் செய்யப்பட்டது. அந்தச் சட்டத்தினுல் செய்யப்பட்ட சீர்திருத்தங்களாவன: — (1) கௌன்ஸில் மெம்பர் ஸ்தானங்களில் ஒரு பகுதிக்கு அக்கௌன்ஸில் மெம்பர்களே 'எலெக்ஷன்' மூலமாய்த் தெரிந்தெடுத்து நியமித்து வந்த வழக்கம் நிறுத்தப்பட்டு, இனி மெம்பர்களை யெல்லாம் மஹாராணியாருக்குப்பதிலாக இந்தியா மந்திரியே நியமிக்கவேண்டு

மென்று ஏற்பாடுசெய்யப்பட்டது. (2) கௌன்ஸில் மெம்பர்கள் முன்போலக் கால நிர்ணயமின்றி நியமிக்கப்படாமற், பத்து வருஷகாலத்துக்கு மட்டும் உத்தியோகத்தை வகிக்கலாமென்றும், அக்கால தவணைக்குப் பிறகு அவர்கள் மறுநியமனம் செய்யப்பட அருகராகார்களென்றும் செய்யப்பட்டது. அப்படி யாரையாவது மறுநியமனம் செய்யவேண்டி யிருந்தால் அதற்காகவுள்ள காரணங்களை யெடுத்துக்கூறி இந்தியாமந்திரி ஒரு குறிப்பு எழுதிப் பார்லிமெந்து 'காமன்ஸ்' சபை, 'லார்ட்ஸ்' சபை ஆகிய இருசபையார்கள்முன்னும் வைக்கவேண்டுமென்று நிர்ணயிக்கப்பட்டது. (3) இந்தச் சட்டம்செய்வதற்கு முன் நியமிக்கப்பட்ட கௌன்ஸில் மெம்பர்கள் 10 - வருஷகாலம் அந்த ஸ்தானத்திலிருந்தபிறகு அவர்கள் பென்ஷனுக்கு உரியவர்களாவார்களென்று ஒரு நிபந்தனை ஏற்படுத்தப்பட்டது. இது இச்சட்டம் ஏற்பாடாகுமுன் நியமிக்கப்பட்டவர்கள் வேலையைவிட்டு நீங்கிப் போவதற்குத் தூண்டுதலாக ஏற்படுத்தப் பட்டதாகப் பார்லிமெந்து சபையில் இந்நிபந்தனை ஏற்படுத்தியதற்குக் காரணம் சொல்லப்பட்டது. அவர்களை நீக்க வேறு நியாயமான வழியில்லையாதலால் பென்ஷன்கொடுத்தால் அவர்கள் நீங்கிப்போவார்க

ளென்றும், அப்பொழுது அவர்களுடைய ஸ்தானத்தில் இந்தியா விஷயங்களைப்பற்றி அனுபவம் பெற்றுச் சமீபகாலத்தில் அங்கிருந்து வந்தவர்களை நியமிக்கலாமென்றும் உத்தேசித்தார்கள்.

1876-ம் வருஷத்தில் 1858-ம் வருஷத்துச் சட்டத்தைப் பின்னும் சீர்திருத்துவதற்காக ஒரு 'ஆக்டு' பார்லிமெந்து சபையாராற் சட்டமாகச் செய்யப்பட்டது. இச்சட்டத்தினாற் செய்யப்பட்ட சீர்திருத்தம் என்னவெனில் :— இந்தியா மந்திரியவர்கள் கௌன்ஸிலுக்கு மூன்றே மூன்றுபேர்களைமட்டும் ஆயுள் பரியந்தத்துக்கு மெம்பர்களாக நியமித்து ஒரு குறித்தகாலத்துக்குமேல் அவர்களுக்குப் பென்ஷன் கொடுக்கிறதாகச் சொல்லி நியமிக்கலாம்; இவர்கள் சாதாரணமாய் மெம்பர்கள் நியமன விஷயமாயுள்ள 10 - வருஷ காலதவணை விதிக்குள்ளாகார்கள். இப்படிப்பட்ட நியமனங்கள் செய்யுமுன், அதற்காகவுள்ள நியாயங்களை யெடுத்து இந்தியாமந்திரியவர்கள் ஒரு குறிப்பாக எழுதிப் 'பார்லிமெந்து' சபையார் முன் வைக்கவேண்டும். இப்படிப்பட்ட நியமனம்செய்ய அதிகாரம் கொடுத்தது என்னத்திற்காகவென்றால், இந்தியா கௌன்ஸிலுக்கு நல்ல அனுபவமுதிர்ந்த 'லாயர்களை' நியமிக்க இடங்கொடுக்

கும்படியென்று இச்சட்டத்தைப் பார்லிமெந்து சபைமுன் ஆலோசனைக்குக் கொண்டுவந்தவர்கள் அப்பொழுது விவரஞ்சொன்னார்கள். அரசிறை விஷயங்களிலும் 'பாங்கி' விசாரணைவிஷயங்களிலும் ஆங்கிலேய நாட்டில் அனுபவமுதிர்ந்த விற்பன்னர்களைக் கௌன்ஸில்மெம்பர்களாக நியமிக்கவும் இந்நிபந்தனை ஏற்கத்தக்கதாகக் கொள்ளப்பட்டிருக்கிறது.

1889-ம் வருஷத்தில் செய்த ஒரு பார்லிமெந்துச் சட்டத்தினால் கௌன்ஸில் மெம்பர்கள் தொகை 15-ஆக இருப்பதை, போகப்போக சமயங்கள் நேர்வதை அனுசரித்து 10-ஆகக் குறைத்துவிட நிபந்தனை ஏற்பட்டிருக்கிறது. இந்நிபந்தனைப்படி இப்பொழுது கௌன்ஸில் மெம்பர்களின் தொகை 12 க்கு வந்திருக்கிறது. இது பின்னால் 10-ஆகக் குறைக்கப்படும்.

இதுவரையில் 1858-ம் வருஷத்துப் பார்லிமெந்துச் சட்டம் ஏற்பட்டது முதல் கௌன்ஸிலின் அமைப்பு விஷயமாக அப்போதப்போது செய்யப்பட்ட மாறுபாடுகளையும் அம்மாறுபாடுகளை உண்டுபண்ணின சட்டங்கள் ஏற்பட்ட காலங்களையும் பற்றிக் குறிப்பாய்ச் சொன்னோம். இனி இவ்வேற்பாட்டுப்படி அமைந்த இந்தியா மந்திரியும் அவருடைய ஆலோசனை

சபையாரும் அமுல் செலுத்திவரும் முறையைப்பற்றி விளங்க எழுதுவோம்.

1858-ம் வருஷத்துச் சட்டத்தினாலுண்டான மாறுபாடு மேனோக்கில் பேர் வித்தியாசமன்றி வேறொன்றுமில்லையென்று தோன்றும். அதற்குமுன் 'போர்ட்ஆவ் கன்ட்ரோலின் ப்ரெஸிடெண்ட்' என்று பேர் வைத்துக்கொண்டு மஹாராணியாரின் மந்திராலோசனைச் சபை மெம்பர்களில் ஒருவர் மேற்பார்வை நடத்திவந்தார். அவருக்குப் பதிலாக 'இந்தியா மந்திரி' யென்று பேரிட்டு ஒருவரை நியமித்துப்பழைய 'கோர்ட் ஆவ் டைரெக்டர்'களுக்குப் பதிலாக 'இந்தியா கௌன்ஸில்' ஏற்படுத்தினார்களென்று சொல்லலாம். ஆம், மேலுக்கு விசேஷ மாறுதலொன்றும் இல்லைப்போலத் தோன்றினாலும் உண்மையில் அதிகாரஞ்செலுத்துமுறையை ஆராய்ந்து பார்த்தால் இரண்டுக்குமுள்ள வித்தியாசம் வெளியாகும். இந்தியா மந்திரிக்குள்ள மேற்பார்வை அதிகாரம் அவ்வளவும் பழைய 'போர்ட் ப்ரெஸிடெண்டுக்கு' இருந்தாலும், பழைய ஏற்பாட்டுப்படி விஷயங்களெல்லாம் 'கோர்ட் ஆவ் டைரெக்டர்க'ளாலேயே பிரேரேபிக்கப்படவேண்டும். பொது விஷயங்களை நடத்துவதில் யாரிடத்தில் விஷயங்களை ஆரம்பித்துப் பிரேரேபனை செய்யும்

அதிகாரமிருக்கிறதோ அவருக்கே எப்போதும் செல்வாக்கு அதிகமாகும். 'போர்ட் ப்ரெஸி டெண்டுக்கு' 'கோர்ட் ஆவ் டைரெக்டர்கள்' உத்தரவை முற்றும் மாற்றி வேறு உத்தரவு பிறப்பிக்கப் பூரண அதிகாரமிருந்தாலும், அதைச் செலுத்துவது காரியத்திற் கஷ்டம். டைரெக்டர்கள் ஒரு உத்தரவனுப்ப, அதை மாற்றி வேறு உத்தரவுபிறப்பிக்கவேண்டுமென்றால் அது சம்பந்தமான விஷயங்களை யெல்லாம் ஆராய்ந்து தெரிந்துகொண்டு சரியானபடி உத்தரவு எழுதவேண்டும். இது இலகுவான வேலையல்ல; அதிக அவகாசம்வேண்டும்; 'ப்ரெஸிடெண்டு' மிகவுமுழைப்பாளியாக இருக்க வேண்டும். இருந்தாலும், மற்றவேலைகளையும் கவனிக்கவேண்டியவராகிய மந்திராலோசனைச்சபை மெம்பர் ஒருவர், அதே வேலையாகவிருக்கும் 'கோர்ட் ஆவ் டைரெக்டர்களை'ப் போல விவரங்களையெல்லாம் தெரிந்துகொண்டு நூதனமாக ஒரு உத்தரவு பிறப்பிப்பது மிகவும் கஷ்ட சாத்தியமே. ஒவ்வொரு விஷயங்களிலும் அப்படியிருப்பது அசாத்தியம். ஆகையாற் சட்டப்படி அவருக்கு என்ன அதிகாரமிருந்தபோதிலும் காரியத்தில் விஷயங்களை முதலில் ஆராய்ந்து அவைகளைப் பைசல் செய்யும் வகையின்னதென்று காட்டும் கட

மை யாரைப்பொறுத்ததோ அவருக்கே மொத்தத்தில் செல்வாக்கதிகமாகும். பழைய ஏற்பாட்டுப்படி 'போர்டு ப்ரெஸிடெண்டாக' இருப்பவர் 'கோர்ட் ஆவ் டைரெக்டர்கள்' உத்தரவைமாற்றப் பூரண அதிகாரமுடையவராயினும் அப்படி அவர்செய்யும்மாறுதல்கள் இரகசியத்தில் செய்யப்பட வேண்டியிருந்ததால் அதனால்வரும் கீர்த்தி அவருக்குக் கிடைப்பதில்லை. 'கோர்ட் ஆவ் டைரெக்டர்க'ளுடைய நடபடிக்கைகள் ஒவ்வொன்றும் 'போர்ட்ப்ரெஸிடெண்ட்' மூலமாகக் கவர்ன்மெண்டாருடைய மேற்பார்வைக்குட்பட்டதாக இருந்ததால் அவற்றால் விளையும் பயனுக்கு உத்தரவாதிகாளயிருக்கும் பொறுப்பு அவர்களைவிட்டு நீங்கிப்போய்விட்டது. ஆகையால் இருதாரத்தாருக்கும் நடக்கும் விஷயங்களில் நேரான பொறுப்பு ஏற்படாமற்போய்விட்டது. இதனால் விளைந்த தீங்குகளைச் சொல்லிமுடியாது. இப்படி எவ்விதத்திலும் அதிர்ப்தியாயிருந்த ஏற்பாட்டை ஒழித்து இந்தியா மந்திரியை எல்லாவற்றிற்கும் பொறுப்பாளியாக நியமித்து அவருக்கு உதவியாக ஒரு கௌன்ஸிலை நியமித்தது மிகவும் நல்ல ஏற்பாடே. கௌன்ஸில் மெம்பர்கள் நியமனத்திலும் பழைய ஏற்பாட்டைவிடப் புதிய ஏற்

பாடு மேலானதே. ' இந்தியா மந்திரி ' யென்று தான் ஒருவர் பொறுப்புள்ள மந்திரி யேற்பட்டிருக்கிறூரே, அவருக்கு கௌன்ஸில் ஒன்று என்னத்திற்கு என்று கேட்கலாம். மற்றமந்திரிகளுக்கெல்லாம் இப்படிப்பட்ட கௌன்ஸில் இல்லாமையால் இக்கேள்வி மிகவும் நியாயமான கேள்வியாகத் தோன்றும். ஆங்கிலேய இராஜாங்க முறைப்படி பார்லிமெந்து சபையில் வலுத்த கக்ஷியார் யாரோ அக்கக்ஷியின் தலைவர்கள் மஹாராணி மந்திரிகளாகவிருந்து துரைத்தனத்தை நடத்துவதும், அவர்கள் கக்ஷி பார்லிமெந்து சபையில் பலவீனப்பட்டு ஏதானுமொரு முக்கிய விஷயத்தில் அவர்கள் தோல்வியடைந்து போனூல் உடனே அக்கக்ஷியார் தங்கள் உத்தியோகங்களை இராஜிநாமா கொடுத்து வேலையைவிட்டு நீங்கிப்போக எதிர்க் கக்ஷித்தலைவர் மந்திரிகளாக உத்தியோகம் வகித்து துரைத்தன காரியங்களை நடத்துவதும் வழக்கம். இவ்வேற்பாட்டினூல் துரைத்தனம் நடத்தும் மந்திரிகள் அடிக்கடி மாறுபட்டு வருவார்கள். அன்றி எந்தக் கவர்ன்மெண்டு எவ்வளவுகாலம் நிலைத்திருக்குமோ சொல்வதிற்கில்லை. இப்படி அநித்தியமானதும்அடிக்கடி மாறுபடுவதுமாயிருக்கும் கவர்ன்மெண்டேற்பாட்டில் இந்தியாவின் காரி

யங்களை மேற்பார்வை செய்துவர நியமிக்கப்படும் இந்தியா மந்திரிக்கு இந்தியாவைப்பற்றி யொன்றும் தெரியாமலிருப்பது சகஜமாதலால், அவருக்கு எல்லா விஷயங்களிலும் ஆலோசனை சொல்ல இந்தியாவில் அனுபவம் பெற்றுச் சீமைக்குத் திரும்பிய உத்தியோகஸ்தர்களை அவருடைய கௌன்ஸில் மெம்பர்களாக நியமிக்க வேண்டிய தவசியமாயிற்று. முதலில் இது எவ்வளவு அவசியமாகவிருந்தாலும், அக்கௌன்ஸிலுக்கு நியமிக்கப்படுவோருக்குள்ள இந்தியாவின் அனுபவம் சுமார் 20-வருஷங்களுக்கு முன்னிட்டதா யிருக்கிறபடியாலும், அவர்கள் வயோதிக பருவமடைந்து ஊக்கமழிந்தவர்களாயிருப்பதால் இந்தியாவின் தற்கால நிலைமையை உள்ளபடி அறியக்கூடாதவர்களாகவிருப்பதாலும், அவர்களால் எவ்வளவு நன்மை விளையக்கூடுமென்று எதிர்பார்க்கப்பட்டதோ அவ்வளவும் சித்திக்காமற் போய்விட்டது. இவர்களோடு நேரில் கலந்து பழகச் சமயம் வாய்த்தவர்களே இவர்கள் வயோதிக தசையடைந்த உபயோகமற்ற மெம்பர்கள் என்று சொல்கிறார்கள். இப்பொழுது கௌன்சில் மெம்பர்கள் வேலைபார்த்துவருவதற்காக ஊர்ஜிதத்திலிருக்கும் ஏற்பாட்டுப்படி, இந்தியா மந்திரிமுன் வரும் விஷயங்கள்

6-'டிபார்ட்டுமெண்டுகள்' அல்லது இலாகாக்க ளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அவை:— (1) ஜுடீஷியல், (நீதி) (2) பிஞன்ஷியல் (அரசிறை), (3) மிலிடெரி (இராணுவம்), (4) ரெவினியூ (வருமானம்), (5) பொலிடிகல் (இராஜதந்திரம்), (6) மாாமத்து ஆகிய இவைகளாம். பொலிடிகல் டிபார்ட்மெண்டில் இரகசிய விஷயங்களும் பைசல் செய்யப்படுகின்றன. ஆனல் இவை அந்த இலாகாவைச்சேர்ந்த கௌன்ஸில்மெம்பர்களுக்காவது மற்றவர்களுக்காவது தெரியாமல், இந்தியாமந்திரியால் நேரே அதற்காகவுள்ள சிப்பந்திகளுதவியைக்கொண்டு பைசல்செய்யப் படுகின்றன. இந்த 6-இலாகாக்களிலும் வரும் விஷயங்களை மேற்பார்வை செய்துவர, 'கமிட்டிக்கு' இரண்டு கௌன்ஸில் மெம்பர்களாக 6- 'கமிட்டிகள்' ஏற்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு கௌன்ஸில் மெம்பரும், இவற்றில், இரண்டு டிபார்ட்மெண்டுகளைச்சேர்ந்த கமிட்டிகளில் தனித்தனி அங்கத்தவர்களா யிருக்கிறார்கள். ஏதானுமொரு இலாகாவில் ஒரு விஷயம் பைசல்செய்யப்படவேண்டிவந்தால் அந்த இலாகா நிரந்தர சிப்பந்திகளைச் சேர்ந்த காரியதரிசி அது சம்பந்தமான விஷயங்களையெல்லாம் ஆராய்ந்து அதன் மேல் ஒரு மசோதா உத்தரவு எழுதி அதை மற்ற தஸ்தவேஜுகளோடு இந்தியா மந்திரிய

வர்களுடைய அங்கீகாரத்துக்கு அனுப்புவார். அவர் அதைப் பார்த்துத் திருத்தவேண்டியதைத் திருத்தி மாற்றவேண்டியதை மாற்றி அங்கீகரித்தபின் அந்த உத்தரவு அந்த இலாகா சம்பந்தமாய் ஏற்பட்டிருக்கும் கமிட்டிமெம்பர்களாகிய இருவர்க்கும் அனுப்பப்படும். அவர்கள் அங்கீகாரம் செய்தபின் அவ்வுத்தரவு மற்ற கௌன்ஸில்மெம்பர்கள் பார்வைக்குத் தயாராகி கடைசியில் ஒரு நாள் கௌன்ஸில் மெம்பர்களெல்லாரும் கூடிய கூட்டத்தில் கொண்டுவந்து யாதொரு மாறுதலுமின்றி அப்படியே அங்கீகாரம் செய்துகொள்ளப்படுகிறது. இந்த ஏற்பாட்டுப்படி கௌன்ஸில் மெம்பர்களைவிட இலாகாக் காரியதரிசிகளுக்குச் செல்வாக்கு ஜாஸ்தியாக விருக்கிறது. எப்படியெனில், முதலில் இலாகாக் காரியதரிசி தயார் செய்யும் மசோதா உத்தரவு இந்தியா மந்திரியவர்களால் அங்கீகரிக்கப்பட்டபின் கமிட்டி மெம்பர்கள்முன் வரும்பொழுது அவர்கள் ஏதாவது சொற்ப மாறுபாடுகள் செய்யவேண்டியிருந்தால் செய்துவிடுகிறார்கள். அப்படியின்றி வேறுவிதமாக உத்தரவு பிறப்பிக்கவேண்டுமென்று அவர்களுக்குத் தோன்றினால் அவர்கள் தங்களுக்குத் தோன்றியபடி உத்தரவு எழுதும் வேலையைத் தாங்களேதான் செய்

யவேண்டும். ஏனென்றால் இலாகாக் காரியத ரிசி கமிட்டி மீட்டிங்கில் ஆஜராயிருந்தாலும் அவர் கமிட்டியின் காரியதரிசியல்ல. கமிட்டி மெம்பர்களோ வேலைசெய்து அலுத்துச் சலித்த வயோதிகர்கள். இவர்கள் தொடுபிடியாய் ஒரு விஷயத்தைத் தொட்டு நின்று சாதிப்பது எப்படி? அதற்கு வேண்டிய ஊக்கமும் முயற்சியும் பெரும்பாலும் இவர்களிடத்திலிருய் பதரிதான காரணத்தால் அனேகமாய் எல்லா விஷயங்களையும் இலாகாக் காரியதரிசிபோன வழியிலே விட்டுவிட வேண்டியதாக வருகிறது. இத்யாதி காரணங்களால் இக்கௌன்ஸில் மெம்பர்கள் அனேகமாய் அலங்கார புருஷர்களாயிருக்கிறார்களே யன்றி இவர்களால் விசேஷமாய் ஒரு வேலையுமாகிறதில்லையென்று இந்தியா கவர்ன்மெண்டைச் சேர்ந்தவர்களாயிருந்து நீங்கினவர்களே சொல்லுகிறார்கள். இந்தியா ஜனங்களும் இக்கௌன்ஸிலால் உபயோகமில்லையென்றும், இதை வேரோடு களைந்துவிடுவதே நலமென்றும் முறையிடுகிறார்கள். உத்தியோகத்திலிருப்பவர்கள் இந்தக் கௌன்ஸில் இப்பொழுதுள்ளபடி வேலை செய்துவருவதால் பயனில்லையென்றும், இக்கௌஸின்ல் ஏற்பாட்டை இந்தியா கவர்னர்-ஜெனரல் கௌன்ஸிலைப் போலச் செய்து பயன்படும்படியாகச் சீர்திருத்

தவேண்டுமென்றும் சொல்லுகிறார்கள். இப்படியாகத் தற்காலம் இந்தியா கௌன்ஸில் வேலைசெய்துவருவது திருப்திகரமாகவில்லையென்றும், அதைச் சீர்திருத்தவேண்டியது அவசியமென்றும் யாவராலும் ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது. அதைச் சீர்திருத்தும் வகை இன்னதென்றுயோசிக்க இது இடமன்று. இந்தியா துரைத்தனம் இங்கிலாந்திலிருந்து மேற்பார்வைசெய்துவரப்படும் விதத்தை யெடுத்துரைப்பதே இதன்நோக்கமாகக்கொண்டு இவ்விஷயத்தைப்பற்றி எழுதத்துவக்கினதானதால்மற்றது இதன் நோக்கத்துக்கு ஒவ்வாது; அவ்விஷயத்தை உள்ளபடி ஆராய்ச்சி செய்து எழுத இங்கு இடமும் போதாது. ஆகையால் இப்பொழுதுள்ள ஏற்பாட்டைச் சொல்லிக்கொண்டுபோகையிலே அதில் பிரசித்தமாகத் தோன்றும் குற்றங் குறைகளைமட்டும் குறிப்பாகச் சுட்டிக் காட்டிச் சொல்கிறோம். இந்தியா துரைத்தனம் அங்கிலேய மந்திரிகளால் மேற்பார்வை செய்யப்பட்டு வருவதில் முக்கியமாய்க் கவனிக்க வேண்டிய ஒரு விஷயமென்னவெனில், இந்தியா ஜனங்கள் தலையில் அநியாயச்செலவு எதையும் கட்டிவிடாதபடி அவர்களைக் காப்பாற்றவேண்டியதே. 1858-ம் வருஷத்துச் சட்டத்தில் இந்தியா கௌன்ஸில்மெம்பர்களில் பெரும்

பான்மையருடைய அனுமதியின்றி இந்தியா அரசிறை வருமானத்தை ஒருவிதத்திலும் செலவு செய்யக்கூடாதென்று கண்ட நிபந்தனை இதற்காகவே செய்யப்பட்டது. ஆனால் முக்கியமான விஷயங்களில் இந்தியா மந்திரி அவருடைய கௌன்ஸில் மெம்பர்களுடைய தீர்மானத்தை மீறி நடக்கலாமென்றிருப்பதாலும், இரகசிய விஷயங்களை அவர் தாமே கௌன்ஸில் மெம்பர்களுக்குத் தெரியாமல் நடத்தலாமென்றிருப்பதாலும், இந்நிபந்தனை காரியத்தில் பிரயோசனமற்றதாகப் போகிறது. இந்தியா சவர்ன்மெண்டார் ஒரு உத்தியோகஸ்தருக்கு அதிகச் சம்பளம் அல்லது விசேஷ பென்ஷன் கொடுக்கவேண்டுமென்று சிபார்சுசெய்தால் இது இந்தியா கௌன்ஸில்மெம்பர்களுடைய அனுமதியின்றிச் சாயாது. ஆனால் இந்தியா மந்திரியவர்கள் அற்ப சொற்பமாகவின்றி லக்ஷம் கோடிக்கணக்காகச் செலவுபிடிக்கும் இராணுவ ஏற்பாடுகள், சிறிய யுத்தங்கள், படையெடுப்புகள் ஏதாவது தன்மனதுக்குத்தோன்றியபடி அவருடையகௌன்ஸில் மெம்பர்கள் யாருக்கும் ஒன்றும் தெரியாது உத்தரவுசெய்துவிடுகிறார். இதைத்தடுக்கவழியில்லாமற்போகிறது. இது இப்பொழுதுள்ள ஏற்பாட்டிலுள்ள பெருங்குறைகளில் ஒன்று. ஏற்பாட்டிலுள்ள இந்தக் குறை

யோடு இவ்வேற்பாட்டுப்படி மெம்பர்களாக வருகிறவர்களுடைய அசிரத்தை, ஊக்கமின்மை முதலிய காரணங்களும் சேருகிறபோது, இந்தக் கௌன்ஸிலால் யாதொரு பிரயோசனமுமில்லையென்றும், ஆகையால் இக்கௌன்ஸிலையெடுத்துவிட்டு, இவர்களுக்குப்பதிலாக பார்லிமெந்து கமிட்டியொன்று நிரந்தரமாய் ஏற்படுத்துவது நலமென்றும் இந்தியா துரைத்தன விஷயங்களில் சிரத்தையெடுத்துக்கொள்வோரில் உத்தியோகஸ்தரல்லாதார் கக்ஷியைச்சேர்ந்தவர்கள் சொல்லுகிறார்கள். உத்தியோகத்திலிருப்பவர்கள், இந்தியா கௌன்ஸில் மெம்பர்களை ஒவ்வொருவரும் ஒரு இலாகா விஷயங்களைப் பொறுப்புடன் பார்த்து வரும்படி செய்து இந்தியா கவர்ன்மெண்டு ஏற்பாட்டைப்போல் இந்தியா மந்திரியவர்களுடைய கௌன்ஸிலையும் சீர்திருத்தி, அவர்கள் தொகையைக் குறைத்து, அவர்கள் உத்தியோகம் வகிக்கும் காலதவணையை 10-வருஷமென்றில்லாமல் இன்னும் குறைந்ததாக ஏற்படுத்தவேண்டுமென்று சொல்லுகிறார்கள். இவைகளெல்லாம் காரியத்திற்கு வராமல் இன்னும் அவரவர் சொல்லும் அபிப்பிராயமாகவே யிருப்பதால் அவற்றைப் பற்றி இங்கு விஸ்தரிக்க நிமித்தியமில்லை.

முற்றும்.

PRINTED AT THE EMPRESS OF INDIA PRESS, MADRAS—1898.